# சி ல ம் ப ம்

## அடி முறைகளும், வரலாறும்



ஜே. டேவிட் மேனியல் ராஜ், எம். ஏ., எம். பி. இ.,
பேராசிரியர்,
அழகப்பா உடற்கல்விக் கல்லூரி,
காரைக்குடி-4



உரிமைப் பதிவு] 1973 [விலை ரூ. 10

R.R.No 2083/55/79

# சிலம்பம்

## அடி முறைகளும், வரலாறும்



ஜே. டேவிட் மேனியல் ராஜ், எம்.ஏ., எம். பி. இ.,
பேராசிரியர்,
அழகப்பா உடற்கல்விக் கல்லூரி,
காரைக்குடி-4



உரிமைப் பதிவு] 1973 [விலை ரு. 10

# காணிக்கை



(திரு ஏ. ஜி. ஏசுதாஸ், திருமதி லில்லி கிரேஸ் ஏசுதாஸ்)

என்னை ஈன்றோர்க்கும்,

என் மனைவி ஜெஸி பிரிஸ்கில்லாளுக்கும், மகன் ஓவன்ஸ் தானியேலுக்கும், மகள் ஷீலா ஏஞ்சலினுக்கும், என் தம்பி ஜே. செல்லையா மாணிக்கராஜுக்கும்






2-வது உலகத் தமிழ் மாநாடு சென்னையில் நடந்த சமயம், திரு. டேவிட் மேனியல் ராஜ், வீர சிலம்ப விளையாட்டின் வரலாற்றுப்புகழ் உலகசரித்திரத்தில் இடம்பெறும் வண்ணம் 4—1—1968ல் சிலம்ப ஆராய்ச்சிக் கட்டுரையை வாசித்தல்.

# முன்னுரை

"ஒரு மனிதன் சிலம்பம், நீந்துதல் முதலிய நுண்கலைகளைக் கற்றுத் தேருவிடில், அவன் தனது வாழ்க்கையின் ஓர் சிறந்த அம்சத்தை இழந்தவனாவான்'' என்றும், "சிலம்பக் கலையைத் 'தற்காப்புக் கலையாகவும்' நீச்சல் கலையைத் தண்ணீரில் தவிக்கும் ஒருவனின் உயிரைக் காப்பாற்றும் 'துணிச்சல் கலையாகவும்' மாற்றி அமைத்துப் பயன் பல பெறவேண்டும்'' என்றும் சொல்லிய எனது தந்தையின் வாய்மொழி, எனது செவிகளில் ஓயாது ரீங்காரம் செய்துகொண்டிருந்தது. மேற்கூறிய கலைகள் எனது உள்ளத்தை மிகவும் கவர்ந்தன.

சென்னையில், ஒய். எம். சி. ஏ. உடற் கல்விக் கல்லூரியில் நான் பயிலும்போது, சிலம்பக் கலையை முன்னணிக்குக் கொண்டு வர வேண்டுமென்ற ஓர் உணர்ச்சி எனது இரத்தத்தில் ஓடிக் கொண்டிருந்தது.

பின் 1955–ம் ஆண்டு ஜூன் மாதம் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள பண்ணைவிளை ஊரை அடுத்த பண்டாரவிளையில் வசிக்கும் திரு. பொன்னையா பயில்வான் அவர்களிடம் எனது தகப்பனாரின் விருப்பத்திற்கேற்ப சிலம்பக் கலையை சிலகாலம் மட்டும் கற்றேன்.

1966–ம் ஆண்டு திரு. வேதமணி பால்ராஜ் (ஆங்கில விரிவுரையாளர், புனித யோவான் கல்லூரி, பாளையங்கோட்டை) அவர்கள் பாளையங்கோட்டையிலுள்ள திரு. இருதயம் என்ற சிலம்ப வித்துவானிடம் நான் சிலம்பம் கற்கும்படி வழி செய்தார்.

1965–ம் ஆண்டு குவாலியரிலுள்ள லட்சுமிபாய் உடற் கல்விக் கல்லூரியில் எம். பி. இ., பட்டப்படிப்பிற்குச் சென்றபொழுது, தமிழகச் சிலம்பக் கலையின் சிறப்பை உலகிற்குக் கொடுக்கக் கங்கணம்கட்டிக் கொண்டேன். உடனே 1955–ம் ஆண்டு, நான் சிலம்பம் பற்றி எழுதிய குறிப்பேட்டைப் புரட்டிப் பார்த்தேன். ஆசான் திரு. பொன்னையா அவர்களை மீண்டும் அணுகி இக் கலையின் வேறு சில அம்சங்களையும், அடவு முறைகளையும் ஆராயலானேன்.

1967–ம் ஆண்டு ஏப்ரல் மாதம் நான் கற்றுவந்த கல்லூரியின் மூலம் ஜிவாஜி பல்கலைக் கழகத்திற்கு "Silambam: Technique &

Evaluation" என்ற ஆங்கில சிலம்ப ஆராய்ச்சி நூலை (Thesis) சமர்ப்பித்தேன். டாக்டர் சேதுமாதவராவ், என்ற என் கல்லூரி விரிவுரையாளர் (Reader in Physical Education), மேற்படி ஆராய்ச்சிக்குப் பெரிதும் உதவினர். 284 பக்கங்கள் கொண்ட அந்த ஆராய்ச்சி நூல் எனக்கு 77% மதிப்பெண்கள் (Marks) வாங்கிக்கொடுத்தது மட்டுமின்றி, நான் இறுதிப் பட்டத்தேர்வில் (M. P. E. Final Examination) அப் பல்கலைக் கழகத்தில் முதல் வகுப்பில் முதலிடம் (First Class First) பெறவும், ஜிவாஜி பல்கலைக் கழகத் தங்கப் பதக்கம் (Gold Medal) பெறவும் வழி வகுத்தது.

1968-ம் ஆண்டு 2-வது உலகத்தமிழ் கருத்தரங்கு மாநாட்டில் சிலம்பச்சிறப்பைக் கட்டுரை வடிவில் ஆங்கிலத்தில் வாசித்தளிக்கும் வாய்ப்பையும் பெற்றேன். 1971-ம் ஆண்டு வீர சிலம்பம் பற்றிய முதல் ஆங்கில நூலை Silambam: Technique & Evaluation வெளியிட்டேன்.

3-வது அகில இந்திய விளையாட்டுப் புத்தகப் பரிசுப்போட்டிக்கு அனுப்பப்பட்ட இப்புத்தகம், இந்தியஅரசாங்கத்தின் நன்மதிப்பைப் பெற்றதால், இந்திய அரசாங்கம் 250 புத்தகங்களை வாங்கி இந்தியா முழுவதுமுள்ள உடற் கல்விக் கல்லூரிக்கு விநியோகித்தது. இவ்விதம் இந்திய அரசாங்கம் இந்நூலைப் பாராட்டி பரிசு ஈந்து ஊக்குவித்தது. என்னே! வீர சிலம்பக் கலையின் புகழ்! நாடார் மஹாஜன சங்கம் கோவில்பட்டியில் நடத்திய 40-வது ஆண்டு விழாவில் (28—5—1972-ல்) எனது ஆங்கில சிலம்ப நூலின் சிறப்பை மதித்து, சிலம்பக் கலையை விரிவாக ஆராய்ச்சி செய்து விளக்கங்களுடன் அக்கலையை புத்தக வடிவில் இயற்றியது கண்டு பெருவகை கொண்டு பல்லாயிரக் கணக்கான பெருமக்கள் முன்னிலையில் ஓர் பாராட்டுப் பட்டயம் வாசித்தளித்துக் கௌரவப் படுத்தியது. அச்சங்கத்திற்கு எனது உளங்கனிந்த நன்றி.

தமிழகச் சிலம்பாசிரியர்கள், பத்திரிகை ஆசிரியர்கள், பொது மக்கள் யாவரும் இக் கலைபற்றிய விபரங்களைத் தமிழிலும் அச்சிட வேண்டுமென விரும்பிக் கேட்டுக்கொண்டதால் 1973-ம் ஆண்டு மார்ச் மாதம் இந்த நூலை வெளியிட்டுள்ளேன்.

வாழ்க தமிழ்! வளர்க சிலம்பக் கலை!

அழகப்பா உடற்கல்விக்
கல்லூரி, காரைக்குடி.
மார்ச்சு 1, 1973

ஜே. டேவிட் மேனியல் ராஜ்

# நன்றி உரை

*இந் நூலாசிரியர் முதற்கண் தனது பாவங்களைக் கழுவி சத்திய வழியில் நடத்தி வரும் இயேசு கிறிஸ்துவிற்குத் தனது வணக்கத்தைச் செலுத்தி, இனி, அவ் வழியிலிருந்து சற்றும் விலகாதபடி காக்குமாறு வேண்டி, மேலும் இந் நூலை ஆசீர்வதித்த இயேசுவுக்குத் தன் நன்றியை ஏறெடுக்கிறுர்.*

வீரத் தமிழகத்தின் சிறப்புக் கலையான சிலம்ப விளையாட்டினை உலகிற்கு அளிக்க எண்ணி, அவ் வித்தையின் அடவு வகைகள், கால் பிரித்தல் முறைகள், தமிழ் இலக்கியம் அது பற்றி பரைசாற்றும் அறிவுக் களஞ்சியங்கள், வரலாற்று விபரங்கள், பழமொழிகள் இவைகளின் பேரில் ஆங்கிலத்தில் ஓர் ஆராய்ச்சி நடத்தி எம். பி. இ. (M. P. E.) பட்டப் படிப்பின் இறுதி ஆண்டில் தம் ஆராய்ச்சி நூலை (Thesis) லட்சுமிபாய் விளையாட்டுக் கல்விக் கல்லூரியின் வாயிலாக குவாலியரிலுள்ள ஜிவாஜி பல்கலைக் கழகத்திற்கு இவ்வாசிரியர் சமர்ப்பித்தார். அங்ஙனம் சமர்ப்பிக்கப் பெரிதும் உதவிய அக்கல்லூரி விரிவுரையாளர் டாக்டர் சேதுமாதவ ராவ் அவர்களும், பத்மஸ்ரீ பட்டம் பெற்ற டாக்டர் பி. எம். ஜோசப் (அந்நாள் கல்லூரி முதல்வர்) அவர்களும், திரு. எஸ். டீ. சோப்டே அவர்களுமாவர். அவர்களுக்கு இவ்வாசிரியர் என்றும் கடமைப் பட்டுள்ளார்.

மேற்படி சிலம்ப ஆராய்ச்சியை ஊக்குவித்த தனது தந்தை ஏ. ஜி. ஏசுதாஸ், அவர்களுக்கும், தனது தாய் திருமதி லில்லி ஏசுதாஸ் அவர்களுக்கும், பணக் கஷ்டத்திலும், சிரமங்களிலும் மனந்தளராது, புன்னகையோடும், முகமலர்ச்சியோடும் உதவி, ஊக்குவித்த தனது மனைவி ஜெசி பிரிஸ்கில்லாளுக்கும், தம்பி, ஜே. செல்லையா மாணிக்க ராஜீக்கும், இந்நூலாசிரியர் தனது முக மலர்ந்த நன்றியைத் தெரிவிக்கிறுர்.

இக்கலையில் ஆசிரியரின் ஆர்வத்தைத் தூண்டி, அன்னுரின் சிலம்பக் கலைத்திறனை ஆங்கில நூலாக வடிக்க அரும்பாடுபட்ட திரு. ஜே. வேதமணி பால்ராஜ் என்ற தமது ஆருயிர் நண்பர் (புனிய யோவான் கல்லூரி, பாளையங்கோட்டையில் ஆங்கிலத் துறை விரிவுரையாளர்) அவர்களை இவ்வாசிரியர் வணக்கத்துடன் பாராட்டுகிறுர்.

உலகத் தமிழ் மாநாட்டில், சீரிய சிலம்பக் கலையின் மாண்பைப் பரப்பி, இக்கலையை வளர்க்க எண்ணி இவ்வாசிரியருக்கு அவகாசம் கொடுத்தனுப்பிய திருமதி உமையாள் ராமநாதன் (செக்கரட்டரி, கரஸ்பாண்டன்ட், டாக்டர் அழகப்பா எஜிகேஷனல் டிரஸ்ட்,) மேலும் அந்த டிரஸ்டின் மானேஜர் திரு. டி. வி. எஸ். மணியன், டாக்டர். ராப்சன், கல்லூரி முதல்வர், அழகப்பா உடற் கல்விக் கல்லூரி, காரைக்குடி, அவர்களுக்கும் தனது அன்பு கலந்த வணக்கத்தை ஆசிரியர் தெரிவிக்கிருர்.

திரு. ஆர். கனகசபாபதி, முதல்வர், ஆதித்தனூர் கல்லூரி, திருச்செந்தூர், திரு ஜே. பி. தாமஸ், கல்லூரி முதல்வர், ஒய். எம். சி. ஏ. கல்லூரி, சென்னை, திரு. ஜி. ஜே. வில்லியம்ஸ், விரிவுரையாளர், ஆங்கிலத் துறை, வி. எச். என். கல்லூரி, விருதுநகர், மேற்படி கல்லூரி திரு சேதுரகுநாதன், விரிவுரையாளர், தமிழ்த் துறை, திரு. ஏ. விஸ்வநாதன், திரு. க. தேசிகன் விரிவுரையாளர்கள் தமிழ்துறை, அழகப்பா கல்லூரி, காரைக்குடி. திரு எஸ். குற்ருலம் ஆர்டிஸ்ட், சிவகாசி, திருவாளர்கள் எ.சி. காசி, வேதராஜ், நாசரேத் முதலிய இக் கலை ஆதரவாளர்களுக்கும் இவ்வாசிரியர் தனது நன்றியை வெளிப்படுத்துகிருர்.

இக் கலையைக் கிரமமாகக் கற்றுக் கொடுத்த தனது ஆசான் திரு. பொன்னையா பயில்வான் (பண்டாரவிளை) அவர்களுக்கும் மற்றும் இக் கலையை வளர்த்து வரும் எண்ணுக்கடங்காத சிலம்ப நிபுணர்களுக்கும் இவ்வாசிரியர் பாராட்டுதல்களைத் தெரிவிக்கிருர்.

மாலைமுரசு பத்திரிகை மானேஜிங் டாரக்டர் திருவாளர், பா. ராமச்சந்திர ஆதித்தன் அவர்களும், குமுதம், ஆனந்த விகடன். 'The Hindu' 'The Indian Express" 'தினத்தந்தி' மஹாஜனம், முதலிய பத்திரிகைகளின் நிருபர்களும், ஆசிரியர்களும் தங்கள் பத்திரிகைகள், வார இதழ்கள், மாத ஏடுகள் மூலம் சிலம்பக் கலைக்கும், சிலம்ப ஆசிரியரின் சேவைக்கும் நல்ல ஆதரவு கொடுத்துள்ளதால், அவர்களுக்கும் இந்நூல் மூலம் நன்றி தெரிவிக்கப் படுகிறது. சென்னை வானொலி நிலையம் ஆங்கில சிலம்ப நூலின் மதிப்புரை ஒன்றை ஒலிபரப்பியது. அவ்வாறு ஒலிபரப்புதல் செய்ததற்குப் பாராட்டு தெரிவிக்கப்படுகிறது. இந்நூல் அச்சிட்ட தி சௌத் இந்தியா அச்சகத்திற்கு நன்றி.

பிரபல திரைப்பட நடிகர்களுள் ஒருவரான திரு. ஜெய்சங்கர் அவர்கள் இவ்வாசிரியருடன் சில சிலம்ப புகைப் படங்கள் எடுக்க அவகாசம் அளித்து இக் கலை வளர்ச்சிக்கு ஆதரவு காட்டினுர். அன்னுருக்கும் நன்றி கூறப்படுகிறது.

ஜே. டேவிட் மேனியல் ராஜ்

# இந்நூல் பற்றிய சில கருத்துரைகள்

"தற்காப்புக் கலைகள் பல, பல. எல்லாத் தற்காப்புக் கலைகளுக்கும் 'அரசன்' எனப் போற்றப்படும் சிலம்ப வித்தையின் நானுவித உபாயங்களையும், சிலம்பக் கம்பைப் பிரயோகிக்கும் பற்பல வழி வகைகளையும், பதினூரடி வேங்கைப் புலிபோல் அங்கும் இங்கும் பம்மிக் காலடி பெயர்த்து வைக்கும் காலடி கிரம வரிசைகளையும் என் நண்பர் வரை படங்களின் உதவி கொண்டு இந் நூலில் நன்கு விளக்கியுள்ளார். அது மட்டுமா? இப் புத்தகத்தின் முதல் பக்கம் முதல் கடைசிப் பக்கம் வரை வீர உணர்ச்சி பின்னிக் கிடப்பதையும் காண்கிறேன்".

ஆர். கனக சபாபதி,
பி. எஸ். ஸி. (ஹார்னர்ஸ்)
கல்லூரி முதல்வர்,
ஆதித்தனர் கல்லூரி, திருச்செந்தூர்.

"அடி முறைகள் மட்டுமல்ல! மூவேந்தர் ஒரு குடையின் கீழ் ஆட்சி நடத்தி சிலம்பக் கலையைப் போற்றி வளர்த்த வரலாற்றுச் செய்திகளையும், தமிழ் இலக்கியத்தில் அங்கும், இங்கும் மின்னிக் கொண்டிருக்கும் இக் கலை பற்றிய குறிப்புகளையும், வாள் ஏந்தி, கல்திருவிக் கம்புகள், ஏந்தி, வீராவேசத்துடனும், சுதந்திரத் தாகத்துடனும் ஆங்கிலேயரைப் பல கைகலப்புச் சண்டைகளில் பின்னிடப் பண்ணிய கட்டப்பொம்மனின் போர் வீரர்களின் குமுறல்கள் அடங்கிய பாக்களின் பகுதிகளையும், முடி மன்னர்களால் இக் கலை கொஞ்சி வளர்க்கப்பட்ட கோட்டைகளின் வரலாற்றுக் குறிப்புகளையும், கிராமங்களிலும், பட்டணங்களிலும் உருவான சிலம்பக் கூடங்களின் செய்திகளையும் ஒன்று திரட்டிக் கோர்வையாக நல்லதொரு தமிழ் நூலை வடித்துள்ளார் இவ் வாசிரியர். இவர் இக் கலையின் வரலாற்றுச் செய்தி பேரில் ஆங்கிலத்தில் நல்லதொரு ஆராய்ச்சிச் சுருளை 2வது உலகத் தமிழ் மாநாட்டில் வாசித்தளித்ததையும், பிற நாட்டினர் அதை நன்கு வரவேற்றதையும், அம் மாநாட்டில் கலந்து கொண்ட நான் கண்டு மகிழ்வுற்றேன்".

பி. ராஜதுரை, எம். ஏ.,
முதல்வர்,
எஸ். பீ. கே. கல்லூரி, அருப்புக்கோட்டை.

"அகில உலக ஹாக்கி விளையாட்டுப் போட்டிகளில், தயான்சந்து (Dhayan Chand) என்ற நம் இந்திய ஹாக்கி வீரர் தனது ஹாக்கி மட்டையால் திறம்பட பந்தை உருட்டி, தான் விரும்பிய இடங்களுக்கு அதை மின்னல் வேகத்தில் அடித்த விநோ தங்கள் பல கண்டு வியப்புற்ற மேலை நாட்டினர், அன்னாருக்கு 'மந்திரவாதி' என்ற புனைப் பெயரைச் சூட்டினர். நானும் அந்த இணையற்ற தயான்சந்துவுக்கு எதிராக விளையாடும் வாய்ப்பு பெற்று அவ் விளையாட்டுத் தீரரின் கைத்திறமையைக் கண்டு களித்தேன்.

எனது மாணவர் திரு டேவிட் மேனியல் ராஜ் இந்நூல் மூலம் எவ்வாறு சிலம்பக் கம்பு, பல தந்திரோபாயங்களோடும், வினையங்களோடும், மின்னல் வேகத்தில் சுழற்றப்பட்டும், பல கோணங்களில் திரிந்தும், எதிரியின் உடம்பின் இலக்குகளைத் தாக்கி, அவனை மருள வைக்கிறதென்பதை உலகிற்கு எடுத்துக் காட்டியுள்ளார்.

ஹாக்கி விளையாட்டில் திறமை, மட்டையை இயக்குவதில் உள்ளது! சிலம்பக் கம்பையும், முறைப்படி பிரயோகித்தால் அது ஓர் தற்காப்புக் கேடயமாக அமையும்; அல்லது தன்னைச் சூழ்ந்து தாக்க வரும் எதிரிகளை மடங்கடித்துப் பணியவைக்கும் பயங்கர ஆயுதமுமாகும்!

சிலம்பப் போட்டியை நன்முறையில் நடத்துவதற்கேற்ற 14 விதிகளும் (Rules) இக்கலை பற்றிய அருஞ்சொல் அகராதியும், இந்நூலில் இடம் பெற்று, இதன் சிறப்பை அதிகரித்துள்ளது''.

ஜி. மாசில்லாமணி, பி ஏ., எல் டி, டீ. பி. இ.,
முன்னாள் விளையாட்டு இயக்குநர்,
புனித யோவான் கல்லூரி, பாளையங்கோட்டை.

நூற்றுக்கு மேற்பட்ட சிலம்பாசிரியர்களை அணுகி இவ் வித்தையைப்பற்றி பெற்ற பல நெளிவு சுளிவுகளையும் தான், ஆசான்கள் மூலம் கற்ற இக்கலையின் சாரங்களையும், பல உபாயங்களையும் திரட்டி, இவ்வாறு இத்தற்காப்புக் கலைபற்றிய ஆராய்ச்சிக்கும், வளர்ச்சிக்கும் சுமார் 20,000 ரூபாய்கள் வரை செலவு செய்து, 17 ஆண்டுகள் தொடர்ந்து பணியாற்றி, இக் கலைபற்றி ஆங்கிலத்திலும், தற்போது தமிழிலும் இம் முதல்நூலை பல இன்னல்கள் மத்தியில் நெஞ்சுத் துணிவோடு வெளியிட்ட இவ்வாசிரியர் "சிலம்பக் கலையின் தந்தை'' என்று அழைக்கப்படும் கௌரவத்திற்குரியவராவார்.

**ஜெயமித்திரன் சத்தியநேசன்,**
பி. ஜி. டி. டி. (ரஷ்யா)
முதல்வர்,
ஒய். எம். சி. ஏ. உடற்கல்விக் கல்லூரி, பெங்களூர்.

"தற்காப்புக் கலைபற்றிய நூல்கள் இயற்றும் இந்திய ஆசிரியர்கள் மிகக் குறைவே. சிலம்பம் என்ற சீரிய தற்காப்புக் கலைபற்றி இவ் ஒப்பற்ற இலக்கியத்தை உருவாக்கி உலகிற்கு ஈந்த திரு. டேவிட் மேனியல் ராஜ் அவர்களின் சேவை குறிப்பிடத் தக்கதாகும். இந்த நூல் விளையாட்டுத் துறையில் பணிபுரிவோருக்கும், சாதாரண மக்களுக்கும் பெரிதும் பயன்படுமாறு பல விளக்கப்படங்களோடு அச்சிடப்பட்டுள்ளது."

சி. திருநாராயணன்,
எம். ஏ. எல். டி. எம். எட்,
துணை முதல்வர்,
அழகப்பா உடற்கல்விக் கல்லூரி,
காரைக்குடி-4.

அணுகுண்டுகள் வீசக்கூடிய இக் காலத்தில், இந்நூல் ஆக்கியோன் சிலம்பக் கம்பைச் சுழற்றி வீசக்கூடிய சூழ்ச்சித்திறன்களையும், விநோதங்களையும், இந் நூலில் திறம்பட வரைந்துள்ளார். இக் கலை பயிலுதல் எவ்வாறு ஒருவனின் சரீர வளர்ச்சியைத் தூண்டுகிறதென்றும், எவ்வாறு அவனுக்குத் தற்காப்பை அளிக்கிறதென்றும், எங்ஙனம் இது ஓர் சிறந்த பொழுதுபோக்குக் கலையாகவும் மிளிர்கிறதென்றும் குறிப்பிட்டுள்ளார். மேலும் சிலம்பக் கலையை ஓர் சிறந்த போட்டிக் கலையாக வளர்க்க எண்ணி, இவ்வாசிரியர், இதுவரை யாரும் தொகுக்காத போட்டி விதிகள் பதினான்கை ஆராய்ந்து தொகுத்துத் தொண்டு செய்துள்ளது போற்றற்குரியது.

ஆர். சி. சத்தியநேசன்,
எம். ஏ., பி. டி., எம். பி. இ.,
விளையாட்டுத்துறை பேராசிரியர்,
மதுரை பல்கலைக்கழகம், மதுரை.

பின்னனிக்கு ஒதுக்கப்பட்டிருந்த வீர சிலம்பக் கலையின் நுட்பங்கள் விஞ்ஞான முறைப்படி ஆராயப்பட்டு, சாதாரண மக்கள் கூட எளிதில் புரிந்து கொள்ளுமாறு இந்நூலில் அழகாக விளக்கப் பட்டுள்ளது. நமது மண்ணில் பிறந்த இத் தற்காப்புக் கலையின் வளர்ச்சிக்கு இந்நூல் ஓர் ஒளி விளக்காக அமைந்துள்ளது.

எஸ். கிருஷ்ணமூர்த்தி,
பி.ஏ , எம். எட்.,
முதல்வர்,
மாருதி உடற்கல்விக் கல்லூரி,
பெரியநாயக்கன் பாளையம், (ஆர். எஸ்,)
கோயம்புத்தூர் மாவட்டம்.

"சிலம்ப விளையாட்டு நிபுணரான திரு டேவிட் மேனியல் ராஜ் அவர்கள் எப்படி ஓர் அளவு செய்யப்பட்ட பிரம்பு (சிலம்பக் கழி) பார்வையாளரை மயிர்க்கூச்செறியப் பண்ணவைக்கும் தற்காப்புக் கலையாக விளங்குகிற தென்பதையும், எங்ஙனம் அக்கம்பு அலங்கார விளையாட்டுக்கு அடிப்படையாக அமைகிறதென்பதையும், எவ் விதத்தில் அது உடற்கட்டை உருவாக்கும் பயிற்சியைக் கற்பிக்கிற தென்பதையும், இச்சீரிய நூலில் தெளிவு படுத்தியுள்ளார்.

இத் தற்காப்புக் கலையை எவ்வாறு பள்ளிகளிலும், கல்லூரி களிலும், நற்பண்புகளை உருவாக்கும், பாடங்களாகவோ, பயிற்சி களாகவோ, மாற்ற முடியுமென்பதையும், இவர் நிரூபித்துக் காட்டு கிறார்."

டி. எஸ். அந்தோணிமுத்து,
பி. ஏ., எல். டி , டி. பி. இ.,
முன்னாள் தலைவர்,
மாருதி விளையாட்டுக் கல்விக் கல்லூரி,
பெரியநாயக்கன் பாளையம்,
கோயம்புத்தூர்.

"கிரேக்க நாட்டுக் கலைகள், நாகரீகம் இவைகளை விடத், தமிழகம், பழங்காலத்தில் ஒப்பற்ற கலைகளில் ஒன்றான வீரசிலம்பக் கலையை உடைத்ததாயிருந்தது என்பதை ருசுப்படுத்த, இந்நூல் ஓர்கருவியாக விளங்குகிற தென்பதை வாசகர்கள் அறிவர்.

சிலம்பக் கலையின் தோற்றத்தைத் துறுவி ஆராய வேண்டின், ஓர் வரலாற்று ஆசிரியன், (Historian) கற்காலத்தையும் தாண்டி, அப்பால் தன் ஆராய்ச்சிக் கண்களைத் திருப்ப வேண்டும்.

தொன்மை வாய்ந்த இச் சிலம்பக்கலை, இவ்வொப்பற்ற ஆரய்ச்சிப் படைப்பாகிய, "சிலம்பம்: அடிமுறைகளும், வரலாறும்" என்ற நூலின் மூலம் மறுமலர்ச்சியைப் பெற்றுத் திகழ்கிறது.

ஜே. பி. தாமஸ்,
தலைவர்,
ஒய். எம். சி. ஏ. விளையாட்டுக் கல்விக் கல்லூரி,
நந்தனம், சென்னை.

"1968-ம் ஆண்டு சென்னையில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டில் இந்நூல் ஆக்கியோன், சிலம்பக் கலையின் வரலாற்றுச் செய்தியை வாசித்ததை, அம்மாநாட்டில் பங்குபெற்ற நான் கேட்ட பொழுது, சிலம்பம் பற்றிய நூலொன்றை அவர் ஆங்கிலத்தில் அச்சிட்டு உலக மக்களுக்குப் பயன்படும்படி செய்தல் நலமென ஆசித்ததுண்டு. அந்த ஆசையை 1971 ம் ஆண்டு இவ்வாசிரியர் நிறைவேற்றினது மட்டுமில்லாது, 1973 ல் தமிழிலும் இப் புத்தகத்தின் வாயிலாக சிலம்பக் கலையை அறிமுகப்படுத்தியுள்ளார். இது தமிழகச் சரித்திரத்தில் இடம் பெற வேண்டிய ஓர் சம்பவ மாகும்"

புரொபசர் எஸ். திருவேங்கடாச்சாரியார்,
எம். ஏ., எல். டி., எம். எட்., எம். ஏ., (கொலம்பியா),
டிப். எஜி (விஸ்கான்சின்)
முதல்வர்,
டாக்டர் அழகப்ப செட்டியார் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி,
காரைக்குடி.

# உள்ளுறை

## படங்களின் அட்டவணை

# அணிந்துரை

"சிலம்பம்: அடி முறைகளும், வரலாறும்" என்ற இச் சிறந்த நூலைத் தமிழில் அச்சிட்டு வெளியிட்ட சிறப்பு திரு. டேவிட் மேனியல் ராஜ் அவர்களைச் சாரும்.

வரலாற்றிற்கு முற்பட்ட காலத்தில் தோன்றி, தமிழகத்தில் மலர்ந்திருந்து பிற்காலத்தில் வளர்ச்சி குன்றி, மறைந்திருந்த இச் சிலம்பக் கலைக்குப் புத்துயிர் அளிக்க எண்ணி, இந்நூல் ஆசிரியர், பற்பல சிலம்பக் கூடங்களிலுள்ள ஆசிரியர்களைக் கண்டு வினவியும், தமிழ் பேராசிரியர்களின் மூலம் தமிழ் இலக்கியங்களில் இத் தற்காப்பு கலைபற்றி காணக்கிடக்கும் சரித்திரக் குறிப்புகள், கருத்துக் குவியல்கள் முதலியவைகளைச் சேகரித்தும், தான் கற்ற சிலம்ப அடவுமுறைகளைக் கிரமமாக அமைத்தும், ஆங்கிலத்தில் Silambam: Technique & Evaluation என்ற ஓர் ஆராய்ச்சி நூலை 1971-ம் ஆண்டு மார்ச் மாதம் வெளியிட்டார். இவ்வாண்டு (1973-மார்ச்) இத்தமிழ்நூல் வெளிவந்துள்ளது. சிலம்ப விளையாட்டின் அடிப்படைத் திறமைகள், போட்டியின் விதிகள் வரலாற்று விபரங்கள் இவைகள் இந்நூலின் தரத்தை உயர்த்தியுள்ளன.

விளையாட்டுக் கல்விக் கல்லூரிகளும், மற்றும் பிற கல்விச் சாலைகளும், உடற்கல்வியைப் பரப்பும் வேறு ஸ்தாபனங்களும் இக்கலைக்கு ஆதரவு கொடுக்குமென நம்புகிறேன்.

(ஒ-ம்) டாக்டர் ராப்சன் மோசஸ்,
பி. ஏ., எம். பி. இ., (Spfld.) பி. எச். டி., (UO)
முதல்வர்,
அழகப்பா உடற் கல்விக் கல்லூரி,

காரைக்குடி-4.
1—3—1973



"ஆசான் இடறிவிழுந்தால் அதுவும் ஒரு வரிசை" என்ற பழமொழிக்கேற்ப எதிரி கீழே வீழ்த்தப்பட்டாலும், அந் நிலையிலிருந்தும், தான் எதிரியைத் தாக்கமுடியும் என்பது புலனாகிறது. தரையில் இருப்பவரின் இடது காலையும், இடது கையையும் நோக்குக:

படம்: திரு. ஜெய்சங்கர், திரு. டேவிட் மேனியல் ராஜ்.



ஆங்கிலேயரைக் கைகலப்புச் சண்டைகளில்
எதிர்க்க சிலம்பக் கம்புகளையும் உபயோகித்த
வீரபாண்டிய கட்டப்பொம்மன்

(பக்கம் 17 வாசிக்கவும்)



ஆசான் திரு. பொன்னையா பயில்வானும், அவரது சீடர் திரு. டேவிட் மேனியல் ராஜாும்



நாடார் மஹாஜன சங்கம் 40 - வது மாநாட்டில் இந்நூல் ஆசிரியருக்கு (28–5–1972-ல்) பாராட்டுப் பட்டயம் வழங்கும் காட்சி.



இரு சிலம்பக் கம்புகளை எதிரியின் கழுத்தில் ஏற்றி கத்தரிப் பூட்டு (Scissor's Lock) போட முயற்சித்தல்

(படம் ஜெ. டேவிட் மேனியல் ராஜ், திரு. ஜெய்சங்கர்).



தரையில் விழுந்த நிலையிலும், எதிரியின் குத்தையோ, அடிகளையோ தடுக்க முடியும்!

எதிரியின் இலக்குகளை கம்பினாலும், காலினாலும் நன்கு தாக்கவும் முடியும்.

இது தரையில் விழுந்தவரின் திறமையைப் பொருத்தது; இடது காலை நோக்குக.

(திரு. ஜெய்சங்கர், திரு. டேவிட் மேனியல் ராஜ்)

# அத்தியாயம் 1

**கம்பின் பயன்**

உலகெங்கும் வனப்புமிக்க மலைகளிலும், மரம்செறிந்து அடர்ந்த காடுகளிலும் குகைகளிலும், ஆதிகால மனிதர்கள் கூட்டம் கூட்டமாக வாழ்ந்துவந்த கற்காலத்திலும், நவநாகரிகச் சிகரத்தின் உச்சத்தை எட்டி, விண்வெளிக் கப்பல்மூலம் சந்திரனின் மேற் பரப்பில், விஞ்ஞான மனிதன் இறங்கி சந்திரனைத் துருவி ஆராயும் இந்த 'விண்வெளி' காலத்திலும், சிறு கம்பானது பெரும் அளவிற்குத் தனது பயனை எடுத்துக் காட்டிக் கொண்டு தான் இருக்கிறது. சிறு கம்பின் சிறப்பை உலகம் நன்குஉணர்ந்துள்ளது.

அரசன் அல்லது கோமகன் தனது அரியணை அல்லது சிங்காசனத்தின் மீது அமர்ந்து ஆணையைச் செங்கோலின் மூலம் உலகிற்கு வெளிப்படுத்துகிறான். இங்ஙனமே பழங்காலத்தில் ரோமாபுரியை அரசாண்டசீசர்களும், மதகுருக்களான போப்பாண்டவர்களும் தங்களது அதிகாரத்தைச் சிறு கோலின் சைகைமூலம் வலியுறுத்தினார்கள். சிறு கோலின் துணை கொண்டு நடப்பவர்கள், கோலை இணைபிரியா நண்பராகப் பாவிப்பர். இன்னிசைக் குழுவின் தலைவரும், பல இசைக் கருவிகள் இயக்குபவர்களின் தலைவரும், சிறு கோலின் மூலம் சைகைகள் பல காட்டி, இன் இசையின் தாளங்களையும், ஓசைகளையும், பண்களையும், பாடகர்களுக்கு அல்லது வாத்தியக் காரர்களுக்குக் குறிப்பாக அறிவிக்கின்றனர்.

புல்வெளிகளில் ஆடு, மாடு மேய்க்கும் இடையர்கள், தங்கள் கால்நடைகளை நன்குமேய்ப்பதற்காகவும், அவைகளை வன விலங்குகளிலிருந்து பாது காப்பதற்காகவும் நீண்ட கம்பொன்றைக் கையிலேந்திச் செல்வர்.

சர்க்கஸ் அரங்குகளில், கட்டியக்காரர்களும், கோமாளிகளும் கொடிய காட்டு விலங்குகளான சிங்கம், புலி, சிறுத்தை, யானை, இவைகளை அடக்கி ஆள்கிறவர்களும், சர்க்கஸ் பவனியை முன் நின்று நடத்துபவர்களும், தங்கள் வசமுள்ள சிறு கழியைத் தகுந்தபடி சுழற்றித் தங்கள் தங்களது தொழிலை மேற்கொள்ளுவதை நாம் காண்கிறோம்.

அறிவுக்கூர்மையுள்ள கிராமவாசி, தான் நடந்து அல்லது சற்று நீந்திக் கடக்கக் கூடிய நீர்ப்பரப்பின் ஆழத்தைக் கணித்து

ஏரியையோ, அல்லது ஓர் தடாகத்தையோ கடக்க நீண்ட கம்பைக் கையில் பற்றிச் செல்லுதல் வெள்ளிடைமலை.

உலகில் பற்பல நாடுகளிலுள்ள மலைவாழும் பெரும்பான்மையோரான காட்டு சாதியினர் கம்பைச் சுழற்றி நடனமாடுதலும் மரபு.

நாகரிகத்தின் பிறப்பிடம் என்று கருதப்படும் யவனர்கள் வசிக்கும் கிரேக்க நாட்டில் பழங்காலத்தில் 'பாங்கிரேட்டியம்' என்ற பயங்கர மற்போரோடு, குத்துச்சண்டைப் போட்டிகளும் நடத்தப்பட்டன. அப்போட்டிகளை நன்முறையில், விதிவரம்பிற் குட்படுத்திக் கண் காணிக்கும் பொருட்டு, நடுவர்கள் (Referees) கைகளில் நீண்டதடிகள் ஏந்தி விதியை மீறுவோரைத் தடியால் தண்டித்தனர் என வரலாற்றின் வாயிலாக அறிகிறோம்.[1]

விரல்களில் நெடுங்கம்பை விழாவண்ணம் செங்குத்தாக நிற்க வைத்துப் பல வித்தைகள் புரிந்த நாடு செர்மானியநாடு.[2] புதிய நவீன உடற்பயிற்சி இயக்கம் செர்மானிய தேசத்தில் உருவானபோது கழியைக் கையில் செம்மையாகச் செங்குத்தாக ஏந்தி, அதை விழா நிலையில் நிறுத்திப் பார்வையாளர் புகழ விளையாடிக் காட்டும் கலையும், உடற்பயிற்சிப் பாடத் திட்டத்தில் புகுத் தப்பட்டதும் விந்தையன்றோ!

**14-ம், 15-ம்,** நூற்றுண்டுகளில் இங்கிலாந்து நாட்டில் வெளியிடப்பட்ட கிராமியக் கதைகளில் (Folk Tales) மிகச் சிறப்பான "ராபின்குட்", "ஐவன்கோ," என்ற கதைகளில் கம்புச் சண்டைகளின் (Staff - fights) எதிரொலிகள் ஆங்காங்கே கேட்கப் படுகின்றன. அக்கதைகளில் கம்புச்சண்டைகள் பொழுது போக்கு விளையாட்டாகவும் (Recreational Sport) கருதப்பட்டு விவரிக்கப் பட்டுள்ளன.

மேற்கிந்தியத் தீவுகளில் ஒரு சில இடங்களில் தற்காலத்திலும் கூட 'பாய்ச்'[3] (Bois) என்ற ஒரு வகை கம்பு விளையாட்டு நீக்ரோ மக்களிடையே பரவியுள்ளதாக வரலாறு கூறுகிறது.

---

1 Eraj Ahmed khan: *History of Physical Education* (Patna-4: Scientific Book Company, 1964), P. 20

2 Fred Eugene Leonard and George B. Afflek: *A Guide to the History of Physical Education*c Philadelphia: Lee Febiger, 1952), P. 75

நன்கு ஆராயுங்கால், சண்டை செய்வதற்காகவும், பொழுது போக்கிற்காகவும் சிறு கம்பானது உலகெங்கும், பற்பல நாடு களிலும் பல்வேறு முறைகளோடு தொன்று தொட்டு பயன்பட்டு வருவதை வரலாற்றின் மூலம் அறிகின்றோம்.

நமது பாரத நாட்டில் இக் கம்பு விளையாட்டு ஏனைய நாடுகளி லிருந்ததை விட மிகச் சிறப்புற்றிருந்தது என்பதை மேலை நாட்ட வரும் ஒப்புக் கொள்வர்.

துப்பாக்கிப் பிரயோகம் நமது நாட்டில் ஆரம்பிக்குமுன், நம் நாட்டவர் இக்கம்பு விளையாட்டை மதித்து, அதை முறையோடு கற்றனர்.

மராட்டிய நாட்டில் கம்பு விளையாட்டு 'லாட்டி' என்றும், குஜராத்தில் 'டால் லக்கடி' என்றும், வங்காள நாட்டில் 'லாடி கீலா' (Lati Khela), என்றும், பெங்களூர், மைசூர் பிரதேசங்களில் 'தண்டா வரிசை' என்றும், ஆந்திர பிரதேசத்தில் 'கரடி ஆட்டமு' (கோலு விளையாட்டு) என்றும், மலையாள நாட்டில் 'நெடுவடி'' என்றும், தமிழகத்தில் 'சிலம்பம்' என்றும் பல பெயர்கள் பெற்று மிளிர்கின்றது.

மூவேந்தர்கள் வீர ஆட்சி புரிந்த நாகரிகத்தின் பிறப்பிடமான தமிழ் நாட்டில் 'நெற்றி எட்டு' நீளமுள்ள கழி அல்லது கம்பின் விளையாட்டுச் சண்டை முறைகளும், கம்பு கொண்டு பயிலப்பட்ட கேளிக்கை விளையாட்டு வகைகளும், முதலாம், இரண்டாம் நூற் றாண்டுகளில் சிறப்படைந்திருந்தன எனத் தெரிய வருகிறது.

தமிழகத்தில் சற்றேறக்குறைய எல்லாக் கிராமங்களிலும், சேரி களிலும், கம்பு விளையாட்டுப் பயிற்சிகள் முறைப்படிக் கற்றுக் கொடுக்கப் படுவதையும், கம்பு விளையாட்டின் தொன்று தொட்ட வளர்ச்சியையும் இன்றும் நேரில் காணலாம். தமிழ் இலக்கியங் களில் சிலம்பப் பயிற்சியைப் பற்றியும், சிலம்பப் பயிற்சியினல் விளையும் உடல் வளம் பற்றியும், பல குறிப்புகள் மலிந்து கிடக்கின்றன.

---

3 An officer of the Indian Police: *The "Walking Stick" Method of Self-Defence* (London: Athletic Publications Ltd.,) P. VIII.

4 Chirakkal T. Şreedharan Nair : *Kalaripayat*(Author, Chirakkal, 1963), p.13.

5 Ibid., p. 102.

சிலம்பு பற்றிய இன்றியமையா சில இலக்கியக் குறிப்புகள் இந்த நூலின் இரண்டாவது அத்தியாயத்தில் நன்கு தொகுக்கப் பட்டுள்ளன.

இங்ஙனம் இச் சிலம்ப விளையாட்டு மிகப் பரவலாய்க் கற்பிக்கப் பட்டு வந்த போதிலும், இது பற்றி, ஒரு விளக்க நூலாகிலும், ஒரு ஆராய்ச்சி நூலாகிலும் அச்சிடப்படாதது விந்தையே! சிலம்பம் பற்றிய ஒரு சில புத்தகச் சுவடிகள் (Pamphlets) மட்டும் இக் காலத்தில் ஆங்காங்கே காணப்படுகின்றன.

**உடற் கல்வியில் சிலம்பப் பயிற்சியின் இடம்**

ஒரு நாட்டின் உடற்கல்வி, பொழுது போக்கு விளையாட்டு இவைகளின் நிகழ்ச்சி நிரலை நாம் உற்று நோக்கின், அந்த நிகழ்ச்சி நிரலில் அந்நாட்டு மக்கள் தொழிலுக்காகவும், எதிரியோடு போர் புரிவதற்காகவும், உறுதுணையான உடல் வன்மை பெறும் பயிற்சிகள், அம் மக்களின் சமூகத் தேவைக்கான விளையாட்டுகள், அன்னாரின் தொழுகைக்கான நடனங்கள், அந் நாட்டவரின் பொழுது போக்கு விளையாட்டுகள் இவைகள் ஒருங்கே அமையப் பெற்றதாயிருக்கக் காணலாம்.

செர்மானிய தேசத்தார், பகைவர்களை எதிர்த்து நிற்க உடற் பயிற்சியின் சிறப்பினை அறிந்து 'டான் வரைன்' உடலியக்கத்தை ஆதரித்து வளர்த்தனர். செர்மனியில் 'டான் வரைன்' உடலியக்கம் மிகவும் பெரும்புகழ் அடைந்து பரவினதால், அந் நாட்டினர் உடல் உறுதி பெற்று, கட்டுப்பாட்டோடு வளர்ந்தனர்.

இடைக் காலத்தில் (Medieval Periods) ஐரோப்பா நாட்டில் 'நைட்ஸ்' (Nights) எனும் வீரர்களைப் பாராட்டும் எண்ணம் ஐரோப்பியரின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தது என்பதை வரலாற்றுச் சான்றுகள் மூலம் மெய்ப்பிக்கலாம். வீர உணர்ச்சிகள் பெருக்கெடுத்த அக் காலங்களில் மற்போர்களும், மயிர்க்கூச் செறியும் வாட் சண்டைகளும், மிகவும் வளர்ச்சியுற்றிருந்தன.

பன்னிரெண்டாம் நூற்றாண்டில் பசுவின் ஊத்தாம் பெட்டியை உதைத்து விளையாடியதிலிருந்து, தற்காலத்தில் நாம் விளையாடும் உதை பந்து (Foot - ball) உருவாகி, இங்கிலாந்து தேச மக்களை முதலில் கவர்ந்தது என்பது வரலாறு.

இடைக்காலத்தில் (Medieval Periods) ஆங்கிலேயர்களும் கம்பு விளையாட்டில் (Quarter - Staff) ஆர்வம் கொண்டு கம்புச் சண்டை பயின்றனர் என்பதற்குப் போதிய சான்றுகள் அத்தியாயம் 2-ல் கொடுக்கப்பட்டுள்ளது.

மேலே விவரிக்கப்பட்ட வீர உணர்ச்சிகளை வளர்ப்பதில் நமது பாரதநாடும் பின்வாங்கவில்லை. நம் இந்திய நாட்டில், மற்போர் புரிவோருக்கு ஏற்ற மல்லர்கள் அன்றாடப் பயிற்சிக்குக் கிட்டாததால், மல்கம்பு (Malkhamb) என்ற வியப்பான விளையாட்டு தோன்றியதும், அது மராட்டிய நாட்டில் பிரபல்யம் அடைந்துள்ளதும் நாம் எல்லோரும் அறிந்ததே.

இவ்வண்ணமே, இயற்கையாக மனித இயல்புப்படி பாமர மக்களால் தற்காப்பிற்காக, சுழற்றப்பட்ட கம்பின் வீச்சுகள், பின்பு விஞ்ஞான முறைப்படி சுழற்றப்பட்டு, நன் முறையில் கணிக்கப்பட்டுத் தற்சமயம் உலகத்தார் ரசிக்கும் வண்ணம் சிலம்பப் போட்டியாகவும், தற்காப்புக் கலையாகவும், பொழுதுபோக்கு விளையாட்டாகவும் திகழ்கின்றது.

எந்தப்புது முறை விளையாட்டுக் கல்வி நிகழ்ச்சி நிரலை எடுத்துக் கொண்டாலும் அது, குழு விளையாட்டுகள் (Team Games), தனி ஆள் விளையாட்டுகள் (Athletic Events), இருவர் விளையாட்டுகள் (Duals), இரு மல்லர்கள் பொரும் யுத்தங்கள் (Combats), நடனங்கள் (Dances), தசை வலுப்பயிற்சிகள் (Gymnastics), நீர் விளையாட்டுகள் (Aquatics), உடல் குறைவைச் சரிப்படுத்தும் பயிற்சிகள், (Adoptive Exercises), கேளிக்கை விளையாட்டுகள் (Recreational Activities), முதலிய பல பெரிய பிரிவுகளின்கீழ் பல்வகை விளையாட்டுகளை உடையதாய் அமைந்திருக்கக் காணலாம்.[6]

மேற்கூறிய பிரிவுகள் தவிர, நமது இந்திய நாட்டிலும் 'உள்நாட்டு விளையாட்டுகள்' (Indigenous Activities) என்ற பிரிதொரு சிறந்த பிரிவும் உண்டு.

ஆங்கிலேயரின் ஆட்சிக் காலத்தில் புதிய விளையாட்டுகளான கால்பந்து, கைப்பந்து, கூடைப்பந்து, மட்டைப்பந்து, (Cricket) வளைகோற்பந்து முதலியன நம் இந்தியநாட்டவரிடம் பரவலாயின.

6 Arthur G. Miller and M. Dorothy Massey: *A Dymamic Concept of Physical Education for Secondary Schools* (Englewood cliffs, N. J: Prentice-Hall, Inc., 1963), p. 165.

ஆங்கிலேயரின் ஆட்சிக்குப் பின் இந்தியா விடுதலை அடைந்த பின், உள்நாட்டு விளையாட்டுகள் தலைகாட்டித் தழைக்கலாயின. இப்போது நன்மை மிகப்பயக்கக்கூடிய நம் நாட்டுக் கபடி (Kabaddi), கோ கோ (Kho—Kho) போன்ற குழு விளையாட்டு களும் மற்போர் (Wrestling), ஆசனங்கள் (Asanas), லெசிம் (Lezium) எனும் பற்பல உடற்பயிற்சிகளும் உயிர்பெற்றுத் தழைத்து, நம் இந்திய விளையாட்டுக்கல்வி நிகழ்ச்சி நிரல்களில் சிறப்பான இடம் பெற்றுள்ளன. அதற்குக் காரணம் நம் மக்களின் நாட்டுப்பற்றும், நம் நாட்டு விளையாட்டுகளின் நல்ல குறிக்கோள் களுமாம்.

இந்தியப் பல்கலைக் கழகங்களின் கல்விக்குழு கீழ்க்கண்ட அறிக்கையை உயரிய முற்போக்கு எண்ணங்களுடன் வெளிப் படுத்தியுள்ளது.

"நம் நாட்டில் மலிந்து கிடக்கும், நமது நாட்டு விளையாட்டுக் கல்விப்பயிற்சிகளை மேலை நாட்டவர் நாட்டங் கொள்ளுமாறு சீரிய முறையில், அதாவது அறிவியல் முறைப்படி அமைத்து, அவைகளை சிறப்பு மிக்க இந்திய விளையாட்டுகளின் பங்குகளாக ஏற்படுத்த முழுமூச்சோடு உழைத்து, நல்ல விளையாட்டுப் பயிற்சிகளை நாம் தெரிந்தெடுக்கவேண்டும்" என்று இந்திய பல்கலைக்கழகங்களின் கல்விக்குழு சுட்டிக்காட்டுகிறது [7]

**இந்திய விளையாட்டுகளின் தோற்றம், வளர்ச்சி, வரலாறு முதலியன இன்னும் முறைப்படி ஆராயப்படாத அவலநிலை**

பல இந்திய விளையாட்டுகளின் தோற்றம், அவைகளின் நுணுக்கங்கள், அவ்விளையாட்டுகளின் தொன்று தொட்ட சரித்திர வரலாறுகள் முதலியன கிரமப்படி ஆராயப்படவில்லை. கபடி, கோ கோ, போன்ற ஒரு சில இந்திய விளையாட்டுகளும், ஆசனங் கள், லெசிம்போன்ற ஒரு சில இந்தியப் பயிற்சிகளுமே சற்று ஆராயப்பட்டுள்ளன.

சிலம்பம், வரலாற்றுக்கு முற்பட்ட காலமுதல் தமிழ் நாட்டில் சிறப்பெய்தியிருந்தும், தமிழகத்திலுள்ள பல கிராமங்களிலும், பட்டணங்களிலும் அறிமுகமாயிருந்த போதிலும், ஆழ்ந்த ஆராய்ச்சிகள் இதுவரை நடத்தப்படாதது வருந்தத்தக்கதே!

---

7 Deobald B. Van Dalen, Elmer D Mitchell and Bruce L. Bennett: *A World History of physical Education* (Englewood cliffs, N, J. Prentice: Hall-Inc.,1956), P. 572

இந்நூலாசிரியர் பதினைந்துவருடங்களுக்கு மேற்பட்ட தனது ஆராய்ச்சியினால் இவ்வரிய நூலை உருவாக்கி யுள்ளார். முதல்முதல் இவ்வாசிரியர் ஆங்கிலத்தில் சிலம்ப நூலை 1971-ஆம் ஆண்டு மார்ச் மாதம் வெளியிட்டார். 1972-ம் ஆண்டு அந்த நூலைத் தமிழில் மொழித் திருப்பம்செய்து வெளியிடுகிறார்.

இந்திய நாட்டில் விளையாட்டுத்துறையில் டாக்டர் பட்டம் பெற்ற விளையாட்டு நிபுணர்களெல்லோராலும் சிலம்பக் கலை சிறப்புள்ளதென்று கணிக்கப்பட்டும், இந்திய விளையாட்டுக் கல்வி நிகழ்ச்சி நிரலில் இது முதலிடம் பெற வேண்டுமென அவர்களால் வற்புறுத்தப்பட்டுமிருப்பதால் இவ்வீர விளையாட்டுக் கலை ஒரு சீரிய உலக விளையாட்டாக அமையும் என்பதில் எள் அளவும் சந்தேகமில்லை.

**சிலம்பக் கலை வளர இலக்கியங்கள் தேவை**

இந்திய விளையாட்டுக் கல்வியின் பாடத் திட்டம் அண்மையில் 'National Fitness Corps Hand Book' என்ற புத்தகத்தின் மூலம் திருத்தி அமைக்கப்பட்டுள்ளது.

இப் புதிய விளையாட்டுக் கல்வி பாடத் திட்டம் விளையாட்டுக் கல்வித் துறையில் ஓர் புதிய காலத்தை ஏற்படுத்தக் கூடும்.

மேலும் இப் புதிய பாடத் திட்டத்தில், பள்ளிகளுக்காகக் குறிக்கப்பட்டிருக்கும் பல விளையாட்டுக்களின் அட்டவணை நிரந்தரமானவை அல்ல வென்றும், தேவையான சிற்சில மாற்றங்கள் வரவேற்கத்தக்கன என்பதும் குறிப்பிடத் தக்கது.[8]

மேற்கூறிய பாடத்திட்டத்தில், குழுவிளையாட்டுகள், கேளிக்கை விளையாட்டுகள், தனி ஆள் விளையாட்டுகள், நம் நாட்டு நடனங்கள், உடலை வலுப்படுத்தும் பயிற்சிகள், இருவர் விளையாட்டுகள், நீர் விளையாட்டுகள், மல்யுத்த முறைகள், முதலியன இடம்பெற்றுள்ளது போற்றற்குரியது. நமது இந்திய நாட்டின் பல மாநிலங்களில் காணப்படும் நம் நாட்டு விளையாட்டுகளும் இடம் பெற்றுள்ளன.

---

8 Government of India, Ministry of Education: *The National Fitness Corps Hand book for Middle and Higher Secondary Schools, 1965, p. VI.*

கம்பு விளையாட்டு நமது கல்விப் பாடத் திட்டங்களில் சிற்சில சமயங்களில் தோன்றியிருந்தது.[9, 10, 11, 12, 13, 14]. National Fitness Corps Hand Book - ன் பாடத் திட்டத்திலும் கம்பு விளையாட்டு இடம் பெற்றுள்ளது. ஆனாலும் அதற்குச் சிறப்பிடம் கொடுக்கப் படவில்லை. மேற்கூறிய அவல நிலைக்குக் காரணம் யாதெனில், நம் நாட்டிலே தோன்றிய இவ்வீர விளையாட்டின் பண்பாடும், இக் கம்பு விளையாட்டின் தற்காப்புத் தன்மையும், தகுந்த இலக்கியம் அல்லது நூல் மூலம் பிறர் விளங்குமாறு வெளி உலகிற்கு அறிமுகம் ஆகாமையே யாகும்.

நமது நடுவண் கல்வி அமைச்சகம் (The Ministry of Education) விளையாட்டுத் துறையிலுள்ள பல விளையாட்டுகளைப் பற்றிய புத்தகப் பதிப்புகளை ஊக்குவிக்குமாறு பல திட்டங்கள் தீட்டியுள்ளது[15] இதுபோல் நமது தமிழக அரசும் ஆராய்ச்சியோடு எழுதும் புத்தக ஆசிரியர்களுக்குப் பரிசு வழங்கியும், ஊக்குவித்தும் வருவது போற்றத் தக்கது. அத்தகைய நூல்களைத் தமிழக அரசே வெளியிட்டுப் பரப்ப வேண்டும் என்பது என் பேரவா

விளையாட்டுக் கல்வித் துறையில் போதிய ஆராய்ச்சியுடைய புத்தகங்கள் மிகக் குறைவே. அதிலும் குறிப்பாக நம் நாட்டு விளையாட்டுகளை நன்முறையில் விளக்கும் நூல்கள் மிக மிகக்

---

9 *Our Physical Activities* (Kandivli, Bombay : old students' Association, Training Institute for Physical Education, 1962), pp. 113 - 143 and 213 - 214.

10 Government of India, Ministry of Education : *Hand-book of Physical Education for School Boys*, Publication No. 638, 1962, pp. 140 - 144.

11 J. P. Thomas : *Physical Education Lessons* (Author, 43, C. I.T. Nagar, Madras - 16, 1964), p. 317.

12 D. C. Mujumdar : *Encyclopaedia of Indian Physical culture* (Reopura, Baroda: Good Companions, 1950). pp. 244 - 247, 267 - 269, 649 - 651 and 663 - 667.

13 Government of India, Ministry of Education : *Report of All - India Seminar on Physical Education for State Inspectors and University Directors*, 1959, p - 17.

14 Government of India, Ministry of Education, the Central Advisory Board of Physical Education and Recreation : *A National plan of Physical Education and Recreation*, Publication No. 237, 1956, Appendix - I, pp. 20, 31 and 42 : Appendix - II, pp. 20 and 25.

15 Ibid. pp. 58 - 61,

குறைவே. இப் பெருங் குறையை, நீக்க வேண்டிய பொறுப்பு எல்லா விளையாட்டு ஆசிரியர் ஆசிரியைகளையே சாரும்.

**சிலம்பக் கலையின் மறுமலர்ச்சி**

இச் சிலம்ப நூலை மேலை நாட்டவரும் போற்றுமாறு ஆங்கிலத்தில் படைத்த சிலம்பாசிரியர், தமிழ் நாட்டில் குறிப்பாகத் திருநெல்வேலி மாவட்டம், கன்னியாகுமரி மாவட்டம், ராமநாத புரம் மாவட்டம், மதுரை மாவட்டம், தஞ்சாவூர் மாவட்டம், திருச்சி மாவட்டம், சென்னை மாவட்டம் இவைகளிலுள்ள அனேக சிலம்பப் பயிற்சிக் கூடங்களுக்கு நேரில் சென்று அங்கே பள்ளி செல்லும் இளங் காளையரும், பள்ளி செல்லா இளங்காளையரும் இச் சிலம்பப் பயிற்சியை விரும்பிக் கற்பதைக் கண்ணுற்ருர். அங்குள்ள சிலம்ப ஆசிரியர்கள் சிலம்பக்கலை நன் முறையில் வளர்ச்சி யடையாததற்கு மூலகாரணம் சிலம்பக்கலை பற்றிய தெளிவான விளக்க நூல் இல்லாமையே எனச் சுட்டிக் காட்டினர். எனவே இத் தமிழகத்தில் மலர்ந்த இச்சீரிய சிலம்ப வித்தையை உலக மக்கள் நன்கு புரிந்து கொள்ளுமாறு ஆங்கிலத்திலும் தமிழிலும் விவரித்து எழுதி அச்சிட்டு,உலகில்பரப்புதல் இந் நூலாசிரியரின்குறிக்கோள்.

இந் நூல் ஆசிரியர் மதிப்புமிகு எப். வி. அருள், ஐ. பி. எஸ்., என்ற தமிழ்நாடு போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் அவர்களை, அன்னரது இல்லத்தில் பேட்டி கண்டார். மதிப்புமிகு எப். வி. அருள் அவர்கள், காவலர்களைப் பொறுத்தமட்டில் இச்சிலம்பப் பயிற்சிகளில் சில, கூட்டங்களை நல்முறையில் அடக்கிஆள மிகவும் பயன்படுவதாகக் கூறினர். அதுமட்டுமின்றி சிலம்பப் பயிற்சிகளில் சிலவற்றைக் காவலர்களின் தேவைகளுக்குத் தகுந்தாற்போல அமைத்துக்கொள்ள வேண்டும் என்றும், காவலர் பயிற்சிகளில் அவைகள் இன்றியமையாத இடம்பெற வேண்டுமென நடக்க விருக்கும் இன்ஸ்பெக்டர் ஜெனரல்களுக்கான கூட்டத்தில் வலியுறுத்தப்போவதாகவும் கூறினர்.

நமது தமிழகத்திரையுலக வானிலே தற்போது மின்னிக் கொண்டிருக்கும் நடிகர்களான எம். ஜி. ராமச்சந்திரன் அவர்களையும், ஆர். ஜெமினிகணேசன் அவர்களையும் இந்நூல் ஆசிரியர் முறையே சத்தியா ஸ்டுடியோவிலும் (இரண்டாம் உலகத்தமிழ் மகாநாடு சென்னையில் நடந்த சமயம்,) ஆர். ஜெமினி கணேசன் அவர்களது இல்லத்திலும் பேட்டி கண்டார்.

சிலம்பச் சண்டைகளில் நன்கு தேர்ச்சிபெற்ற எம். ஜி. ராமச் சந்திரன் அவர்களும், சிலம்ப வித்தையைப் புதுக்கோட்டையில் ஆர்வத்தோடு கற்ற ஆர். ஜெமினிகணேசன் அவர்களும் தமிழ்த் திரையுலகில் புகைப்படமாக்கப்பட்ட பல சிலம்பச் சண்டைகள் பார்ப்போரின் மேனியை மயிர்கூச்செறிய வைப்பதாகவும் கூறினர். அதுமட்டுமின்றி, திரையுலகில் போர்க் காட்சிகளைத் திரைப் படம் செய்ய பல சண்டைப் பயிற்சிக்கூடங்கள் இருப்பதாகவும், அவைகளில் சிறப்பாகச் சிலம்பப்பயிற்சியும் கற்றுக் கொடுக்கப்படுவதாகவும் கூறினர்.

சிலம்பக்கலை மறுமலர்ச்சிபெற்று ஆல்போல் தழைத்து, உலகின் எல்லா நாடுகளிலும் பரவும்படிச் செய்வது தமிழரின் கடமையாம்.

---

# அத்தியாயம் 2

சிலம்ப விளையாட்டு எனப்படும் கம்பு விளையாட்டு சங்க காலத்திற்கு முன்பே தமிழகத்தில சீரிய முறையில் வளர்ச்சியுற்றிருந்தது. சிலம்பம் என்ற தமிழ்ச் சொல்லின் தோற்றத்தைப் பற்றிய ஆராய்ச்சி சுவையுடையதாயிருக்கிறது.

இரு கோல்விளையாட்டுக்காரர்கள், போட்டியில் பங்குகொள்ளுங்கால், நன்கு வளைந்து கொடுக்கக்கூடிய ஒரே சீரான குறுக்களவுள்ள, அன்னாரின் நெற்றிவரை எட்டக்கூடிய சிலம்பக் கோல்கள் ஒன்றை ஒன்று தாக்குவதாலும், இரு கோல்களும் ஆகாயத்தில் அதிவேகமாகச் சுழற்றப்படுவதாலும், எழும் ஓசை அல்லது 'சிலம்பல்' என்ற ஒலி சிலம்பம் என ஆகுபெயராக மருவி அக்கம்பிற்குப் பெயராயிற்று எனக்கொள்ளலாம்.

இங்ஙனம் சிலம்பல் என்ற ஒலியின் அடிப்படையில் எழுந்த தமிழ்ச்சொல், தமிழ் இலக்கணப்படி திரிந்து 'சிலம்பம்' எனச் சிறப்புச் சொல்வடிவு பெற்றது.[16]

டாக்டர் மு. வரதராசனார் அவர்களின் ஆராய்ச்சிப்படி 'சிலம்பு' என்ற சொல், மலையை அல்லது சிலம்பு என்ற காலணியை அல்லது சிலம்பு (ஓசை எழுப்பு) என்ற வினைச் சொல்லைக் குறிக்கும். மேலும் அவர் சிலம்பம் என்பது பழங்காலத்தில் மலைநாட்டில் தோன்றிய விளையாட்டாக இருக்கலாமெனவும் எண்ணுகிறார். ஏனெனில் சலசல என ஒலித்து மலைப்பாறைகளின் ஊடே நுரைதள்ளிக் குதித்து ஓடும் அருவிகளையும் சிற்றோடைகளையும், மரக்கிளைகளில் அமர்ந்து பாடிப் பறந்திடும் பற்பல பறவைகளையும், காடுவாழ் மக்கள் அஞ்சுற உறுமிடும் சிங்கம் புலி, சிறுத்தை முதலிய வன விலங்குகளையும் உடைய ஒலி நிறைந்த மலைக்கு மறு பெயர் சிலம்பு என்பதாம். ஆகவே மலைநாட்டினர் கற்ற இவ் வன விளையாட்டு சிலம்பம் எனப் பெயர் பெற்றிருக்கலாம் என்பர்.

---

16 Letter from N. Sethuragunathan, Professor of Tamil, V. H. N. Senthikumara Nadar College, Virudhunagar, October 5. 1966.

அல்லது அது தாளங்களோடு பயிற்றுவிக்கப்பட்ட ஓர் விளையாட்டாக அமைந்திருக்கலாமென்றும், அதனால் அது அப்பெயர் பெற்றிருக்கலாமென்றும் டாக்டர் மு. வரதராசனார் விரித்துரைக்கிறார்.[17]

சலசல என ஒலி எழுப்பும் காலணிகளாகிய சிலம்புகளை அணிந்து தமிழகத்தில் கோல்விளையாட்டு பயின்றதாகச் சிலம்ப வல்லுனர்கள் கருத்து. அங்ஙனம் அவர்கள் வினைத்தாள்களில், சுட்டிக்காட்டி யிருப்பதிலிருந்து அவ்விளையாட்டிற்குச் 'சிலம்பம்' என்பது பெயராக அமைந்திருக்கலாமெனவும் எண்ண இடமுண்டு என்று இந்நூலாசிரியர் கருதுகிறார்.

பதினாறும் நூற்றாண்டின் தொடக்க காலத்திலும் சிலம்ப விளையாட்டுக்கலை உன்னத வளர்ச்சியுற்றிருந்தது என்பது பரஞ்சோதி முனிவர் எழுதிய திருவிளையாடற் புராணத்திலிருந்து[18] தெளிவாகிறது. திருவிளையாடற் புராணத்தில் 'விஞ்சைக் கூடங்கள்' என்னும் 'சிலம்பக்கூடங்கள்' இருந்ததாகவும், அச்சிலம்பக்கூடங்களில் போர்ப்பயிற்சிகள் முறையாகக் கற்பிக்கப் பட்டன வென்றும், சிலம்பப் பயிற்சியும் முறைப்படி பயிற்றுவிக்கப் பட்டதெனவும் யூகிக்க இடமுண்டு.

புதுக்கோட்டை போன்ற இடங்களில் சிலம்பக் கூடத்திற்கு, "கரடிக்கூடம்" என்றும் பெயர் வழங்கப்பட்டதாகத் தெரிகிறது.

திருவண்ணாமலையை அடுத்த செஞ்சிக்கோட்டையினுள், படைக்கலப் பயிற்சிக்காகக் கட்டப்பட்டுள்ள சிலம்பக்கூடம்[19] இந்நூல் ஆசிரியரின் சிந்தனைக்குத் தீபமாக அமைந்ததுமட்டுமின்றி, பழங்காலத்தில் தமிழ் அன்னை பாலூட்டிச் சீராட்டிக் கொஞ்சிவளர்த்த சிலம்ப விளையாட்டின் சிறப்பை அனைத்து உலகிற்கும் அள்ளிவீசும் திருவிளக்காகக் காட்சியளிக்கிறது.

---

17 Letter from Dr. M. Varadarajan, Professor of Tamil, university of Madras, October 17, 1966.

18 பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடல் புராணம் மூலமும் உரையும் (ராயப்பேட்டை, சென்னை; முருகவேல் புத்தகசாலை, 1937), 659.

19 தமிழ்ப் பாடநூல் ஆறும் வகுப்பு, தமிழ்நாட்டுப் பாட நூல்நிறுவனம் (Eagle Press, Madras 1., 1971 P. 99)



சிலம்பக்கூடம்: செஞ்சிக்கோட்டை செஞ்சி.

சிலம்ப வித்தையின் வரிசை முறைகள் கலைக்களஞ்சியத்தில் [20] "சிலம்பம்" என்ற தலைப்பின் கீழ்த் தொகுக்கப்பட்டிருக்கின்றன. அதில் திருவிளையாடற்புராணத்தையும், சிலம்பத்தையும் தொடர்பு படுத்தி எழுதியுள்ளது குறிப்பிடத்தக்கது. கலைக்களஞ்சியத்தில் கொடுக்கப்பட்டுள்ள சிலம்பம் பற்றிய கட்டுரையை அட்டவணையில் (Appendix – A) காண்க.

பார்ப்பவர் அஞ்சும் வண்ணம் சிலம்பக்கம்பைப் பயங்கர வேகத் தோடுசுழற்றி, தங்களது திறமையை நாடக மேடையில் அரங் கேற்றம் செய்த வீர நடிகர்களும் பதினேழாம் நூற்றாண்டில் இருந்தனர். முக்கூடற்பள்ளு என்ற நூலில் சிலம்பம் பற்றிய விவரங்கள் காணக்கிடக்கின்றன. [21] இந்த நாடக நூலின் 10-வது பாட்டில் நாடக அரங்கில் பள்ளர் ஒருவர் வந்து நிற்கும் காட்சி யைக்கூறுகின்ற ஆசிரியர் பாடலில் பள்ளர் குறுக்கில் (இடையில்) வழுதடி சேர்த்து இறுக்கிய கச்சையணிந்திருந்தார் என்றும், தடிசுற்றி ஏப்பமிட்டு அடிவைத்துக்கொண்டு வந்தாரென்றும் கூறுகின்றார்.

கறுக்குங் கடாய் மருப்பின்
முறுக்கு மீசையும்—சித்ரக்
கத்தரிகை யிட்ட வன்னக்
கன்னப் பரிசும்

குறுக்கில் வழுதடி சேர்த்
திறுக்குங் கச்சையும்--செம்பொற்
கோலப் புள்ளி உருமாலும்
நீலக் கொண்டையும்

சறுக்குந் தொறுங் குதிப்பும்
சுறுக்குந் தலை யசைப்பும்
தடிசுற்றி ஏப்பமிட்டே
அடிவைப்பதும்

மறுக்கும் மதுவெறி கொண்டு
உறுக்குஞ் சிரிப்புந் தோன்ற
வடிவழகக் குடும்பன் வந்து
தோன்றினனே.

---

20 மா. பா. "சிலம்பம்" கலைக்களஞ்சியம், [சென்னை தமிழ் வளர்ச்சிக் கழகம், 1956] iv pp 699 - 700

21 Sethuragunathan, loc. cit.

மேற்கூறிய பாடலில் நாடக அரங்கில் வரும் உறுப்பினன் 'தடிசுற்றி ஏப்பமிட்டு அடிவைப்பதும்' என்று சிலம்பக் கலையின் சிறப்பினை ஆசிரியர் குறிப்பிட்டார். அரங்கில் தோன்றுபவன் சிலம்பம் வீசிக்கொண்டு தோன்றுவது வழக்கிலிருந்தது இருநூறு ஆண்டுகட்கு முன்பு நடந்த நாடகங்களில் ஏற்படும் இப்படிப்பட்ட தோர் காட்சியை நாம் பாடலின்மூலம் தெரிந்து கொள்ளுகிறோம். இந்நூலில் 81-ம் பாடலில்,

'கண்டார் பயப்படத்தன் கையிற் சுழற்றுதடி
செண்டாடிக் கொண்டு பள்ளன் சென்றழைத்த சொற்படியே
தண்டாத சங்கத் தமிழழகர் முக்கூடல்
கொண்டாடுங் கோனேரிக் கோன்வந்து தோன்றினனே'

என ஒரு பகுதி வருகின்றது.[22]

இதில் ஆசிரியர் "கண்டார் பயப்படத்தன் கையிற் சுழற்றுதடி செண்டாடிக்கொண்டு" பள்ளன் போய்க் கோனரை வயலுக்கு ஆட்டுக்கிடை வைக்க அழைத்தான் என்று குறிப்பிடுகின்றார். இதுவும் நாடக அரங்கில் தோன்றும் பிறிதொரு காட்சியாகும். செண்டிப்பு என்பது சிலம்ப விளையாட்டின் காலடி வரிசை முறையில் ஒன்று என்பது காண்க.

முத்துப்பட்டன் எனும் வீரன் சிலம்பப்போர், குதிரையேற்றம் யானை ஏற்றம் முதலிய வீரக்கலைகளைக் குறைவறக் கற்றான் என்று முத்துப்பட்டன் கதை[23] பறை சாற்றுகிறது.

பாடல்

*மல்லடவு சிலம்பத்தொழில் வாளின்வித்தை மோடிவித்தை*
*வில்லுவித்தை குறளிவித்தை மாயவித்தை காயவித்தை*
*ஆனையேற்றம் குதிரையேற்றம் அளவிறந்த தொழில்படித்தான்*

ஆய கலைகள் 64 என்றும், அவைகளைக் குறைவறக் கற்றல் நன்று என்றும் பழங்கால மக்கள் கருதினர். மேற்கண்ட முத்துப் பட்டன் கதைக் குறிப்பிலிருந்து, பண்டைக் காலத்தில் வீரர்களுக்கு உடல் வலிமைக்காகவும், படைக்கலப் பயிற்சிக்காகவும் சிலம்பம் கற்றுக் கொடுக்கப்பட்டதென்பது உறுதியாகிறது.

---

22. Ibid.
23. கு. ஆறுமுகப்பெருமாள் நாடார்: முத்துப் பட்டன் கதை (16, ஹைரோடு, திருநெல்வேலி ஜங்ஷன்: சங்கு நூலகம்), P.2.

பதினெட்டாம் நூற்றுண்டின் இறுதியில் ஏற்பட்ட 'மாவைப் பள்ளு'[24] எனும் அச்சிடப்படாத நூலில் (Papyrus manuscript) சிலம்பக் கலையின் இரு சிறப்பான அடி வரிசைகளாகிய நேர் அடியும், சுழல் அடியும் குறிக்கப்பட்டுள்ளன. இந்த மாவைப்பள்ளு என்ற ஏட்டுச் சுவடியில்,

"வட்டணை திரிவான் இல்லாத
நட்டணை புரிவான்"

என்ற ஓர் பாடல் பகுதி இடம் பெறுகிறது. இதிலுள்ள சொற்களான 'வட்டணை,' 'நட்டணை' என்ற சொற்கள் குறிப்பாகச் சிலம்ப விளையாட்டின் சிலவகை ஆட்டங்களைச் சுட்டுகின்றன.[25]

தொல்காப்பியச் சேனுவரையர் உரையில் - "தட்டுப்புடைக்கண் வந்தான்" என்று ஆகுபெயருக்கு மேற்கோள் காட்டியுள்ளனர். தட்டுதலும், புடைத்தலும் ஆகிய தொழில் நடக்கும் இடத்திற்கு வந்தான் என்பது பொருள். இது தொழிலாகு பெயர்.

தட்டுதல் — கம்பைத் தட்டுதல்
புடைத்தல்— எதிரியைப் புடைத்தல்

ஆகவே 'தட்டுப் புடைக்கண் வந்தான்' என்பது சிலம்பம்விளையாடும் இடத்திற்கு வந்தான் எனப் பொருள்படலாம் எனக் கூறுதல் மிகையாகாது.[26]

படைக்கலப் பயிற்சிக்கு மிகவும் அடிப்படையானதும், மிகவும் வேண்டற்பாலதும் சிலம்பப் பயிற்சி எனப் பதார்த்த மஞ்சரி[26] அறிவிக்கிறது. மேலும் வாட்பயிற்சிக்கு முன்னேடியாக அமைவது சிலம்பப் பயிற்சி எனக் கலைக்களஞ்சியம்[27] சுட்டும்.

தந்திரமும், திறமையும் சிலம்ப விளையாட்டில் மிக முக்கிய இடம்பெறுமென்றும், அதனல் சிலம்ப விளையாட்டுத்தீரர்கள் மிகவும் சூழ்ச்சித்திறன் உள்ளவர்களாகவும், திறமைசாலிகளாகவுமிருப்பர் எனத் திருப்புகழ்[28] என்ற நூல் வலியுறுத்துகிறது.

24. Sethuragunathan op.cit.
25. Ibid.
26. Ibid.
27. கலைக்களஞ்சியம் op. cit
28. Letter from P. Rajadurai, professor of Tamil, Aditanar College, Tiruchendur, February 15, 1967.

இதற்கேற்ப, தமிழ் அகராதிகளில் சிலம்பம் என்ற சொல்லிற்குப் 'போட்டிகளில் திறமை' என்றும், பிறரை 'அஞ்சவைக்கும் செயல்' என்றும், 'தந்திரோபாயம்' என்றும், 'கபடு சுழற்றல்' என்றும் பல பொருள்கள் கொடுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத் தக்கவையாம்.

கி. பி. 1760 முதல் கி. பி. 1799 வரை அஞ்சா நெஞ்சம்படைத்து அரிமாப்போல வாழ்ந்து வந்த வீரபாண்டியக் கட்டப்பொம்மனின் படைவீரர்கள் ஆங்கிலேயப் படைகளோடு கைகலப்புப் போர்கள் (Battles) புரிந்த சமயங்களில், ஆங்கிலேயர் மேல் தங்களுக்கிருந்த போர்த் திறமையைச் சிலம்பக்கம்பின் சுழற்றுதலால் பறைசாற்றினர்.

"பாஞ்சாலம் குறிச்சி வீரபாண்டியக் கட்டப்பொம்மன்" என்ற நூல்[29] கட்டப்பொம்மனின் படைவீரர்களின் சிலம்பவிளையாட்டுச் சாதுரியத்தைப் பின்வரும் பாடலில் அமைத்துள்ளது.

"கொட்டு கொட்டென்றுமே பொட்டிப் பகடையும்
    கொல்வேன் என்றுன் தடிக்கம்பாலே
சட்டுச் சட்டென்று சிலம்ப வரிசைகள்
    தட்டிவிட்டான் அங்கே பாதர் வெள்ளை"

வீரபாண்டியக் கட்டப்பொம்மனின் படை வீரர்கள் ஆங்கிலேயப் படைகளைப் பல கைகலப்புப் போர்களில் முறியடித்தபோதிலும் காலம் செல்லச் செல்ல ஆங்கிலேயரின் நவீன துப்பாக்கிக் குண்டுகள் அவர்களது சிலம்பத் திறமையைப் பயனற்றதாக்கின.[30]

திருநெல்லிவேலி ஜில்லாவிலுள்ள, வடலிவிளை எனும் ஊரில் தோன்றிய செம்புலிங்க நாடாரின் வீரச் செயல்களைக் கேள்விப்படாதார் இரார். இவரின் வீரச் செயல்களைச் 'செம்புலிங்கம் கதை' யில் ஏமி கார்மிக்கேல் அம்மையார் தெளிவுபடக் குறிப்பிட்டுள்ளார். அந்நூலில் வீரசெம்புலிங்கம் சிலம்ப வீச்சுகளிலும், மல்யுத்தங்களிலும் திறமை படைத்தவரென்று குறிப்பிடுகிறார். அதுமட்டுமின்றித் தன்னைப் போலவே தனது தோழர்களும் வீரதீர பராக்கிரமமுடையவர்களாக விளங்க வேண்டுமென்பது இவன் ஆசை என்றும்குறிப்பிடுகிறார். கோல்வீச்சு, கம்படி முதலிய வீரவிளையாட்டுகளை முறைப்படி இளங்காளையர்களுக்குக் கற்பிக்கும் ஆசானாகவும் இருந்தான் என்று அவனைப் பற்றி ஏமி கார்மிக்கேல் அம்மையார்

29 துர்காதாஸ், எஸ். கே. சாமி, எஸ். வழித்துணை ராமன்: பாஞ்சாலம் குறிச்சி வீரபாண்டியக் கட்டப்பொம்மன் (சென்னை 24- பிரேமா வெளியீடு, 1958), PP. 25, 233, 248

30 Ibid

புகழ்ந்துரைக்கிருர்[31]

பதார்த்த குண சிந்தாமணி என்ற புராதன மருத்துவ நூலில், சிலம்பப் பயிற்சியினுல் ஒருவரின் உடல் வலுவடையுமென்றும், கபத்தினுல் உண்டாகும் வியாதிகள் பறந்திடுமென்றும், வாயுவினுல் ஏற்படும்கோளாறுகள் நீங்குமென்றும், மலச்சிக்கல் நீங்குமென்றும் உடலில் நல்லபசி ஏற்படுமென்றும் வயிற்று வலிகள் தோன்ருதொழியும்என்றும் கிரமமாகக் கொடுக்கப்பட்டுள்ளது. அம்மருத்துவ நூலில்காணும் பாடலின் பகுதி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

"சிலம்பமுதல் மல்யுத்தம் தேசிநடை கொள்ளின்
பலம் பரவும் மெய்யிறுகும் பன்னத்–துலங்குபசி
உண்டாம் கபவாத மோடுவலி சூலையும்போம்
பண்டாம் மலமிறங்கும் பார்"[32]

தமிழகத்தில் இடைக்காலத்தில் கூடச் சிலம்பப்பயிற்சியினுல் ஏற்படும் உடல் நன்மைகளையும், நலமிகு வாழ்வையும் மக்கள் நன்கு புரிந்திருந்தனர் என்பதற்கு மேற்கூறிய பாடல் நல்லதொரு சான்ருகும்.

சீகன்பாகு,[33] பேப்ரிசியஸ்[34] எனும் மேலை நாட்டுக் கிறிஸ்துவப் பாதிரியார்கள் ஆங்கில விவிலிய நூலின் புதிய, பழைய ஏற்பாடுகளை (New and Old Testaments) முறையே 1715 A. D, 1782 A. D, யில் நீலக்கடலலைகள் பண்பாடும் தரங்கம்பாடியில் தமிழில் மொழித் திருப்பம் செய்தபோது 'Beating in the air' 'Play' என்ற ஆங்கிலச் சொற்களுக்கு மொழி பெயர்ப்பாகச் 'சிலம்பம்' என்ற ஒரே சொல்லைப் பயன்படுத்தினர். இதிலிருந்து நாம் உய்த்தறிதல் என்னவெனில் விளையாட்டு (Play) என்ருலே, அவ்வமயம் தமிழகத்தில் சிலம்ப விளையாட்டைத்தான் குறித்தது என்பதாம். மேற்கூறிய இரு மொழி பெயர்ப்புகளையும் இங்கே காணலாம்.

1 கொரிந்தியர் 9: 26

ஆதலால் நான் நிச்சயமில்லாதவனுக ஓடேன். ஆகாயத்தை அடிக்கிறவனுகச் சிலம்பம் பண்ணேன்.

---

31 கார்மிக்கேல் ஏமி, செம்புலிங்கம் கதை : மதராஸ்-7 சுவிசேஷ ஊழியநூல் நிலையம்

32 Letter from G. Devaneya Pavanar, professor, Annamalai University

33 Bartholomew Ziegenbalg (Trans) New Testament (Tamil) Tranquebar: Tranquebar Mission, 1715, 1 Cor 9. 26.

34 Fabricius (Trans) Old Testament (Tamil) Tranquebar : Danish Mission. 1762 II Samuel 2. 14

2 சாமுவேல் 2 : 14

அப்னேர் யோவாபை நோக்கி: வாலிபர் எழுந்து நமக்கு முன்பாகச் சிலம்பம் பண்ணட்டும் என்றான். அதற்கு யோவாப்: அவர்கள் எழுந்து அப்படிச் செய்யட்டும் என்றான்.

ஆகாயத்தில் சிலம்பம் பண்ணுதபடி, எதிரியின் உடலில் குறிப்பிட்ட பகுதியில் சிலம்பம் செய்தல் தான் திறமை என்று ஐரோப்பிய பாதிரியார்களும் அறிந்திருந்தனர் என்றும் மேற் கூறிய முதலாம் வசனத்திலிருந்து தெரியவருகிறது. அக் காலங் களில் தமிழ் மக்கள் சிலம்ப விளையாட்டு முறைகளின் உச்ச நிலையை நன்கு கற்றுத் தேர்ந்திருந்தனர். மேலும் அக் காலத்தில் சிலம்பம் கேளிக்கை விளையாட்டாகவும் (Recreational Activity) அமைந்திருந்தது. அதாவது 'அலங்காரச் சிலம்பம்'' என்ற பலவகை அழகிய வீச்சுகள் அடங்கிய சிலம்பம் திருவிழாக்களில் ரசிகர்களால் ரசிக்கப்பட்டது உண்மையே.

இக் காலத்தில் பேச்சு வழக்கிலிருக்கும் சிலம்பம்பற்றிய சில பழமொழிகளைக் கீழே காணலாம்.

1 "கூத்தாடிச் சிலம்பம் போருக்கு நில்லாது"

அதாவது பார்வையாளரை மகிழ்வூட்டும் நோக்கு கொண்டு திருவிழாக் காலங்களிலும் பிற சமயங்களிலும் செய்து காட்டப் படும் பல்வகை வீச்சுகளும், காலடி வரிசைகளும் கொண்ட அலங்காரச் சிலம்பம் அல்லது அழகுச் சிலம்பமானது போர்க் காலத்தில் போரிடப் பயன்படாது என்பது உண்மையே.

2 ஆகாயத்தில் சிலம்பம் பண்ணுதே!

அதாவது எதிரியை மடங்கடிக்க போர்க்கவசம் தரித்து ஆயத்தமாயிருக்குங்கால், எதிரியை விட்டுவிட்டு ஆகாயத்தில் கம்பை வீசுவதால் பயன் என்ன? என்பதே!

3 ''ஆசான் இடறிவிழுந்நால், அதுவும் ஒரு வரிசையே!''

சிலம்பம் குறைவறக்கற்ற சிலம்பாசிரியர் ஒருவர், சிலம்பப் போட்டியின்போது, கீழே இடறி விழுந்தாலும்கூட, 'அவர் விழுந்துவிட்டார்' என எள்ளி நகையாட முடியாதாம்! ஏனெனில் கீழே இடறி விழுந்தாலும்கூட, தரையில் விழுந்த நிலையி லிருந்தும், சிலம்பக் கம்பினால் அவர் பல வித்தை புரிந்து எதிரியை எளிதில் மடக்கமுடியுமாம். அதாவது குருவை ஒருபோதும் அவமதித்தல் தகாது என்பதையே இப்பழமொழி சுட்டுகிறது.

4 "நான்தான் கொப்பன் நல்லமுத்து பேரன்
வெள்ளிச் சிலம்பெடுத்து விளையாட வாரேன்
தங்கச் சிலம்பெடுத்து தாலிகட்ட வாரேன்"

மேற்படி பழமொழியின் மூலம், ஒருவன் தனது குலவித்தையே சிலம்பம் எனக் கருதியதாகவும், தான் வெள்ளிப்பூண் கட்டிய சிலம்புகொண்டு விளையாடத் தயாராக இருப்பதாகவும், தனது சிலம்பு விளையாட்டுத் திறமையினால் நல்ல மங்கைக்கு மாங்கல்ய மிடத் தயாராக இருப்பதாகவும் கூறுவதுபோல் தோன்றுகிறது.

இப் பழமொழிகளின் ஆங்கில மொழிபெயர்ப்பு இந்நூலின் இறுதியில் தொகுக்கப்பட்டுள்ள அட்டவணை (Appendix) யில் கொடுக்கப்பட்டுள்ளது.

எஸ். குருசாமி என்ற சிலம்பாசிரியரால் தமிழில் அச்சிடப் பட்ட ஒரு சிறு புத்தகக் கைப்பிரதி (Pamphlet)[35] சிலம்பக் கலையைப்பற்றி சிறிது கூறுகிறது.

அதில் சில சிலம்பப் பயிற்சி முறைகள் விளக்கப்பட்டுள்ளன. டாக்டர் ஜே. பி. தாமஸ் (ஒய். எம். சி. ஏ. கல்லூரித் தலைவர், சென்னை) என்ற உடற்கல்வி வல்லுநர் தனது நூலாகிய Organisation of Physical Education[36] என்ற நூலில் நம் நாட்டு விளையாட்டுகளைக் குறிப்பிடுங்கால் சிலம்பத்தைப் பற்றியும் குறுப்பிட்டுள்ளார்.

கே. ராஜகோபாலன்[37] என்ற உடற் கல்வித்துறையின் வர லாற்று ஆசிரியர், சிலம்பம் என்பது தமிழ்நாட்டிலுள்ள தற்காப்பு விளையாட்டு என்று தமது விளையாட்டு வரலாறு நூலில் எழுதி யுள்ளார்.

கம்பு விளையாட்டு உலகின் பல்வேறு தேசங்களிலும், பல்வேறு வகைகளில் நடந்திருந்தது உண்மையே. இங்கிலாந்து தேசத்தில் கழி விளையாட்டு வளர்ந்திருந்தது என பல கதைகள் மூலமாகவும்

---

35 எஸ். குருசாமி, சிலம்பக்கலை (தூத்துக்குடி: ஸ்ரீ முருகவேள்யோகாசன, ஆஸ்ரமம், 1964)

36 J. P. Thomas, Organisation of Physical Education (Author, 43, C. I. T. Nagar, Madras 16, 1961) P 15.

7 K. Rajagopalan A Brief History of Physical Education in *India* (Delli-6 Army publishers, 1962), pp. 15, 16, 89 and 92

ஆங்கிலக் கலைக்களஞ்சியங்களான Encyclopaedia Britannica [38],[39] மூலமாகவும் தெரிந்துகொள்கிறோம்.

ஆயினும் 'சிலம்பம்' என்ற பெயரில் தமிழ்நாட்டில் மலிந்து காணக்கிடக்கும் காலடி வரிசைகள், அடி வரிசைகள் அடங்கிய தொகுப்பு வேறெந்த நாட்டிலும் விஞ்ஞான முறையில் அமைய வில்லை என்று கூறலாம்.

இங்கிலாந்து தேசத்தில் "நைட்ஸ்" என்ற வீரர்கள் பெருமளவில் தோன்றிய அந் நாட்களில் "குவாட்டர் ஸ்டாப்" என்ற பெயரில் கற்பிக்கப்பட்ட கமபு விளையாட்டு ஒரு அளவு வளர்ந் தோங்கி வாள் சண்டைக்கு அடிகோலியதாகக் கூறப்படுகிறது. [40],[41] வாள் பயிற்சி ஆங்கிலேய மக்களது கவனத்தை இழுத்ததால் குவாட்டர் ஸ்டாப் எனும் கம்பு விளையாட்டு கீழ்மையடைந்து வளர்ச்சி குன்றியது.

இராஜ் அகமதுகான் தனது விளையாட்டு வரலாறு நூலில், நமது இந்திய நாட்டில் வேத காலத்தில் 12 வயது அடைந்த ஒவ்வொரு வாலிபனுக்கும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள ஓர் தடி கொடுக்கப்பட்டதாகவும் அத் தடி கொடுக்கப்பட்ட சடங்கிற்கு 'தண்டப் பிரதனு' என்று பெயர் கொடுக்கப்பட்டதாகவும் குறிப்பிடுகிறார் [42]

குடகு நாட்டிலுள்ள மலைநாட்டு மக்கள் 'பரியக்காளி' என்று பெயர் கொண்ட வீர நடனம் புரியுங்கால் தங்கள் வலது கையில் நீண்ட வளையும் தன்மையுள்ள மூங்கில் பிரம்பையும், இடது கையில் கேடயம் ஒன்றையும் ஏந்தியிருந்தனரென ஐ. எம். முத்தண்ணு தமது நூலில் [43] குறிப்பிட்டுள்ளார். இது குடகு நாட்டுக் கம்பு விளையாட்டின் சிறப்பை எடுத்துக் காட்டுகிறது. Encyclopedia of Indian Physical Culture [44] என்ற புத்தகத்தில் ஒரு சில

---

38 "Quarter-Staff," Oxford Junior Encyclopaedia, IX 1956), 397 and 430.

39 "Quarter-Staff," ncyclopaedia Britannica.X VIII, (1957), 830

40 Ibid.

41 "Quarter-Staff" loc cit.

42 Eraj Ahmed Khan : *History of Physical Education* (Patna - 4 : Scientific Book Company, 1964), p. 318.

43 I. M. Muthanna : *A Tiny Model State of South India*, Coorg : (Tiny Spot 1953), p 270

44 D. C. Mujumdar : *Encyclopedia of Indian Physical Culture* (Reopura, Baroda: Good Companions, 1950), p. 244.

கம்பு விளையாட்டுப் பயிற்சி முறைகள் நன்கு விளக்கப்பட்டுள்ளன. அங்ஙனமே 'Our Physical Activities[45] என்ற புத்தகத்திலும் வட இந்தியாவிலுள்ள சில கம்பு விளையாட்டுப் பயிற்சி முறைகள் கொடுக்கப்பட்டுள்ளன.

மலையாள நாட்டில் பயிலப்படும் (நெடுவடி) எனும் கம்பு விளையாட்டைப் பற்றி களரிப் பயிற்று[46] என்ற மலையாளப் புத்தகத்தில் நாயர் என்ற ஆசிரியர் விவரித்துள்ளார். அப்புத்தகத்தில் பல மலையாள நாட்டு விளையாட்டுகளைப் பற்றிய விளக்கங்கள் கொடுக்கப்பட்டிருப்பதால், நெடுவடி (நீண்ட கழி) விளையாட்டின் முறைகள் அதிக அளவில் விவரிக்கப்படவில்லை.

"The Walking Stick method of Self Defence" என்ற ஆங்கில புத்தகம்[47] ஒன்று ஓர் இந்திய காவல் அதிகாரியால் எழுதப்பட்டுள்ளது. அதில் ஓர் காவலர் கட்டக் கம்பைத் தனக்குப் பயன்பட எம்முறையில் சுழற்ற வேண்டுமென்றும், ஓர் சாதாரண ஆள் தன்னை, திடீரென ஏற்படும் ஓர் ஆபத்திலிருந்து காப்பாற்றுதல் எவ்வாறு என்றும் கொடுக்கப்பட்டுள்ளது. கட்டக்கம்பு பயிற்சி முறைகளும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. ஆயினும் அப் பயிற்சி முறைகள் கட்டக் கம்பின் உதவியால் ஒருவன் தன்னைப் பாதுகாப்பது எவ்வாறு என்று நல்ல முறையில் விளக்கின போதிலும், நெற்றி முட்டுக்கம்பின் சிறப்பையாவது அதை உபயோகிக்கும் சிறப்பையாவது, முறைகளையாவது எடுத்துக் கூறவில்லை. மேலும் கட்டக் கம்பு பொழுது போக்கிற்காக எவ்விதம் உபயோகப்படுத்தப் படலாமென்றும், கட்டக் கம்புப் போட்டிகள் நடத்துவது எப்படி எனவும் கூறவில்லை.

விண் வெளிக் காலத்திலிருக்கும் நாம் பந்தயத்தில் பொர வந்திருக்கும் கார்கள், (உந்து வண்டிகள்) போட்டிக் குதிரைகள் இவைகளுக்குச் சிறப்புப் பெயர்கள் வைத்து அழைப்பது வழக்கம். இதுபோல சிலம்ப விளையாட்டு தழைத்தோங்கி மலர்ந்திருந்த

45 *Our Physical Activities* (Kandivli, Bombay : old Student's Association, Training Institute for Physical Education, 1962), pp. 113 – 143, and 213 – 214.

46 Chirakkal T. Sreedharan Nair : *Kalaripayat* (Author, Chirakkal, 1963), p. 13–

47 An officer of the Indian Police : *The "Walking clkiSt defence* (London : Athletic Publications,Ltd.,), p. VIII *Stick Method of Self*

17 – ம், 18 – ம் நூற்றுண்டிலும், அதற்கு முன்னும் சிலம்ப வீச்சுகளில் வல்லுனர்கள் தங்கள் தங்கள் சிலம்பக் கம்பிற்கு சிறப்புப் பெயர்களைச் சூட்டிப் பெருமிதம் கொண்டனர்.

பழங்காலத்து, ஐரோப்பிய நாட்டினரின் சடங்காச்சாரப்படி, மார்க் அந்தோணியின் வீரவாளுக்கு 'பிலிப்பன்' என்றும், ஆர்தர் அரசனின் வீரவாளுக்கு 'எக்ஸ்காலிபன்' என்றும்சிறப்புப்பெயரிட்டு அழைத்தது போல, நம் தமிழ் நாட்டிலும் வீர சிலம்பிற்குப் பேர் சூட்டுதல் மரபாயிருந்தது வியப்பன்று.

"கடிநாய் விலக்கும் கண்ணுளன் கை கம்பு"
"பரங்கியரைப் பயப்படுத்தும் படைவீச்சு பயங்கர கம்பு"
என்றும், பற்பல பெயர்களைக் கம்பிற்குச் சூட்டினர்.

சிலம்பின் சிறப்புப் பெயரை ஈரடிப்பாட்டில் வைத்துப் பாடுவது நம்நாட்டு மரபாம். அக்காலத்தில் சிலம்பு புரிந்த வீரச்செயலை தெம்மாங்குப் பாடலில் புகுத்திப் பாடுவோரும். நிறைந்திருந்தனர். சிலம்புக் கம்புகளை மிகுந்த கவனத்தோடும், பயபக்தியோடும் வைத் திருப்பவர் தற்காலத்திலும் உளர். சில அனுபவமுள்ள சிலம்ப வீரர்கள் உரைப்பது என்னவெனில், ஒரு சிலம்பப் போட்டி ஆரம்ப மாகுமுன் ஒரு போட்டியாளர் அடுத்த போட்டியாளரின் கம்பின் சிறப்புப் பெயரையும், அப்பெயரின் மூலம் அதின் பலத்தையும், நெளிவு சுழிவுகளையும் தெரிந்துகொள்ள வேண்டும். அப்படி யானல்தான் அவன் தன் எதிரியின் திறனையும், அவனது கம்பின் திறனையும் நன்கு யூகிக்க முடியும் என்றும் அவர்கள் குறிப்பிடு கிருர்கள். இங்ஙனம் உய்த் துணர்ந்தால்தான் எதிரியின் அடிகளை நன்கு தடுக்க ஒருவன் ஆயத்த மடைய முடியுமாம்.

ஒவ்வொரு சிலம்பப் போட்டியும் ஆரம்பமாகுமுன், போட்டி யிடும் காளையர்கள் ஒவ்வொருவராகத் தங்கள் சிலம்பு முன்பு புரிந்த சிலம்பச் சண்டைகளின் வீரவரலாறுகளைப் பண்ணுக இசைத்துப் பாடி, தங்களது உணர்ச்சிகளை அப்பாடலின் மூலம் பெருக்கித் தங் களைப் பார்வையாளருக்கும் எதிரிக்கும் அறிமுகப்படுத்தினர்.

இச்சிறப்புற்ற சிலம்பக் கலையானது, 'தமிழ் வைத்தியர்கள்' அல்லது 'தமிழ் சித்தர்கள்' எனத் தற்போது அழைக்கப்படும் மக் களிடையே அதாவது எலும்பு முறிவுகளைக் கட்டி, வர்மம். நரம்பு முதலியவைகளை நன்முறையில் இயக்கிக் குணமாக்கும் ஒரு குழு வினிடமும் மலித்து காணப்படுகிறது.

# அத்தியாயம் 3

**பண்டைத் தமிழக சிலப்ப விளையாட்டின் சிறப்புகள்.**

நெற்றிமுட்டுக்கம்பை ஆகாயத்தில் அதிவேகமாகச் சுழற்றுங்கால் எழும் சிலம்பல் ஒலியைத் தழுவி, 'சிலம்பம்' என அக்கம்பு பெயர் பெற்றதென 2-ம் அத்தியாயத்தில் வாசித்தோம்.

ஒலி எழுப்பும் 'சிலப்பு' எனும் காலணிகள் அணிந்து கம்பு விளையாட்டு விளையாடுதல் தமிழரிடையே காணப்பட்டதால் இதற்கு சிலம்பம் எனப் பெயர் வழங்கலாயிற்று எனவும் வாசித்தோம்.

தமிழ் வேந்தர்கள் கம்பு விளையாட்டில் நன்கு தேர்ச்சிபெற்ற வல்லவர்களுக்கு, முத்துக்களும், மாணிக்கங்களும் உள்ளடக்கப்பட்ட சிலம்பு என்ற காலணிகளைப் பரிசாக ஈந்து சிறப்பித்ததால், இக்கோல்விளையாட்டிற்கு 'சிலம்பம்' எனப் பெயர் சூட்டப்பட்டதெனவும் வேறுசில சிலம்பாசிரியர்கள் கருதுகின்றனர். இது ஆராயப்படவேண்டிய ஓர் காரியமாகும்.

தமிழ் அகராதிகளில் சிலம்பம் என்ற பதத்திற்கு 'தந்திரோபாயம்' என்றும், 'பயமுறுத்தல்' என்றும் 'கழிவிளையாட்டு' என்றும் பல பொருள்கள் கொடுக்கப்பட்டுள்ளன என வாசித்தோம்.

சிலம்பம் வீசுபவன், எதிரியைத் தகுந்த முறையில் வீழ்த்த வேண்டின் பல தந்திரங்களையும், பயமுறுத்தலையும் மேற்கொள்ள வேண்டுமென்பது வெள்ளிடைமலை. ஆகவே சிலம்பம் என்றும் பதம் மேற்கூறிய பொருள்களை ஏற்றது என்பது வெள்ளிடைமலை

சிலம்ப விளையாட்டுக்கு 'உயில்பாணம்' என்ற பிரிதொரு பெயருமுண்டு. 'உயில் பாணம்' என்ருல் ஓசையிடும் வாணம் என்று அர்த்தமாம். காற்றில் 'உஸ்' என்று வாணத்தைப்போல் ஒலி எழுப்புவதால், 'உயில் பாணம்' எனப் பெயர் பெற்றிருக்கலாம்.

ராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள அருப்புக்கோட்டையிலுள்ள சிலம்பக்கூடம் ஒன்றில் 'உயில் சிலம்பம்' ஒன்று வைக்கப்பட்டுள்ளது. இது சிலம்பக் கம்பை ஒத்த நீண்ட, ஒரு தகரக் குழலாகும். அதன் ஒரு நுனி திறப்பாகவும் அடுத்த நுனி ஒரு உயிலோடு (Whistle) பொருத்தப்பட்டுமிருக்கும். சில இடங்களில் இது மூங்கில் குழலாகவும் இருக்குமாம். இக் குழாயைச் சிலம்ப முறைப்படி

சுழற்றுவது போல் சுழற்றினால் 'உஸ்' என்ற பயங்கரச் சப்தம் காற்றினால் ஏற்படுவதைக் கேட்கலாம்.

சிலம்பக் கலையின் தோற்றமும், வளர்ச்சியும்

சிலம்பக்கலையின் தோற்றத்தையும், அதன் சரித்திர வரலாற்றையும் அறிய நாம் கற்காலத்தையும் தாண்டி அப்பால் செல்ல வேண்டியதிருக்கும்.

இச்சிலம்பக்கலையைத் தோற்றுவித்தவனை மிகச் சிக்கலான புராதனச் சரித்திர வரலாற்றுள் தேடிக்கண்டுபிடித்தல் சுலபமல்ல. மேகமந்தாரம் போன்ற புராதன சரித்திர வரலாற்றினுள் அக்கலைஞனைத் தேடிக் கண்டு பிடிக்கத் தவறிய இந்நூலாசிரியர், வினாத்தாள்கள் மூலமாகவும், தமிழ்இலக்கியங்கள் மூலமாகவும் பழம் சிலம்பாசிரியர்கள் மூலமாயும் இச்சிக்கலுக்கு தீர்வுகாணமுயன்று, அம்முயற்சியிலும் தோல்வியே அடைந்தார். இத்தோல்விக்கு முக்கிய காரணம் என்னவெனில், இச்சிலம்ப விளையாட்டு அவ்வளவு பழமையானது.

இவ் உன்னத விளையாட்டை முறையாகத் தொகுத்தவனை இந்நூலாசிரியர் எப்படியாவது தேடிக் கண்டுபிடித்துச் சிறப்பிக்க வேண்டுமென்கிறார்.

'கல் தோன்றி மண்தோன்றா காலத்து முன்தோன்றிய மூத்த குடி' என்று புகழப்பட்ட பண்டைத் தமிழ் மக்கள் இவவொப்பற்ற விளையாட்டினைக் குரங்குகளிடமிருந்தே கற்றிருக்கவேண்டுமென ஓர் கூத்தும் சிலம்ப நிபுணர்களிடமும், மூதாதையர்களிடமும் நிலவி வருகிறது.

காடு செறிந்த மலைகளில் தமிழ் மக்கள் வாழ்ந்த காலத்தில், அன்னார் இயற்கையோடு ஒன்றிவாழ்ந்தனர். காடு வாழ் மிருகங்களில் வாழ்க்கையை அவர்கள் நேரில் கண்டனர்.

குரங்குகள் மரங்களில் தாவுவதும், ஒன்றோடொன்று விளையாடுவதும், ஒன்றோடொன்று சண்டை செய்து கடித்து விரட்டுவதும் பண்டைத் தமிழன் கண்ட அன்றாடகக் காட்சியாம்.

குரங்குகளிடம் ஒரு பொருள் அல்லது நீண்ட மூங்கில் கழிகள் சிக்கினால், 'ஆவைகள் எங்ஙனம் பிரயோகிக்கப்பட்டன என்பதை அறிதல் மிகவும் ருசிகரமானது,

குரங்குக் கூட்டமொன்றில், மூங்கில் கழிகள் கிடைத்தால், அக்கழிகளை அவைகள் கைகளில் பற்றி, ஒன்றை ஒன்று அடிப்பதும், அடி விழாது கழிகொண்டு தட்டுவதும், வேடிக்கையாகவும், விநோதமாகவும் இருக்குமெனச் சில சிலம்பாசிரியர்கள் கூறுகின்றனர். ஆகவே குரங்குகளிடமிருந்து சில அடிப்படை அடி முறைகளையும், தடுப்பு முறைகளையும் தமிழர்கள் கண்டு, பின்னர் தனது அறிவாற்றலால் அவைகளைப்பெருக்கி முறைப்படுத்தியிருக்கலாமென்பதும் ஓர் கூற்று.

இந்திய பண்பின்படி, ஓர் கலையின் ஆரம்பம் ஓர் தேவனைச் சம்பந்தப்படுத்தியதாயிருக்கும். அங்ஙனமே சிலம்ப விளையாட்டையும் 'சிலம்பன்' என்ற மறு நாமமுள்ள முருகக்கடவுளையும் சிலர் சம்பந்தப்படுத்துகின்றனர். வேலைக் கையில் ஏந்தியிருக்கும் முருகக்கடவுள் 'சிலம்பன்' என அழைக்கப்படுகிறார்.

தமிழர் வழக்கின்படி தமிழ் இலக்கணத்தை முதன்முதல் வரைந்தவர் அகஸ்திய முனிவரென்றும், மருத்துவ முறையைக் கிரமமாகக் கொடுத்தவர் அகஸ்திய முனிவரென்றும், மேலும் தமிழரின் நாகரிகத்தைக் காட்டும் மிக முக்கிய கலைகளின் தோற்றுவாய் அகஸ்திய முனிவரென்றும் கூறுதல் தமிழரின் வழக்காகும்.

அஃதுபோல் சிலம்பக்கலையின் பிறப்பிடமும் அகஸ்திய முனிவர்தான் என்றதோர் கருத்து சிலம்பாசிரியரிடமும் நிலவி வருகிறது விந்தையன்று. இக்கருத்தைக் குறித்தும் ஆராய்தல் நம் கடமை.

அநேக கம்புவிளையாட்டு வல்லுநர்கள் சிலம்ப விளையாட்டு மிகச் சிறந்த வளர்ச்சியடைத்து பிரபல்யமடைந்த காலத்தை வரையறுக்குங்கால், சேர, சோழ, பாண்டிய மன்னர்களாகிய மூவேந்தர்களின் காலத்தையே கணிக்கின்றனர்.

முதலாம் சங்ககால முதற்கொண்டே மூவேந்தர்கள் சிலம்ப விளையாட்டை மிகவும் ஆதரித்தனரென்பது தொன்றுதொட்டு வரும் சொல் வழக்காகும். சங்ககாலம் முதற்கொண்டு படைக் கலப்பயிற்சிக்கு சிலம்ப விளையாட்டு முன்னோடியாகத் தெரிந்து கொள்ளப்பட்டது என்பது உண்மை.

முடி ஆட்சி மறைந்து, ஜமீன்தார் ஆட்சி வந்தபோது, ஜமீன்தார்கள் இக்கலையை ஆர்வத்தோடு வளர்த்தனர். பின்

ஜமீன்தார் ஆட்சியும் முடிவடைந்தபின் வீரபாளையக்காரர் ஆட்சியில் பாளையக்காரர்கள் சிலம்பிற்கு அதிக செல்வாக்குக் கொடுத்து அக்கலையை முழுமதி என வளர்த்தனர்.

அத்தியாயம் 2-ல் வரையப்பட்டுள்ளவாறு பாளையக்காரத் தலைவர்களுள் ஒருவனை வீரபாண்டியக் கட்டபொம்மனின் சேனை வீரர்கள் ஆங்கிலேயப் படைகளை அநேக சிறு சண்டைகளில் முறியடிக்க ஏதுவாக இருந்தது அவர்களின் சிலம்ப விளையாட்டின் தேர்ச்சியே ஆகும்.

நாடார், கள்ளர், தேவர் போன்ற ஜாதிமக்கள் இவ் விளையாட்டில் பிற ஜாதி மக்களைவிட அதிக ஆர்வம் காட்டினர். இம்மக்கள் இவ்விளையாட்டில் வைத்துள்ள ஆர்வத்தை இன்னும் காணலாம். மூவேந்தர்கள் தமிழகத்தை ஒரு குடையின்கீழ் ஆட்சிபுரியுங்கால் மேற்கூறிய ஜாதியினர் அதிக அளவில் யுத்த வீரர்களை அனுப்பி நாட்டிற்கு வீரப்பணி செய்தனர். படை வீரர்கள், அரசர்கள், சீமான்கள், பொதுமக்கள் சிலம்பக்கலையில் தேர்ச்சி பெறுதலை ஒரு சிறந்த பண்பாடாகக் கருதினர்.

பழங்காலத்தில் சிலம்பச்சண்டை, வாட் சண்டை இவைகளில் கீர்த்திபெற்ற அநேக வீரர்கள் இருந்தனர். அவர்களில் தமிழிலக்கியத்தில் புகழப்படும் பரஞ்சோதி முனிவர், ஏனாதிநாதர் என்ற சேனைத்தளகர்த்தர்களும், ஆங்கிலேயரை எதிர்த்து அநேக சண்டைகளில் வென்று வாகைசூடிய பாளையக்காரத் தலைவனை வீரபாண்டியக் கட்டப்பொம்மன், கட்டப்பொம்மனின் தளகர்த்தர்களான ஊமைத்துரை, பகதூர் வெள்ளை போன்ற வீரர்களும் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள வடலிவிளை என்ற கிராமத்தைச் சேர்ந்த 'இந்திய ராபின்குட்' எனப்புகழப்பட்ட வீரனை செம்புலிங்க நாடானும், அரியநாதர் என்ற தமிழக வீரரும் கீர்த்திவாய்தவர்களாவர்.

### சிலம்பவிளையாட்டின் உபயோகம்

முற்காலத்தில் காடுகளில் வாழ்ந்த மக்கள் தங்களை வன மிருகங்களிடமிருந்து காத்தல் பொருட்டும், பிற மனித எதிரிகளிட மிருந்து தங்களைக் காத்துக்கொள்ளும் பொருட்டும் நெற்றி முட்டுக்கம்பு சுழற்றும் முறையைக் கற்கலாயினர்.

சிலம்பப் பயிற்சி புராதனக் காலங்களில் விஞ்ஞான ரீதியில் அமையாவிடினும், காலம் கடறக் கடற, காலடிப் பயிற்சியில் புதுமை கம்பு சுழற்றலில் பலவித நூதனங்கள், முதலியன கொஞ்சம் கொஞ்ச மாகப் பயிற்சி முறைகளில் புகுத்தப்பட்டு இக்கலை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமாக வளர்க்கப்பட்டது. ஆகவே காலப்போக்கில் இக்கலையானது மக்களுக்குப் பல விதத்திலும் பிர யோஜனமான கலையாக வளர்ந்து, மக்களைக் கவர்ந்து, தொண் டாற்றியது.

தற்போதும் சிலம்பக் கலையானது, தற்காப்புக் கலையாகவும் கேளிக்கைக் கலையாகவும் போட்டிக் கலையாகவும் விரிந்து வளர்ந் துள்ளது போற்றற் பாலது.

சமயோசிதம், புத்திக்கூர்மை, எதிரியை ஏமாற வைத்து அவனை முறியடித்தல் போன்ற சில திறமைகள் சிலம்பப் பயிற்சியால் வளர்கின்றன. தமிழ் இலக்கியங்களில் சிலம்பப்பயிற்ச்சி யால் சரீரத்திற்கு ஏற்படும் நற்பலன்கள் தெளிவாகத் தொகுக்கப் பட்டுள்ளன என்பதை அத்தியாயம் 2-ல் வாசித்தோம்.

சரீர பெலன், நல்ல உடற்தோற்றம், உடற்பசி ஏற்படல் முதலியன சிலம்பப் பயிற்சி அளிக்கும் பரிசுகளாகும். நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்ற முது மொழிப்படி, சிலம்பப் பயிற்சி மூலம் இளங்காளையர்கள் நோயை எதிர்த்து வெல்லும் உடற்திறமை பெறவேண்டும்.

உடற்கல்வியின் குறிக்கோள்களை (Objectives) அடைய சிலம் பப்போட்டிகள் மிகவும் பயன்படுகின்றன என்பது எவரும் மறுக்க இயலா உண்மை. சிலம்ப விளையாட்டுப் போட்டிகள் மூலம் ஆட்டக்காரர்கள் தற்காப்பு, சரீர பெலன், புத்துணர்ச்சி பெறல், எதிரிக்கு மரியாதை செய்தல், வெற்றி தோல்வியைச் சமமாகப் பாவிக்கும் தன்மை பெறல் போன்ற அனேக உடற்கல்விக் குறிக் கோள்களை அபரிமிதமாகப் பெற்று பண்புள்ளவர்களாவர்.

சில வைபவங்களிலும், திருவிழாக்களிலும் சிலம்ப விளையாட்டு காணத் துடிக்கும் மக்கள் உண்டு.

ஆகவே இந்துக்களின் பல கோவில் திருவிழாக்களிலும், கிறிஸ்துவர்களின் சில பண்டிகைகளிலும், கல்யாணம் முதலிய வைபவங்களிலும், முகமதியரின் சிறப்புப் பண்டிகைகளான முகரம்,

ரம்சான் போன்ற பண்டிகைகளிலும், மற்றும், சடங்கு, தேர்த் திருவிழாக்கள், இறப்பு ஊர்வலங்களிலும் சிலம்பப் போட்டிகள், நடத்துவதும் சிலம்பம் கற்ற இளங்காளையர்களை அரங்கேற்றுவதும் அலங்காரச் சிலம்பம் வீசிக் காட்டிப் பார்வையாளரை மகிழ்விப்பதும் தமிழரின் மரபாகிவிட்டது.

**சிலம்புவிளையாட்டிலிருந்து தோன்றிய பல கருவிகளின் பிரயோகங்கள்.**

நெற்றிமுட்டுக் கம்பு சுழற்றுவதிலிருந்து பலவகை உபகரணங்களை வைத்து தங்கள் தேவைக்கேற்பத் தற்காப்பிற்காக அல்லது பார்வை யாளர்கள் ரசிப்பதற்காகக் கம்பை சுழற்றுதல் என்றமுறை உருவானது.

இங்ஙனம் உருவான சில உபகரணங்கள் பின் வருமாறு.

**1. உயில் கழி சிலம்பம்**

நீண்ட குழலான ஓர் கழி அல்லது மூங்கிலை எடுத்து அதின் ஒருபுறம் திறப்பாகவும், அதின் மறுபுறம் உயில் பொருத்தப்பட்டதாகவும் வை. பின் அக்குழலான, ஒரு புறம் உயில் பொருத்தப் பட்ட சிலம்பக் கம்பைச் சுழற்றினால், அதின் திறப்பான பாகத்தின் வழியே காற்று உட்புகுந்து உயில் வழியே வெளியேறும்போது ஒரு வகை ஓசை தொனிக்கும்.

**2 பந்துக்கோல் சிலம்பம் அல்லது தீப்பந்தச் சிலம்பம்**

சுமார் 5'6" நீளமுள்ள நீண்டதோர் மூங்கில் களியின் இரு மருங்கிலும் துணியினால் பந்து செய்து, பொருத்தி, அப்பந்துகளில் எண்ணெய் தோய்த்து தீப்பொறுத்தி, பலவித கோணங்களில் அக்கம்பைச் சுழற்றினால், இரவில் பார்வையாளர்களுக்கு அது மிகவும் பரவசமளிக்கும் ஓர் கேளிக்கை விளையாட்டாகும்.

**3. முச்சாண் சிலம்பம் அல்லது கட்டக்கழி சிலம்பம்:**

மேற்கூறிய கம்பு மூன்று சாண் நீளமுள்ள ஓர் மூங்கில் பிரம்பாகும். இவ்வகை கம்பைத் தற்காப்புக்காகவும், எதிரியைத் தாக்குவதற்காகவும் சிலம்ப வீரர்கள் பிரயோகிக்கின்றனர். முக்சாண் சிலம்பினை சில இடங்களில் 'கட்டக்கம்புச் சிலம்பம்' எனவும், 'குறுவடி' எனவும் அழைக்கின்றனர். கேரள நாட்டிலும் தமிழகத்திலும், மராட்டிய நாட்டிலும் 'கட்டக்கழி' விளையாட்டு மிகவும் பிரபல்யமடைந்துள்ளது.

**4. களியல் கம்பு:**

களியல் கம்பின் நீளமானது சுமார் 2 சாண்தான். ஆனுல் இக் கம்பானது வளைந்து கொடுக்கும் தன்மையில்லாதது. மிகவும் கெட்டியான மூங்கில் அல்லது பலமான கம்புகள் இதற்குப் பயன் படும். களியல் விளையாட்டு பார்வையாளர்களுக்கு விளையாடிக் காட்டப்படும் கோலாட்டத்தை ஒத்த ஓர் விளையாட்டாகும். ஆனுல் இதில் ஆண்கள் பங்குபெறுவர். இவ்விளையாட்டு பாட்டோடு விளையாடப்படும். பலவகைக் காலடிகளோடும், கம்புகள் ஒன்றை ஒன்று அடிப்பதால் எழும் சப்தத்தோடும் விளையாடப்படும் இக் குழு விளையாட்டு கல்யாண வைபவ ஊர்வலங்களிலும், மற்றும் விழாக்களிலும் பார்வையாளர்களை மகிழ்விப்பதுண்டு.

**சிலம்பக்கம்பின் வகைகள்.**

சிலம்ப விளையாட்டிற்குப் பொதுவாக உபயோகப் படுத்தப் படுவது மூங்கிலும், பிரம்புமாகும். சிலர் கடினமான மரக்கம்புகளையும் பிரயோகிக்கின்றனர். விளையாட்டுப் போட்டிகளைப் பொறுத்த மட்டில் மூங்கில் அல்லது பிரம்பையே உபயோகித்தல் நலம்.

நாங்கு நகோடா, வெள்ளைப்புளி, கருங்காலி, தேக்கு கம்புகள் உபயோகத்திலிருப்பினும், போட்டிகளுக்கு அவை ஒவ்வாது. ஏனெனில் கடினமான சிலம்பக் கம்பு எதிரியைக் காயப்படுத்தி விடும். மேலும் கடினகம்புகள் வளைந்து கொடுக்காது. சில நல்ல ஆட்டக்காரர்கள் வளைந்து கொடுக்காத சிலம்பக் கம்பைத் தெரிந்து கொள்ள மறுக்கிறுர்கள். வளைந்து கொடுக்காத சிலம்பக்கம்பு ஆசான் சொற்படி கேளாது என்பது மரபு.

**சிலம்பக்கம்பு: பக்குவப் படுத்தும் முறை**

முதலில், கணுக்களும், கீறலுமில்லாத நல்ல பிரம்பை அல்லது கழியைத் தெரிந்தெடுத்து அதை நீரிடையிட்டு சற்று ஊறவைத்துப் பக்குவப்படுத்தி நிலைநீர்மீது அடித்து உரம் ஏற்றிப் பின் அளவு செய்து சிலம்பக் கம்பை வடிக்கவேண்டும். பின் அதில் காணப்படும் சிறு சிறு வளைவுகள் அல்லது நெளிவுகளைத் திருத்த அப்பிரம்பில் விளக்கெண்ணெய் தேய்த்துப் பின் சற்றுநேரம் களித்து அதைத் தீயிலிட்டு வாட்டிக் காலால் மிதித்து சரிப்படுத்துவது வழக்கத்திலுள்ளது. கம்பை நேராக்கிய பின் கண்ணுடி, அல்லது உப்புத்தாள் மூலம் அதன் மேற்புறத்தைத் தேய்த்து அதன் சிம்புகளை போக்கி, அதன் சொர சொரப்பை நீக்க வேண்டும். ஆனுல் கம்பை மிகவும் வழவழப்பாக மாற்றக்கூடாது.

ஏனெனில் அது ஒருவனின் கையைவிட்டுத் திடீரென நழுவ நேரிடும்.

**சிலம்பக்கம்பைப் பத்திரப்படுத்தும் முறை**

பிரயோகத்திற்குப் பின் சிலம்பக்கம்பை சமமட்டமாகப் படுக்க வைத்தல் நன்று. அங்ஙனம் செய்யாவிடில் கம்பு வளைந்துபோக நேரிடும். சிலர் செங்குத்தாகக் கம்புகளைத் தொங்கவைப்பதுண்டு. பொதுவாக இக்கம்பைச் செங்குத்தான மரங்களில் அல்லது செங்குத்தான கொப்புகளில் கட்டிவைப்பது பண்டைக்கால மரபு.

தற்காலத்தில் 'லின்சீட்' எண்ணெயைக் கம்பின் மேற்புறம் தடவி அதை சீசன் செய்யலாம். இங்ஙனம் அதைச் சீசன் செய்வதால் சிலம்பக் கம்பு வளைந்து கொடுக்கும் தன்மையை உடையதாயிருக்கும். கம்பும் உறுதி யடையும். எளிதில் உடையாது.

சிலம்பக்கம்பின் இரு முனைகளிலும் கீரல் தோன்ருதவாறு அம்முனைகளில் உலோகத்தினுல் செய்த வளையங்கள் பொறுத்துவது ஓர் வழக்கமாயிருக்கிறது.

**சிலம்பக்கம்பு:-அளவை**

சிலம்பக் கம்பின் நீளம் (Length) அதைப் பிரயோகிக்கும் நபரின் உயரத்திற்குச் சற்று குறைவாக, அதாவது அன்னரின் நெற்றி எட்டும் வரையுள்ளதாயிருத்தல் நல்லது எனக் கணித்துள்ளனர். ஆகவே இக்கம்பிற்கு 'நெற்றி முட்டுக்கொம்பு, என மறு பெயருமுண்டு.

சிலம்பக் கம்பின் குறுக்களவு ((Diameter) ஒரு முனை துடங்கி மறுமுனை மட்டும் ஒரே சீராக இருக்க வேண்டும். அதாவது அதன் குறுக்களவு ( ½ முதல் 1") வரை இருக்கலாம். ஆனுல் கம்பின் மொத்த நீளமும் ஒரே குறுக்களவுள்ளதாக இருக்க வேண்டும். ஏனெனில் சிலம்பக் கம்பின் இருமுனைகளும் எதிரியைத் தாக்குவதற்குப் பயன்படுகிறது. ('லாட்டி' என்ற மகாராட்டிய நாட்டின் கம்பு விளையாட்டில் கம்பின் ஒரு முனை சிறுத்தும் மறுமுனை பெருத்தும் இருக்கும். பெருத்த முனை கொண்டுதான் எதிரியைத் தாக்கவேண்டும் என்ற முறை அங்கு வழக்கில் இருக்கிறது. ஆனுல் சிலம்ப வித்தையில் கம்பின்? இரு முனைகளும் கழன்று

எதிரியைத் தாக்குதல் உண்டு. பண்டைக்காலத்தில் இளங்காளையர் உலக்கையை சிலம்பக்கம்பைச் சுழற்றுவதுபோல் சுழற்றிப் பயிற்சி பெறுவர். இங்ஙனம் அவர்கள் சுழற்றும் உலக்கை சுமார் $5\frac{1}{2}$' நீளத்திற்குக் குறைவானதல்லாததாகவும் $2\frac{1}{2}$" விட்டத்திற்கு அதிகமானதாகவும் இருந்திருக்கிறது.

ஒரு திறமைபெற, "மிகக் கடின பயிற்சி செய்து, அத்திறமையை எளிதில் பெறல்" என்ற தத்துவம் தமிழரிடையே அக்காலத்தே நிலவியதுபோலும் இதைத் தற்காலத்தில் Over load practice' எனச் சொல்வர். பையன்களுக்கும், பெண்பிள்ளைகளுக்கும், சிலம்பக் கம்புகள் தெரிந்தெடுக்குங்கால், அதன் குறுக்களவும், நீளமும் அவர்களது வயதிற்கு, வலுவிற்கும், வளர்த்திக்கும் ஏற்ற விகிதத்தில் குறையவேண்டும்.

**போட்டியாளரின் உடை ஒழுங்கு**

போட்டியாளர்கள் இரு வித்தியாசமான வர்ணமுள்ள லங்கோடு (இடைத்துணி) அணிவது வழக்கம். பண்டைக் காலத்தில் வேஷ்டியைத் தார்போட்டுக் கட்டிக்கொண்டு பொருதல் வழக்கம். சிலர் கால்கள் முழுவதும் மறையத் தக்கதாகவும், காலோடு இறுகலாக இருக்குமாறும் துணியை உடுத்திக்கொள்ளுதலும் உண்டு

ஆதிகால மக்கள் காயமேற்படாது தலையைப் பாதுகாக்கத் தலைப்பாகை கட்டிக்கொள்ளுதல் வழக்கமாயிருந்தது.

ஆனால் தற்போது கால்சட்டையையும் பனியனையும் அணிவது வழக்கமாகி விட்டது. கால்களைப் பாதுகாக்கத் துணிச்சப்பாத்து (Canvas Shoes) அணிவதைப் போட்டியாளர்கள் விரும்புகின்றனர். அதுமட்டுமின்றிக் கடின தரையில் காலால் சறுக்கிச் சென்று எதிரியைத் தாக்கவோ அலலது எதிரியிடமிருந்து சறுக்கி அப்பால் செல்லவோ துணிசப்பாத்து மிகவும் பயன்படுகிறது.

**போட்டியாளரின் பாதுகாப்பு அணி**

பனை ஏறும் தொழிலாளிகள் பனை ஏறுங்கால் தங்கள் நெஞ்சு புண்படாமலிருக்கத் தோலினால் செய்த 'மார்வாடி' என்ற நெஞ்சுறையை அணிதல் வழக்கம். அதை ஒத்த நெஞ்சுறையை சிலம்ப மல்லர்களில் சிலர்பாதுகாப்பிற்காக அணிதலும். உண்டு. சில சிலம்ப வீரர்கள் தலையையும், பிரடியையும் பாதுகாக்கத் தோலினால்

செய்த பிரடிக் கூறு என்ற தலை உறையையும் அணிதல் சிற்சில இடங்களில் வழக்கமாயிருந்தன வென்றும் சிலர் கூறுகின்றனர். இருகையின் விரல்களையும், எதிரியின் கம்பின் அடிகளிலிருந்து பாதுகாக்கத் துணியினுல் (பாண்டேஜ்) போடுதலும் சிலரிடையே காணப்பட்டது. மேலும் அனேக ஊர்களில், எதிரியின் அடிகளைத் தாங்க கேடயத்தை ஒத்த பனை ஈக்கினுல் செய்த முறங்களையும் உபயோகப்படுத்திஞர்கள் என்பது தெளிவாகிறது.

இது போகத் தலையைப் பாதுகாக்கத் தலைப்பாகை அணிவதும் வழக்கத்திலிருந்தது என வாசித்தோம். சிலம்பத்தில் தேர்ச்சி பெற்ற சிலர் இங்ஙனம் தலைப்பாகை அணிந்ததற்குப் பிறிதொரு காரணமும் சொல்லுகிருர்கள்.

அதாவது இரு மல்லர்கள் தலைப்பாகை அணிந்து சிலம்பு விளையாடுங்கால் ஒருவர், எதிரியின் தலைப்பாகையைக் கம்பின் உதவி கொண்டு தட்டித் தரையில் வீழ்த்திஞல், அன்னுர் வெற்றி பெற்றதாகக் கணிக்கப்பட்டார் என்பது ஓர் கூற்று.

வேறுசிலர் தலைப்பாகை அணிந்ததற்கு இன்னும் வேறு காரணத்தை வலியுறுத்துகிருர்கள். சிலம்புச் சண்டை நடக்குங் கால் போட்டியாளர்கள் எதிரிகளின் கம்பு தங்கள் மீது தைக்காதவாறு தலைப்பாகைத் துண்டிஞல் தடுக்கவும், அக்கம்புகளைத் தலைப் பாகைத் துண்டின் உதவியால் கைப்பற்றவும், திறமை படைத்திருந்தனர் என விளக்கிக் காட்டுகின்றனர். வேறு சில சிலம்பாட்டக்காரர்கள், அக்காலத்தில் ஆட்டக்காரர்கள் தங்களது நீளமான தலைமுடியை மறைப்பதற்காகவும், தங்களது கௌரவத்திற்காகவும் தலைப்பாகைகளை அணிந்தனர் எனக் கூறுகின்றனர்.

தலைச்சீரா, முகமூடி, நெஞ்சு பாதுகாப்பு உறை, வயிற்றுப் பாதுகாப்பு மூடி, விரல் உறைகள், சப்பாத்துக்கள், போன்ற பாது காப்பு உபகரணங்கள் இருப்பின் இக்கலையை இன்னும் நன்கு ஆர்வத்தோடு இளங்காளையர்கள் கற்பர் என இந்நூல் ஆசிரியர் கருதுகின்ருர். ஏனெனில் நவீன காலத்தில் கிட்டத்தட்ட எல்லா விளையாட்டுப் போட்டிகளிலும் பாதுகாப்பு உபகரணங்களை அணிதல் சிறந்ததாகக் கருதப்படுகிறது.

**போட்டியாளரின் உணவு வகை:**

தமிழ் நாட்டுச் சிலம்ப வீரர்கள் கீழ்கண்ட ஆகாரங்களை அருந்தியதாகக் கூறப்படுகிறது.

1 கோழி முட்டை (பச்சையாக)

2 வாதுமைப் பருப்பு அல்லது முந்திரிப் பருப்பு (இதைப் பாலோடு சேர்த்துப் பருகுதல் )

3 இறைச்சி

4 நெய்

5 இடித்த எள்ளும், கருப்புக் கட்டியும்.

6 பருத்திப்பால், தேங்காய்ப்பால், கருப்புக்கட்டி சேர்த்துக் கொதிக்க வைத்த பானம்

7 தேங்காய் சில்லும், கருப்புக் கட்டியும் சேர்ந்த பாகு.

8 மாலைப் பதனீரும், இளம் நொங்கும் சேர்ந்த பானத்தை இரவு படுக்கப் போகுமுன் அருந்துதல்.

9 முளை நீக்கிய நிலக்கடலையும், கருப்புக் கட்டியும் சேர்ந்த சேர்க்கை.

10 முளைவிட்ட கொண்டைக் கடலை அல்லது பட்டாணிக் கடலை.

11 நல்ல காய்ந்த கருவாடும், கருப்புக் கட்டியும் சேர்த்து இடித்த சேர்க்கை.

12 சம்பாத் தவிடும், கருப்புக் கட்டியும் சேர்த்து இடித்த சேர்க்கை

இது போக, சில சிலம்ப வீரர்கள் கேப்பைக் களி, உளுந்தங் களி, கேப்பை ரொட்டி, கொஞ்ச அளவு தெளிந்த கள்ளு அல்லது புளித்த கஞ்சி, மீன், மோரிட்ட பழஞ்சாதம், முயல் கறி, மான் இறைச்சி, காட்டுப் பன்றியின் இறைச்சி, முள்ளம் பன்றியின் மாமிசம், சாரைப் பாம்பின் பாலை அல்லது கொளுப்பு முதலிய வைகளைத்தின்று உடலுக்கு உரம் ஏற்றுவது மரபு.

சாரைப் பாம்பின் பாலையைத் தின்ற வீரர்கள் பல மைல்கள் தூரமாவது ஓடி அல்லது கசரத்து எடுத்து அப்பாலையைச் செரிக்கச் செய்து, தனது சரீரத்தை மிகவும் வலுப்படுத்துதல் வழக்கத்தி லுள்ளது.

**உடலை நல் நிலையில் வைக்கும் பயிற்சிகள் :**

கட்டுமுட்டான தசைகள் பெற தமிழர்கள் தொன்று தொட்டு முறைப்படி செய்து வந்த உடற்பயிற்ச்சிகள் பின்வருமாறு : தண்டால் செய்தல், பஸ்கி செய்தல், கர்லாக் கட்டைகள் சுழற்று தல், ஓடுதல், நொண்டி அடித்தல், நீந்துதல், ஆசனங்கள் செய்தல், வண்டிச் சக்கர பயிற்சி (கார்ட் வீல்), ஒரு காலில்

திரும்பிக் குதித்தல் (Pivot Jumps), உடலை ஊஞ்சல் போல் ஆட வைக்கும் பயிற்ச்சிகள், (Swinging exercises) பளு அல்லது எடை தூக்கும் பயிற்ச்சிகள், மேலும் தமிழக விளையாட்டுகளான கிளித் தட்டு, மந்தி விளையாட்டு, சடுகுடு முதலியன.

வேறு சில நிபுணர்கள், சிலம்ப விளையாட்டின் அடிப்படைத் திறமைகளான பல்வேறு வகை காலடி வரிசைகள், விதவிதமான கம்பு வீச்சுகள், காலில் திரும்பிக் குதித்தல், அடிமுறைகள், நாற் புறமும் சுழன்று இங்கு மங்கும் திரிதல், எதிரியை முதுகில் தூக்கி எறிதல், தரையில் வீழ்ந்து சுழன்று விளையாடுதல், உட்கார்ந்தும், எழுந்தும், படை விச்சு வீசுதல், முதலிய பயிற்ச்சிகளை கிரமப்படி செய்தாலே கட்டுமுட்டான வலிமை பொருந்திய உடலைப் பெறலா மென வற்புறுத்துகின்றனர்.

**பயிற்சி காலம் :**

சிலம்பம் கற்போர் சிலம்பக் கலையை கசடறக் கற்க அனேக மாதகாலம் ஆகலாம். இக் கலையைக் குருவிடம் கற்ற சீடர்கள் தங்கள் தங்கள் பயிற்ச்சியின் திறமையை எடை போட்டுப் பார்க்க சிலம்ப நிபுணர்களடங்கிய சபையிலே விளையாடிக் காட்டுவர். மேற் கூறிய அரங்கேற்றம் சிற்சில சமயங்களில் திருவிழா வைபவங் களிலும் அல்லது திருவிழா ஊர்வலங்களிலும் நடைபெறும் கண் காட்சியாகும்.

அரங்கேற்றத்திற்குப் பின் சிலம்ப வீரர்கள் தங்களது ஆடல் திறமை குறைவுபட்டு விடாதிருக்க அடிக்கடி அனேக போட்டிகளில் கலந்து கொள்வர். அனேக ஊர்வலங்களிலும், திருவிழாச் சமயங் களிலும், கண்காட்சி விளையாட்டுகளிலும் பங்கு கொண்டு திறமையை வளரச் செய்வர்.

**கடவுளுக்கும், குருவிற்கும், எதிரிக்கும், பார்வையாளருக்கும் செய்யும் வணக்க முறை : (சலாம் வரிசை)**

இந்திய சமுதாய வழக்கப்படி இந்திய நாட்டின் எந்தக் கலை யும் கடவுள் பக்தியை முன்வைத்ததாயிருக்கும். சிலம்பக் கலை மேற் கூறிய மரபிற்கு அப்பால்பட்டதல்ல எனப் படித்தோம். சிலம்பக் கம்பைக் கையிலெடுக்கும் போதும், அக் கம்பின் முதற் சுழற்று முற்றுப்பெறும் போதும் இறை வணக்கம் செய்தல் தமிழன் மரபு.

சிலம்பம் பயிலுவோர், தங்களது பயிற்ச்சிக்கு ஆரம்பமாக முதலில் கம்பைத் தொட்டு இறை வணக்கம் செய்து, பின் கம்பை

எழிலோடு அல்லது அழகாகப் பார்வையாளரும் புகழத்தக்க விதத்தில் பல முறைப்படி வேகமாகச் சுழற்றிப் பக்தியோடு குரு வணக்கம் செய்வர்.

இத்தேன் தமிழ் விளையாட்டின் பிரிதொரு சிறப்பு என்னவெனில், தன்னோடு எதிர்த்துப் போர்க்களத்தே பொறச் சிங்கமென நிற்கும் எதிரிக்கும் கம்பு சுழற்று செய்து, மரியாதை செய்தலாகும்.

**சிலம்பப்போட்டி ஆரம்பிக்கும்முறை**

தமிழகத்திலே மலர்ந்த இச்சீரிய சிலம்ப விளையாட்டுப் போட்டியின் ஆரம்பம் பல கிராமங்களில் பலவிதமாக இருந்தது.

சிற்சில கிராமங்களில், மல்லர்கள் மத்தியில் முன் நீட்டப்பட்ட கம்புகளை பின்னால் இழுத்ததும் போட்டி ஆரம்பித்தது.

வேறுசில நகர்களில், நடுவர் தம் கம்பை, போட்டியிட எதிராக நிற்கும் மல்லர்களின் மத்தியில் உயர்த்தியவுடன் போட்டி ஆரம்பமாகும்.

வேறுசில இடங்களில் கொம்பு ஊதப்பட்டவுடன் மல்லர்கள் சிலம்ப யுத்தத்தை ஆரம்பித்தனர். தற்போது அனேக இடங்களில் விசில் ஊதியதும் சிலம்பப்போட்டி ஆரம்பமாவதைக் காண்கிறோம்.

**எதிரியைத் தாக்கக்கூடிய இலக்குகள்**

சங்க காலத்திற்கு முற்பட்ட தமிழகத்திலே, சிலம்ப மல்லர்கள் எதிரியின் உடலின் எப்பாகத்தையும் தாக்கலாமென விதி வகுத்திருந்தனர். ஆனால் நாம் வசிக்கும் இந்த அணு சகாப்தத்திலே சிலம்ப வீரர்கள், தாக்கக்கூடாத உடலின் பாகங்களைக் குறிப்பாகக் காட்டுகின்றனர். உதாரணமாகக் கண்கள், காதுகள், வாய், மூக்கு, விலாக்கூட்டின் மத்தி, ஆண்குறி முதலிய பாகங்கள் தாக்கப்படக் கூடாது என்ற தற்போதுள்ள விதி, இவ்விளையாட்டின் சிறப்பை முன்னேற்றப் பாதைக்கு அழைத்துச் செல்லுகிறது.

**தாக்கப்படும் இலக்குகள்**

1 தலை
2 நெற்றி
3 கன்னங்கள்
4 கன்ன எலும்பு
5 காதுபக்க எலும்புகள்
6 தாடைகள்
7 தொண்டை
8 தோள்கள்
9 தோள்பட்டை எலும்புகள்
10 காரை எலும்புகள்

| | | | |
|---|---|---|---|
| 11 | மேல்கை | 17 | தொப்பூள் |
| 12 | முழங்கை முட்டு | 18 | இடுப்புகள் |
| 13 | முன்னங்கை | 19 | தொடைகள் |
| 14 | மணிக்கட்டு | 20 | முழங்கால் மூட்டுகள் |
| 15 | மார்பு | 21 | குதிரைமுக எலும்புகள் |
| 16 | விலாப்புற எலும்புகள் | 22 | கணுக்கால்கள் |

சிலம்பப் போட்டியில் ஜெயித்த எண்கள் (பாயின்ற்கள்) கணக்கிடும் முறைகள்

போட்டியில் வெற்றியை நிதானிக்க ஒரு போட்டியாளன் எதிரியின்மேல் எத்தனைமுறை தனது கம்பின் முனைபடத் தொடுகிருன் எனக் கணக்கிடுவர். மேற்கூறிய தொடுதலைத் திட்டமாக வரையறுக்கக் கம்பின் இருமுனைகளிலும் ஒட்டக்கூடிய பசை போன்ற வர்ணம் பூசப்பட்டிருக்கும். ஒவ்வொரு தடவையும் கம்பின் முனை எதிரியைத் தொடும்போதும், அவ்வர்ணம் அவனது உடையிலோ, அல்லது உடம்பிலோ குறிகாட்டும். எந்தப் போட்டியாளர் எதிரியின்மேல் அதிகம் தொடுதல் செய்கிருரோ, அவரே வெற்றி பெற்றவரென்று கணிப்பது மரபு,

போட்டியில் வெற்றியை கணித்தல் முறையானது சிற்சில இடங்களில் வேறுபட்டிருக்கிறது. தமிழகத்தில் சில பிரதேசங்களில் ஒரு போட்டியாளன் எதிரியின் முதுகில் கம்பின் முனைபடச்செய்தால், எதிரி தோல்வியுற்றதாக முடிவு செய்வர்.

வேறுசில நாட்டுப்புறங்களில் எவன் தனது எதிரியின் மீது முதலில் மூன்று தொடுதல் செய்து புள்ளிவைக்கிருனே அவனே வென்றவன் எனப் போற்றுகின்றனர்.

சிலம்பக்கலை மிகவும் வளர்ச்சியுற்ற சில பிரதேசங்களில் ஒருவன் தன் எதிரியின் நெற்றியின் மத்தியில் சிலம்பக் கம்பின் நுனியால் புள்ளிவைத்தலை வெற்றியின் அறிகுறியாகப் போற்றுகின்றனர். இதற்குக் காரணம் மேற்கூறிய செயலைச் செய்தல் எளிதன்று. நெற்றியில் பொட்டுவைக்கும் செய்கை, தாக்கினவரின் கை,கால் திறமையைக் குறிப்பாகக் காட்டுகிறது.

இத்திறமையான செய்கையைப் 'பொட்டுவைத்தலென்றும்' 'திலகமிடுதலென்றும்' பாராட்டுவதுண்டு. 'சூதாட்டம்' என்ற திரைப்படத்தில் 'திலகமிடல்' என்ற சிலம்பப் போட்டி நடத்தப் படுவதைக் காணலாம். இன்றும் சில சிற்றூர்களில் பின்வரும் காரணங்களால் ஒருவரின் வெற்றி நிதானிக்கப்படுகிறது.

**சிலம்பப் போட்டியின் முடிவு :**

குறிக்கப்பட்ட காலவரை முடியும்போது, விசில் மூலமாக ஓசை எழுப்பிப் போட்டியை நிறுத்துவர். சிலவேளைகளில் ஒரு போட்டியாளர் தானாகவே போட்டியிலிருந்து விலகச் சம்மதித்தாலும் விளையாட்டு நிறுத்தப்படும்.

சில நேரங்களில் போட்டியாளரின் சிலம்பை எதிரிதட்டி விலக்கினால் கம்பை இழந்தவர் போட்டியை இழந்தவராவர். ஆகவே போட்டிக்குக் காலவரை குறிப்பிட்டிருந்தும், கம்பை இழந்த காரணத்தால், போட்டி, குறிப்பிட்ட காலவரைக்கு முன்பே நிறுத்தப்படலாம்.

**போட்டியில் கலந்து கொள்வோர் போட்டி முடிந்தவுடன் பின்வருமாறு இளைப்பாறுதல் பெறுவர்**

கடுஞ்சிலம்பப் பயிற்சிக்குப்பின் இளைப்பாறுதல் அடைதல் நன்று. சிலம்பம் கற்கும் மாணவர்கள் கடுமையான விளையாட்டிற்குப் பிறகு, தசைகளுக்குப் புத்துயிர் அளிக்கப் பின்வரும் காரியங்களில் ஈடுபடுவது வழக்கத்திலிருந்தது.

(1) கடுஞ்சிலம்பச் சண்டைக்குப்பின், போட்டியாளர் எளிதான காலடிப் பயிற்சிகள் செய்வதின் மூலமும், எளிதான அலங்கார வீச்சுகள் மூலமும் தங்கள் தசைகளுக்குப் புத்துணர்ச்சி அளிப்பர்.

(2) வேறுசிலர் கடின பயிற்சிக்குப்பின் காற்றோட்டமான, மணற்பாங்கான வெளியில் நீண்டுபடுத்து, உருண்டு ஓய்வு பெறுவர்.

(3) கடின தசைப் பயிற்சிக்குப் பிறகு குளிர் நீரில் வியர்வை அடங்கியபின் நீராடிக் களைப்பைக் களைதலை வேறுசிலர் மேற்கொள்ளுகின்றனர்.

சில விளையாட்டு மேதைகள் நம் பாரத நாட்டின் பயிற்சியான ஆசனப் பயிற்சிகள் செய்வதின் மூலம் உடலுருப்புகள், சோர்வை இழக்கின்றன எனக் கூறுவது குறிப்பிடத்தக்கது.

Hubert de Vrice என்ற ஆராய்ச்சியாளர் ஆசனப்பயிற்சிகள் மூலம் சரீரக்களைப்பை அல்லது சோர்வை நீக்கிவிட முடியுமென அவரது ஆராய்ச்சியின் மூலம் கணித்துள்ளதும் போற்றற்குரியது.

சில கிராமங்களில் சிறிதளவு 'கள்' அருந்தி உடற்களைப்பைப் போக்குதல் என்ற தொன்று தொட்ட மரபும் இருந்துவருகிறது.

**சிலம்ப ஆட்டக்காரர்களின் திறமைகள்**

இக்கலையைச் செவ்வனே பயின்று, தேறிய வீரன், தன்னைச் சூழ்ந்து போரிடும் பல எதிரிகளைத் தான் தனியாகத் தோற்கடிக்க முடியும். மேலும் தன்மேல் ஏவப்பட்ட ஏவுகணைகளை (கற்கள், அறுவாள்கள், கத்திகள்) சிலம்பு வீச்சுகளினால் தடுத்துச் சிதறப் பண்ண முடியும். மேலும் சிலம்பத்தில் வல்லவர்கள் சிறு மதில்கள் சிறு கூரையுள்ள வீடுகள், இவைகளைக் கம்பின் உதவியால் தாவி ஏறி, எதிரிகளை மடக்கவும் முடியும்.

கரடிகள், நாய்கள், குரங்குகள் சிறுத்தைப்புலிகள் போன்ற வன மிருகங்களை எதிர்த்தும் சிலம்பச் சண்டையிட்டு அவைகளை ஓட ஓட விரட்டலாம்.

'ரிக்ஷாக்காரன்' என்ற திரைப்படத்தில் எம்.ஜி. ராமச்சந்திரன் அவர்கள் ரிக்ஷா வண்டியில் சவாரி செய்த மஞ்சுளா என்ற ஓர் பெண்ணை சிலம்பத்தில் கைதேர்ந்த மூன்று ரவுடிகளிடமிருந்து காப்பாற்ற, முதலில் அவர்களில் ஒருவனின் சிலம்பக் கம்பைத் தனது கைத் திறமையால் பறித்துப் பின் அச்சிலம்பால் அம்மூவரையும், ரிக்ஷாவை ஓட்டிக்கொண்டே நன்கு புடைத்து அப்பெண்ணைக் காப்பாற்றி வீரனாகத் திகழும் காட்சி நன்கு சித்தரிக்கப்பட்டுள்ளது.

**இவ்விளையாட்டிற்கு முன்பு இருந்த சிறப்புக் குறையக் காரணம்**

நாகரீகத்திற்கு மையமான கிரேக்க நாடு தோன்றுவதற்கு முற்பட்ட காலத்திலே, நாகரீகத்தில் கிரேக்கநாடான தமிழகத்தில், பூத்து மணத்துக் குலுங்கிய மலரான சிலம்பவிளையாட்டு சில காரணங்களால் சிறப்பிழந்தது. அவையாவன :

1 இச்சீரிய தற்காப்புக்கலை துப்பாக்கி அல்லது அணுகுண்டு பிரயோககாலத்தில் மிக பயன்படாது என மக்கள் கருதியதால்.

2 இன்றைய இளைஞரைத் தூண்டக்கூடியவாறு பழைய வழக்கத்தை மாற்றி, இக்கலையில் புதுமை புகுத்தாததினால்,

3 விழக்கூடிய அடிகளுக்குப் பயந்ததினால்.

4 இவ்விளையாட்டைப் பற்றிய இலக்கியங்கள் இல்லாததினால்.

5 இக்கலையை 'ரகசியக் கலை' என்று போற்றிப் பேணி தங்களிடம் மட்டும் சிலர் அடக்கி வைத்துக் கொண்டதால்.

6 இக்கலையை நன்கு புரிந்து பயின்ற ஆசிரியருக்கு மதிப்பு கொடுக்காததினால்.

7 இக்கலையை சீரிய முறையில் திறம்படக் கற்றுக்கொடுக்கும் ஆசிரியர்கள் அதிகம் இல்லாததால்.

8 இக்கலையை வளர்க்கப் போதிய சங்கங்களும், சிலம்பக் கூடங்களும் இல்லாததினால்.

மேற்கூறிய காரணங்களால் இக்கலை வனப்புக்குன்றி, வாடலுற்றது. இந்நிலை கண்ட இந்நூலாசிரியர் குற்றுயிருற்றிருந்த இம்மலரைப் பழையபடி மலரவைத்து, உலகெல்லாம் அது மணம் கமழக் கங்கணம்கட்டி இந்நூலைப் பல கஷ்டமான சூழ்நிலையின் மத்தியில் வடித்துள்ளார். இந்நூலாசிரியர், பின்வரும் நல்ல வழிகளுக்கு இக்கலையைப் பயன்படுத்தலாமென்கிறார்.

1 தற்காப்பிற்காக (ஆண்கள் பயிலுவது)

2 தற்காப்பிற்காக (பெண்கள் பயிலுவது)

3 படைவீரர்கள் கைகலப்புச் சண்டையில் ஈடுபடுத்துவதற்கு.

4 வீடு, கடை, அலுவலகம் முதலிய இடங்களிலுள்ள காவல்காரர்களுக்குக் கற்பித்தல்.

5 போலீஸ்காரர்கள் கூட்டங்களைக் கலைக்கவும், தங்கள்மேல் ஏவப்படும் கற்களைத் தடுக்கவும்.

6 எல்லா மக்களும் பொழுது போக்கான ஒரு விளையாட்டாகக் கற்றல்.

7 உடல் நலனுக்காக எல்லோரும் கற்றல்.

---

# அத்தியாயம் 4

## சிலம்ப விளையாட்டின் அடிமுறைகள்

**முடிவுரை :**

கம்பு சுழற்றும் முறை உலக முழுவதும் பல நாடுகளில் இருந்திருக்கிறது. அஃது எவ்வாறு படிப்படியாக நன்முறையில் வளர்ந்தது என்பதைக் கணிப்பது சற்றுக் கடினமாக இருப்பினும், தமிழ் நாட்டில் சிலம்பம் எனச் சிறப்பாக அழைக்கப்படும் இவ் விளையாட்டு இக் காலத்தில் விஞ்ஞான முறையில் வளர இந்நாடு தொட்டிலாக அமைந்தது என்பது உண்மை.

ஏதன்ஸ், ஸ்பார்ட்டா, எனும் பட்டணங்களிலுள்ள இளங் காளையர்கள் பல விளையாட்டுகளைத் தங்களுக்கு அறிமுகப்படுத்து வதற்கும், தாங்கள் அதில் தனித்தன்மை அடைவதற்கும், தாங்கள் சென்ற, 'பாலஸ்ட்ரா' எனும் விளையாட்டுப் பயிற்சிக் கூடங்களைத் தன்னகத்தே உடையதாயிருந்த பழைய கிரேக்க நாடு அதைக் குறித்துப் பெருமை பாராட்டினதுண்டு. அவ்வாறே, 'கிளேடியேட் டர்கள்' எனும் வீரர்கள் மறப்போர் புரியவும், சிங்கம், புலி, மாடு முதலிய காட்டு விலங்குகளை எதிர்த்து மயிர்கூச் செறியச் சண்டை செய்து தங்களது வீரத்தை விளங்கச் செய்து வந்த இடங் களான 'ஆம்பித்தியேட்டர்கள்'என்றுஅழைக்கப்பட்ட விளையாட்டு அரங்கங்களைத்தன்னிடத்தே கொண்ட பழைய ரோமாபுரி நாடும் பெருமை பெற்றதுதான். இடைக் காலத்தில் இங்கிலாந்து தேசம், வாள் வீச்சு வீரர்களையும் 'குவார்டர் ஸ்டாப்' என்று சொல்லப்படும் கம்பு விளையாட்டு வீரர்களையும், அவைகளைக் கற்றுக் கொடுக்கும் மல்லர்களையும், பெருவாரியாகக் கொண்டிருந்தது குறிப்பிடத் தக்கது.

ஆனால் தமிழ்நாடு, சிலம்பப் பயிற்சிகளைப் பயிற்றுவிக்கும் இக் கால 'ஜிம்னேஜியத்தை' ஒத்த 'சிலம்பக் கூடங்களை'க் குறித்தும் அங்கே பயிற்றுவிக்கப்படும் சிலம்பக் கலையைப் பற்றியும் மார்தட்டிப் பெருமிதம் கொள்ளாமலிருக்க முடியுமோ?

"தமிழன் என்று சொல்லடா! தலை நிமிர்ந்து நில்லடா" என்ற பாரதியின் முது மொழிக் கிணங்க கே. ராஜகோபாலன் என்ற வரலாற்று நூலாசிரியர் 'இந்தியாவில் விளையாட்டுக் கல்வியின் சுருக்க சரிதம்' என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் ஓர் நூல் வெளியிட்டுள்ளார். அதில் அவர் எங்ஙனம் பண்டைத்தமிழ் அரசர்கள் உடற் பயிற்சிக்கும், உடற் கட்டழகிற்கும் சிறப்புக் கொடுத்தனர் எனக் குறிப்பிட்டுள்ளார். மேலும் திராவிட அரசர்கள் கிரேக்க நாட்டு யவனர்களின் உடற் கட்டழகிற்கும், அந் நாட்டு விளையாட்டுப் பண்பாட்டிற்கும் சிறப்புக் கொடுத்து, இளங் காளையர்களான உடற்கட்டு சிறப்புப் பெற்ற யவனப் போர் வீரர்களைத் தங்களுக்கு மெய்காப்பாளராக கொண்டிருந்தமை போற்றத் தக்கது. தமிழ் மூவேந்தர்கள் சிலம்பக் கலையை வளர்த்தார்கள். மேலும் அவ் வேந்தர்கள் கிரேக்க நாட்டுப் 'பாலஸ்ட்ராவை' ஒத்த 'சிலம்பக் கூடங்களையும்' ஏற்படுத்தினர்.

அப்படி ஏற்படுத்தப்பட்ட சிலம்பக் கூடங்களை ஒத்த ஒரு சிலம்பக் கூடம் ராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள அருப்புக் கோட்டையில் உள்ளது. (படம் 1) அங்கே சிலம்பக்கலை சிறப்பாகப் பயிற்றுவிக்கப்பட்டு வருகிறது குறிப்பிடத்தக்கது.



படம் 1. சிலம்பக்கூடம் (அருப்புக்கோட்டை)

சிலம்ப விளையாட்டின் அடிமுறைகளையும், காலடி வரிசைகளையும் எளிதாகப் புரிந்து கொள்வதற்காக வரைவு படங்களும், அதன்தொடர்பான விளக்கங்களும் அடுத்தடுத்துக் கொடுக்கப் பட்டுள்ளன.

தேவையான இடங்களில் இடது காலைத் துல்லியமாகக் காட்ட, வெள்ளை அல்லது கருப்புப் பட்டை சிலம்ப வீரனின் கணுக் காலில் கட்டப்பட்டிருப்பதைப் படத்தில் காணலாம். எதிரியைத் தாக்குகிறவனைக் குறிப்பாகக் காட்ட, அவனுக்குக் கறுப்பு நிறக் கால்சட்டை அணிவித்திருப்பதிலிருந்து அறியலாம். மேலும் அடியைக் கட்டுகிற அல்லது விலக்குகிறவனைக் குறிப்பாகக் காட்ட அவனுக்கு வெள்ளை நிறக் கால்சட்டை அணிவித்திருப்பதிலிருந்து அறியலாம்.

சிலம்ப முறை குறிப்பாக இரண்டு மிக முக்கிய முறைகளுள் அடங்கும். அதாவது காலடி முறையும், கம்பு சுழற்றும் முறையும் மிக சிறப்பானவையாகும். கம்பு சுழற்றும் முறை, கம்பால் வெட்டுதல், குத்துதல், அறுத்தல், சுழற்றி அடித்தல், அடித்தல் முதலியனவும் குறிப்பிடத்தக்க முறைகளாம்.

**காலடி முறைகள் :**

காலடி முறையின் சிறப்பு யாதெனில், கிட்டும் வாய்ப்பிற்குத் தகுந்தாற் போல, கம்பை உடலின் பல பக்கங்களும் சுழற்றி வீசுவதற்கும், எதிரியை முன்னேறித் தாக்குவதற்கும், பின் அடி வைத்து எதிரியின் அடிகளுக்கு விலகுவதற்கும், அதிவேகமாக எட்டு வைத்து அங்குமிங்கும் சுழன்று சென்று தன்னைக் காக்கவும் எதிரியைக் குறிப்பிட்ட எல்கைக்குள் வரவிடாதிருப்பதுமாகும்.

ஆகவே காலடி முறை உடம்பின் பாரத்தை (எடையை) அங்குமிங்கும் மட்டும் நகர்த்தி, அப்பளுவை எதிரியைத் தாக்கப் பயன் படுத்துவது மட்டுமின்றி, விரைவாகவும், சமயோசிதமாகவும், ஒரு குறிப்பிட்ட பரப்பிற்குள் இடைவிடாது சுழற்றுவதற்கும் உபயோகப் படுகிறது 'வீடு கட்டுதல்' எனும் இச் சீரிய முறையானது, இச் சிலம்ப விளையாட்டில் சிறப்பிடம் பெற்றுள்ளது குறிப்பிடத் தக்கது. பல திசைகளிலும், திக்குகளிலும் ஒருவன் 'வீடு கட்டுதல்' எனும் முறையைத் துரிதமாகவும், வேகமாகவும், செய்வானானால், அவன் சிலம்பக் கலையில் நிபுணன் என்பது புலனாகும். இச் சிறப்பு முறையை ஒரு சாரார் 'வீடு கட்டுதல்' என்பர். இன்னொரு சாரார் 'கோட்டை கட்டுதல்' என்பர். (படம் – 2)




படம் 2.முன் திசையில் கோட்டை கட்டுதல் (வீடு கட்டுதல்)

ஓர் சிலம்ப வீரனின் காலடி வரிசை முறையானது ஓர் புலியின் காலடி வரிசையை விட மிகவும் சுறுசுறுப்பாகவும், சற்றும் தப்பாது முன் பின் சென்று சுழல்வதாகவும் அமைந்திருக்கும்.

**ஒரு அடி பாவலா :**

இந்தக் காலடிப் பயிற்சியில் இடது காலும், இடது தோளும் சிலம்பன் செல்ல வேண்டிய திக்கை நோக்கி இருக்க வேண்டும். இடது கால் முன்பாகவும், வலது கால் அதற்குப் பின்னுக, தோள் களுக்கு இடையிலுள்ள தூரம் கால்களுக்கிடையே அமையுமாறும் கொண்டு நிற்க வேண்டும்.

பிறகு வலது காலைத் தரையில் அழுத்தி, வலது காலை, இடது கால் இருந்த இடத்தருகே ஊன்றி, இடது காலை, வலது காலிற்கு முன்னுல் முன்பு இருந்த தூரத்தையையே இடைக் கொண்டு, ஊன்ற வேண்டும். இங்ஙனம் செய்யுங்கால், சிலம்பன் முன்பு தானிருந்த இடத்தை விட்டுப் பெயர்ந்து முன்னுக ஒருதப்படி சென்று முன்பிருந்த நிலையில் நிற்பான். இம் முறையை மறுபடி மறுபடி செய்ய சிலம்பன் ஒரே திசை நோக்கி முன்னேறுவான். இம் முறையைத் "தவளைப் பாய்ச்சல்" என்று வழங்குவர்.

இதுபோல், முன் செல்லாது, பின் செல்லும் முறையையும் பழகுதல் சாலவும் நன்று. மேலும் "தவளைப் பாய்ச்சல்" முறையை வலது கால் முன் வைத்தும் செய்து பழகுதல் வேண்டும்.

இரண்டடிப்பரவலா :

இக் காலடிப் பயிற்சி, நடந்து முன் செல்லுதலை ஒத்தது. ஆனால் எந்தக் கால் முன்னால் இருக்கிறதோ, அதே பக்கத்துத் தோளும் அதே திக்கை நோக்கி அமைந்திருக்க வேண்டும். உதாரணமாக சிலம்பன் தனது இடது காலை முன் வைத்து, வலது காலை அதற்குப் பின்னாகத் தோள்களுக்கிடைப்பட்ட தூரம், தனது கால்களுக்கிடைப்பட்ட தூரமாக அமையுமாறு கொண்டு நிற்க வேண்டும்.

இந்நிலையில், வலது கால் முதலில் முன்பாக நகர்ந்து இடது காலுக்கு முன் ஒரு தப்படி சென்று ஊன்றியதும், வலது தோளும் அதே திக்கை நோக்கி நகர்கிறது. உடனே, இடது கால் முன்னேக்கி நகர்ந்து வலது காலுக்கு முன் ஒரு தப்படி சென்று ஊன்றியதும், இடது தோளும் அதே திக்கை நோக்கி நகர்கிறது. இவ்வாறு வலது, இடது கால்கள் மாறி மாறி முன்னேக்கிச் செல்கிறது. அச்சமயம், வலது, இடது தோள்களும் நகர்ந்து ஒரே திக்கு நோக்கிச் செல்கின்றன. இங்ஙனம் இக் காலடி முறையை மறுபடியும் செய்ய சிலம்பன் ஒரே திசை நோக்கி முன்னேறுகிறான். இப்படி இப்பயிற்சி தொடர்ந்து செய்யப்பட வேண்டும். இம் முறையை 'அரவடி வரிசை' அல்லது 'பாம்பின் வரிசை' என்றும் வழங்குவாருண்டு. ஏனெனில் பாம்பானது வலது, இடது புறம் வளைந்து வளைந்து முன்னேறுவது போல் சிலம்பனும் முன்னேற, வல, இட தோள்களையும், உடம்பையும் பாம்பு போல் வளைத்து ஒரே திக்கு நோக்கி செல்லுகிறான். இதுபோல் முன் செல்லாது, பின் செல்லும் முறையையும் பழகுதல் சாலவும் நன்று. மேலும் 'அரவடி வரிசை' அல்லது 'பாம்பின் வரிசை' முறையை வலதுகால் முன் வைத்தும் செய்து பழகுதல் வேண்டும்.

மூன்றடிப் பாவலா : (அல்லது மூன்று வட்டத்தினுள் பாவலா)

இப்பயிற்சியில் சிலம்பனின் ஆரம்ப நிலை, ஒரு அடி பாவலா வின் நிலையை ஒத்தது. அதாவது இரண்டு தோள்களுக்கிடையி லுள்ள தூரத்தை இடையே பெற்று ஒருகால் முன்னாகவும், அடுத்த கால் பின்னாகவும் இருக்கும்.




படம் 3. மூன்றடிப் பாவலா:
ஆரம்ப நிலை




படம் 4. மூன்றடிப் பாவலா:
மத்திப நிலை

உதாரணமாக இடது கால் (படம் 3ல்) காட்டப்பட்டபடி முன்னாகவும் (அதாவது முதலாவது வட்டத்திலும்) வலது கால் (படம் 3ல்) காட்டப்பட்டபடி பின்னாகவும் வைத்து நிற்க வேண்டும். இவ்விதமாய் இடது காலும், இடது தோளும் ஒரே திக்கை நோக்கி இருக்க வேண்டும். இதுதான் முதல் நிலை.

பின்பு கடிகாரச் சுற்றுபோல் தனது இடது தோளை அவ்வண்ணம் திசை திருப்பி இடது காலைப் பக்கமாகவும், சற்று முன்னாகவும் கொண்டு போய் (III)–ம் வட்டத்துள் ஊன்றி, உடனே இடது தோளைக் கடிகாரச் சுற்றுக்கு எதிர்த்திசை திருப்பி, வலது காலை முதன்முதல் இடது கால் ஊன்றியிருந்த (I)ம் வட்டத்துள் ஊன்றி, படம் 4ல் கொடுக்கப்பட்டபடி சிலம்பன் பின் திசை நோக்கி நிற்றல் வேண்டும். பின், கடிகாரச் சுற்றுபோல் தனது வலது தோளைத் திருப்பி வலது காலை (II)ம் வட்டத்தினுள் ஊன்றி, மறுபடியும் உடனே கடிகாரச் சுற்றுபோல் வலது தோளை மேலும் திருப்பி, இடது காலை (I)ம் வட்டத்தினுள் ஊன்றி, இங்ஙனம் ஆரம்ப நிலையில் நிற்றலைப் போல இடது கால் வட்டம் I லும், வலது கால் வட்டம் IIலும் இருக்குமாறு நேர் திசை நோக்கி நின்றுப் பழகுதல் வேண்டும்.

ஆரம்பப் பயிற்சி பெறும் சிலம்பன் மேற்கூறிய வண்ணம் மூன்று வட்டங்களுக்குள் காலடிவைத்துப் பழகவேண்டும். இக் காலடி வரிசையை வட்டத்திற்கு வெளியே வைத்து எதிரியை நோக்கி முன்னேறவேண்டின் ஒரே ஒரு காரியத்தை மட்டும் அவர் கள் மனத்தில் நிறுத்தவேண்டும். அதாவது மூவடிப் பாவலாப் பயிற்சியில் கண்டபடி காலடி வரிசையைச் செவ்வனே செய்யுங் கால், ஒவ்வொரு முறை காலே ஊன்றும்போதும், அதைச் சற்று முன்னுக ஊன்றக் கற்றுக்கொள்ள வேண்டும்.




படம் 5. மூன்று நிலேயான குறியிலிருந்து முன்னேறல்

அதுபோல எதிரியின் தாக்குதலுக்கு விலகிப் பின் செல்ல வேண்டுமாயின், ஒரே ஒரு காரியத்தை மட்டும் மனத்தில் நிறுத்த வேண்டும். அதாவது மூவடிப் பாவலாப் பயிற்சியில் கண்டபடி, காலடி வரிசையைச் செவ்வனே செய்யுங்கால், ஒவ்வொரு முறை காலே ஊன்றும்போதும் அதைச் சற்று பின்னுக ஊன்றக் கற்றுக் கொள்ளவேண்டும்.

இம் மூவடிப் பாவலாவானது ஓரடிப் பாவலா, இரண்டடிப் பாவலா இவைகளே விடப் பின்வரும் முறையில் சிறந்தது.

அதாவது இக்காலடி வரிசை, சிலம்பன் தனது, வலது, இடது புறம் சற்று விலக வழிவகுக்கிறது. சிலம்பன் வலது, அல்லது இடது புறம் விலகி எதிரியின் தாக்குதலேக் கட்டவும், அல்லது அவன் தாக்குதலுக்கு விலகவும் வழிவகுக்கிறது. மேலும் எதிரியை

அவனது வலது அல்லது இடது புறமாகத் தான் விரும்பியவாறு எளிதில் தாக்கவும் சிலம்பனுக்கு வழிவகுக்கிறது.

நாலடிப் பாவலா :

இப்பயிற்சியில் சிலம்பனின் ஆரம்பநிலே ஒரு அடி பாவலாவின் நிலேயை ஒத்தது. அதாவது இரண்டு தோள்களுக்கிடையிலுள்ள தூரத்தை இடையே பெற்று ஒரு கால் முன்னுகவும், அடுத்த கால்




படம் 6 நாலடிப் பாவலா:
முதல் நிலே




படம் 7. நாலடிப் பாவலா:
மத்திப நிலே

பின்னுகவும் இருக்கும். உதாரணமாக இடதுகால் படம் 6ல் காட்டப் பட்டபடி முன்னுகவும், அதாவது 1-ம் வட்டத்திலும், வலதுகால் படம் 6ல் காட்டப்பட்டபடி பின்னுகவும் வைத்து நிற்கவேணடும். இவ்விதமாய் இடதுகாலும், இடதுதோளும் ஒரேதிக்கு நோக்கி இருக்கவேண்டும். இதுதான் முதல் நிலே.

பின்பு கடிகாரச் சுற்றுபோல் தனது இடதுதோளே அவ்வண் ணம் திசை திருப்பி இடது காலே, வலதுகால் ஊன்றியிருக்கும் வட்டத்திற்கு வலப்புறமுள்ள III என்ற குறியிட்டுள்ள வட்டத் திற்குள் இருக்கும்படிப் பின்னுகக் கொண்டுபோய் ஊன்றி உடனே, இடது தோளேக் கடிகாரச் சுற்றிற்கு எதிர்த்திசை திருப்பி

வலது காலை II-ம் வட்டத்திலிருந்து பெயர்த்து, இடதுகால் முதலில் ஊன்றியிருந்த வட்டத்திற்கு வலப்புறமுள்ள IV என்ற குறியிட்டுள்ள வட்டத்திற்குள் இருக்கும்படி சுழற்றி முன்னாகக் கொண்டுபோய் ஊன்றி, நிற்றல் வேண்டும். படம் 7 பார்க்கவும் இந்நிலையில் சிலம்பனின் வலது காலும், வலது தோளும் சிலம்பன் செல்லவேண்டிய திக்கை நோக்கியிருக்கிறது.

பின் கடிகாரச் சுற்றுபோல் தனது வலது தோளைத் திருப்பி, வலது காலை II-ம் வட்டத்தினுள் ஊன்றி (இடது காலிற்கு முன்பாகக் கொண்டு சென்று) மறுபடியும் உடனே கடிகாரச் சுற்றுபோல் வலது தோளை மேலும், திருப்பி, இடது காலை (வலது காலிற்குப் பின்னாகக் கொண்டு சென்று) இங்ஙனம், ஆரம்ப நிலையின் நிற்றலைப்போல், இடதுகால் வட்டம் I-லும், வலது கால் வட்டம் IIலும் இருக்குமாப்போல நேர்திசை நோக்கி நின்றும் பழகுதல் வேண்டும்.

ஆரம்பப் பயிற்சி பெறும் சிலம்பன், மேற்கூறிய வண்ணம் நான்கு வட்டங்களுக்குள் காலடி வைத்துப் பழகவேண்டும். (படங்கள் 6, 7) இக்காலடிவரிசையை வட்டத்திற்கு வெளியே வைத்து எதிரியை நோக்கி முன்னேற வேண்டின், ஒரே ஒரு காரியத்தை மட்டும் அவர்கள் மனதில் நிறுத்தவேண்டும் அதாவது நாலடிப் பாவலாப் பயிற்சியில் கண்டபடி, காலடி வரிசையைச் செவ்வனே செய்யுங்கால்,ஒவ்வொரு முறை காலை ஊன்றும்போதும் அதைச் சற்று முன்னாக ஊன்றக் கற்றுக்கொள்ள வேண்டும். படம் 8 காண்க.




படம் 8. நான்கு நிலையான குறியிலிருந்து முன்னேறல்

அதுபோல் எதிரியின் தாக்குதலுக்கு விலகிப்பின் செல்ல வேண்டுமாயின், ஒரே ஒரு காரியத்தை மட்டும் மனத்தில் நிறுத்த வேண்டும்.

அதாவது நாலடிப் பாவலாப் பயிற்சியில் கண்டபடி காலடி வரிசையைச் செவ்வனே செய்யுங்கால், ஒவ்வொரு முறை காலை ஊன்றும்போதும் அதைச் சற்றுப் பின்னுக ஊன்றக் கற்றுக் கொள்ளவேண்டும்.

இந்த நாலடிப் பாவலாவானது, மூன்றடிப் பாவலாவை விடப் பின்வரும் முறையில் சிறந்தது. அதாவது இக்காலடி வரிசை. சிலம்பன் தனது வலது, இடதுபுறம் அதிக தூரம் விலக வழி வகுக்கிறது. சிலம்பன் சந்தர்ப்பத்திற்கு ஏற்ப வலது அல்லது இடதுபுறம் நன்கு விலகி எதிரியின் தாக்குதலைக் கட்டவும்,அல்லது அவன் தாக்குதலுக்கு அதிக தூரம் விலகவும் வழிவகுக்கிறது, மேலும் எதிரியை சந்தர்ப்பத்திற்கேற்ப அவனது வலது, இடதுபுறமாகத் தான் விரும்பியவாறு மிக எளிதில் சென்று தாக்கவும் சிலம்பனுக்கு வழி வகுக்கிறது.

**காலைத் திருகித் திரும்பும் அடிவரிசை- பின் இறக்கம்.**

இப்பயிற்சியில் சிலம்பனின் ஆரம்பநிலை ஒரு அடி பாவலாவின் நிலையை ஒத்தது. அதாவது இரண்டு தோள்களுக்கிடையிலுள்ள தூரத்தை இடையே பெற்று, ஒரு கால் முன்னுகவும், அடுத்த கால் பின்னுகவும் பாவி நிற்றல்.

உதாரணமாக இடதுகால் முன்னுகவும், வலதுகால் பின்னுகவும் வைத்துச் சிலம்பன் நிற்கிருன் என்று கொள்க. பின் திடீரென இடது காலில் பளு தாக்குமாறு உடம்பை முன் இழுத்து இடது காலில் சுழன்று உடம்பை இடபுறமாக அரைச்சுற்று திருப்பி பின் திசை நோக்கி நிற்பான். வலதுகால் பின் திசை நோக்கி முன்னுலிருக்கும். பின், வலது காலில் சுழன்று மேலும் இடப்புறமாக அரைச் சுற்று சுழன்று திரும்பி, ஆரம்பநிலை நோக்கி நிற்பான். இம்பொழுது வலது கால் முன்னும், இடதுகால் 2 தப்படி (ஆரம்ப நிலையிலிருந்து) பின்னுமாக அமையும். பிறகு முன்னிருக்கும் வலது காலை வலப்புறமாக, இடது காலுக்குப் பின் செல்லுமாறு கொண்டு போய் ஊன்றினுல், இப்போது சிலம்பனின் இடது கால் மொத்தத்தில் இரண்டு தப்படிகள் பின் சென்றுள்ளதையும், வலது காலும் மொத்தத்தில் இரண்டு தப்படிகள் சென்றுள்ளதையும்

காணலாம். இந்நிலையில் சிலம்பன் ஆரம்ப நிலையை நோக்கி, இடதுகால் முன்வைத்து நிற்கிருன். சிலம்பக்கம்பு மொத்தத்தில் இரண்டு சுற்றுகள் சுற்றிவிட்டது.

**காலைத் திருகித் திருப்பும் அடி வரிசை – முன்னேறல்.**

இப்பயிற்சியில் சிலம்பனின் ஆரம்ப நிலை ஒரு அடி பாவலாவின் நிலையை ஒத்தது. அதாவது இரண்டு தோள்களுக்கிடையிலுள்ள தூரத்தை இடையே பெற்று ஒரு கால் முன்னுகவும், அடுத்த கால் பின்னுகவும் பாவி நிற்றல்.

உதாரணமாக இடதுகால் முன்னுகவும் வலதுகால் பின்னுகவும் வைத்துச் சிலம்பன் நிற்கிருன் எனக் கொள்க. அவனது இடது காலும், இடது தோளும் சிலம்பன் செல்லவேண்டிய திக்கு நோக்கி அமைந்திருக்கும்.

இந்நிலையில் அவனது உடற் பளுவை இரண்டு கால்களும் ஏற்று அமைந்திருக்கும். பின் திடீரென இடதுகாலில் பளு தாக்குமாறு உடம்பை முன் இழுத்து, இடது காலில் சுழன்று, உடம்பை வலது புறமாக அரைச்சுற்று திருப்பி ஊன்றி வலதுகாலை பின் ஊன்ருமல், மேலும் அரைச் சுற்று சுற்றவைத்து இடது காலுக்கு முன் ஒரு தப்படி செல்லவைத்துப் பின் அவ்வலது காலில் சுழன்று சரீரத்தை மேலும் இடதுபுறமாக இன்னுமொரு அரைச் சுற்று சுற்றி வலது காலுக்குமுன் இடது கால் ஒரு தப்படி செல்லுமாறு வைத்து முன் இருந்த நிலையிலிருந்து மொத்தம் இரண்டு தப்படிகள் முன் செல்லலாம். சிலம்பக்கம்பு மொத்தத்தில் இரண்டு சுற்றுகள் சுற்றிவிட்டது.

இவ்வாறு எதிரியைத்தாக்க முன்னேறல், பின்னேறல் என்ற முறைகள் கையாளப்படுகின்றன. மேற்கூறிய முறையினுல் கம்பு சுழற்றும் தூரமும், வேகமும் அதிகரிக்கப்படுகின்றன. இரண்டாவதாகக் கம்பு எதிரியின் கம்பையோ, அவனது உடம்பின் பாகங்களையோ தாக்கும்போது தாக்குவோரின் முழுபலனும், பளுவும் அவன் கம்பின் மூலம் எதிரியின் கம்பின்மீதோ அல்லது எதிரியின் உடம்பின் மீதோ அழுத்தப்படுவதை உணர முடிகிறது.

மூன்ருவதாக எதிரியை நோக்கி இரு தொடரடிகள் சுடச் சுடக் கொடுக்க இம்முறைகள் வழிவகுக்கின்றன.

காலைத் திருகித் துள்ளித்திரும்பும் அடி வரிசை

—முன்னேறல்

—பின்னேறல்

எதிரியினண்டையில் சடிதியில் நெருங்கவோ அல்லது எதிரியைவிட்டுச் சடிதியில் மறையவோ மேற்கூறிய முறையை மேலெழுந்து துள்ளலோடு செய்யலாம். துள்ளிச் செய்யும் அம்முறைக்குக் 'காலைத் திருகித் துள்ளித் திரும்பும் அடிவரிசை' என்று பெயர்.

படம் 9-ல் 'காலைத் திருகித் துள்ளித் திரும்பும் அடிவரிசையில் ஒரு வகை காட்டப்பட்டுள்ளது.




படம் 9. காலைத் திருக்கித் துள்ளித் திரும்பும் முறையில் ஒருவகை

இம்முறைக்குப் பருந்தின் பயங்கர வீழ்வு முறை என்றும், பயங்கர மின்னல் பாய்ச்சல் முறை என்றும் பெயர்.

கம்பு சுழற்றுதல்:

இருகைபிடி: வலது உள்ளங்கையின் குறுக்காகச் சிலம்பக் கம்பின் ஒரு முனைப் பகுதி அமையுமாறு செய்து, ஆள்காட்டி விர

லின் இரண்டாவது கணு கம்பின் வலப்புறமும் பெருவிரல் அதன் இடப்புறமும் அதைத் தாங்க, ஏனைய மூன்று விரல்களும் கம்பை வளைத்துப் பிடிக்கவும். இடதுகைப் பெருவிரலுக்கும், ஆள்காட்டி விரலுக்கும் இடையிலுள்ள 'V' போன்ற பாகத்தில் சிலம்பக் கம்பின் அடிப்பாகம் சுழலுமாறு இடதுகையை 3 அல்லது 4 அங்குல தூரம் தள்ளிப் பிடிக்கவும் (பற்றவும்). ஏனைய இடது கை மூன்று விரல்களும் கீழிருந்து மேலாக சிலம்பக் கம்பை வளைத்துப் பிடிக்கச்செய்யவும். இதுதான் சிலம்பக் கம்பைப் பிடிக்கும் (பற்றும்) அடிப்படைத் தத்துவமாகும். இதை இருகைபிடி' என்பர்.

**கம்பைப் பிடிக்கும் (பற்றும்) பலமுறைகள்: இரு கை பக்கப்பிடி:**

மேற்கூறிய பிடியில் இடது கை பிடிக்கும், வலது கை பிடிக்குமிடையில் இடைவெளிதூர மில்லாது சிலம்பக் கம்பைப் பிடித்தால் அதற்கு 'இருகை பக்கப்பிடி' என்று பெயர். (படம் 10)




படம் 10 இரு கை பக்க பிடி

**இருகை தூரபிடி:**

இடது கை பிடிக்கும், வலது கை பிடிக்குமிடையில் 3 அல்லது 4 அங்குலங்களுக்கு மேல் இடைவெளி தூரமிருக்குமாறு சிலம்பக் கம்பைப் பிடித்தால், அப் பிடி 'இரு கை தூரப்பிடி' எனப் பெயர் ஏற்கும். (படம் 11)



படம் 11 இரு கை தூரபிடி.

**இரு கை பக்கபிடி: உள்ளங்கையைக் கம்பின் கீழ் விரித்தல்:**

இதில் விவரிக்கப்பட்டுள்ள பிடியானது 'இரு கை பக்கப்பிடி' யிலிருந்து சற்று வேறுபட்டது ஒரே ஒரு வேறுபாடு என்ன வெனில், இப்பிடியில், இடது கையின் 'V' பகுதியில் சிலம்பக்கம்பு சுழல, பெருவிரலைத் தவிரவுள்ள ஏனைய நான்கு விரல்களின் பின் புறங்கள் சிலம்பக் கம்பின் கீழ்புறம் தாங்கி விரிக்கப்பட்டிருக்கும் இப்பிடி, எதிரியின் கம்பைப் பிடுங்கப் பயன்படுகிறது.

மேலும் சிலம்பக்கம்பு இடதுகையின் 'V' யில் சுழலுங்கால் எளிதாக முன்னும் பின்னுமாக உந்தித் தள்ளப்பட வழி வகுக் கிறது. ஆகவே தேவைக்குத் தக்கபடி, சிலம்பக் கம்பை எவ்வளவு நீட்டவேண்டுமோ, எவ்வளவு வேகத்தில் நீட்டப்பட வேண்டுமோ, அதற்கேற்றாற்போல் அதை எதிரியின்மேல் குத்து தல் சாத்தியமாகிறறு. இதற்குச் சமயோசித புத்தியும், மின்னல் வேகத் திறமையும் தேவை. (படம் 12)




படம். 12

இரு கை பக்கபிடி:

உள்ளங்கையை கம்பின் கீழ், கீழ் நோக்கி விரித்து —இடது கையை முன் நோக்கி உருவிவிடல்

வலது கை முனை — இடது கை இருவிரல் பிடி :

இப்பிடி, 'இரு கை பிடி'யிலிருந்து சற்று வேறுபட்டது. ஒரே ஒரு வேறுபாடு என்னவெனில், இப்பிடியில் இடது கையின் பெருவிரல், சிலம்பக்கம்பை இடது பக்கம் பற்றிப் பிடிக்க, அதன் ஆள்காட்டி விரலின் இரண்டாவது கணு, கம்பின் வலப்புறத்தைப் பற்றிப் பிடிக்க, வலது கை, கம்பின் பக்கநுனிப் பாகத்தைப் பிடிக்கிறது

இப்பிடி, எதிரியைத் திடீரென எதிர்பாரதவாறு குத்தப் பிரயோகிக்கப் பயன்படும். இடது கையின் பெருவிரலுக்கும், ஆள் காட்டி விரலுக்கு மிடையே கம்பு பிடிக்கப் பட்டிருப்பதால், கம்பை அவ்விரல்களுக்கிடையே உருவிக் குத்த ஏதுவாகிறது (படம் 13)




படம். 13

வலது கை முனை

இடது கை

இரு விரல் பிடி:

**இரு கை-பக்க, தூர மாற்றுப் பிடிகள்**

படத்தில் காட்டப்பட்டபடி இடது கை மாற்றிப் பிடிக்கப்பட்டால், அப்பிடிக்கு 'இரு கை மாற்றுப்பிடி' என்றுபெயர்(படம் 14, 15) வலது, இடது கைகளுக்கிடைப்பட்ட தூரம் படம் 14-ல் விவரிக்கப்பட்டபடி மிகக் குறைவாக இருந்தால், அப்பிடியை 'இருகை பக்க மாற்றுப்பிடி' என்றும், படம் 15-ல் விவரிக்கப் பட்டபடி வலது இடது கைப்பிடிகளுக்கிடைப்பட்ட தூரம் அதிகமாக இருந்தால் அப்பிடியை 'இருகை தூரமாற்றுப்பிடி' என்றும் கூறுவர். (படம் 15.)




படம் 14 இரு கை
பக்க மாற்று பிடி




படம் 15 இரு கை தூர மாற்றுப் பிடி.

**இரு கை மாற்றுப்பிடி: இடது உள்ளங்கையைக் கம்பின்மேல் விரித்தல்:**

இதில் விவரிக்கப்பட்டுள்ள பிடியானது 'இரு கை தூர மாற்றுப் பிடி'யிலிருந்து சற்று வேறுபட்டது. படங்கள் 15 ஐயும், 16-ஐயும் நன்கு நோக்குக. படம் 15-ல் காட்டப்பட்டுள்ள 'இடது கை மாற்றுப்பிடி'யின் விரல்கள் 16-ல் காட்டப்பட்டுள்ளவாறு நீட்டப்பட்டுள்ளன. இடது பெருவிரல் தவிர, பிறநான்கு விரல்களும் கம்பின் மேல் விரிக்கப்பட்டுள்ளன. வலதுகை, கம்பின் பக்க முனையிலிருந்து சற்று மேலாகக் கம்பைப் பற்றியுள்ளது,

இப் பிடியும், பெரும்பாலும் எதிரியின் கம்பைப் பறிக்க மிகவும் உபயோகிக்கப்படுகிறது. (படம் 16)




படம் 16 இரு கை மாற்றுப் பிடி: இடது உள்ளங்கையை கம்பின் மேல் விரித்தல்

**கம்பின் முனை மாற்றுதல்:**

படம் 17ல் காணும் வண்ணம் இரு முனைகளிலும் பிடிக்கப்பட்டுள்ள சிலம்பக் கம்பின் தூரமுனையானது, படம் 18-ல் காணும் வண்ணம் பக்க முனையாக மாற, சிலம்பன் தனது இடதுகாலைத் தன் உடலின் இடது பக்கமாக வலது காலுக்குப்பின் கொண்டு சென்று இடதுகையைக் கீழேயும், வலது கையை மேலேயும் உந்தித்தள்ளினது காண்க. (படம் 17, படம் 18)

படம் 17




படம் 17. இருகை வெகு தூர மாற்று பிடி. பக்க தூர முனை களில் கைகள் பற்றுதல்

படம் 18




படம் 18. படம் 17ல் காட்டப்பட்ட கம்பின் கீழ், மேல் முனைகள், முறையே மேல்,கீழ் முனைகளாகத் திருப்பப்படல்.

பின் சிலம்பன் வலது கைப்பிடியை நெகிழ விட்டு விட்டு, இடது கையால் மட்டும் கம்பைப் பற்றி சிலம்பப் போர் செய்யலாம். அல்லது சிலம்பன் இடது கைப்பிடியைநெகிழ விட்டு விட்டு, வலது கையால் மட்டும் கம்பைப் பற்றியும் சிலம்பப் போரில் ஈடுபடலாம்.

கம்பின் தூரமுனை, அல்லது பக்கமுனை இவைகள் இரண்டில் எம்முனைகொண்டும், மாறி மாறி எதிரியைத் தாக்கும் திறமையை ஒருவன் பெறலாம். இத்திறமை பெற நல்ல பயிற்ச்சி தேவை. நல்ல சாதுரியமும் தேவை.

## வீச்சு

### முன் வீச்சு

சிலம்பக் கம்பின் பக்கமுனையை 'இருகை பக்கப்பிடி'யால்பற்றிக் கம்பை உன் நெஞ்சுக்கு முன், தரைக்கு இணையாகப் பிடி. கம்பைச் சுழற்ற மணிக்கட்டு நன்கு சுழலவேண்டும். முதலாவதாக தூர

முனையானது, படம் 19-ல் காட்டப்பட்டபடி 'S' என்ற இடத்தில் இருப்பதாக வைத்துக்கொள்வோம். தூரமுனையானது பிறகு வலது புறத்தில் கடிகாரச் சுற்றுபோல் 1, 2 என்ற புள்ளிகள் வழியாகச் சுழன்று 'S' என்ற ஆரம்ப இடத்தை அடையும். அவ்வமயம் சிலம்பக் கம்பு முன்போலவே நெஞ்சுக்கு முன், தரைக்கு இணையாக இருக்கும். பின் தூரமுனையானது படம் 19-ல் கண்டவாறு இடது புறத்தில் கடிகாரச் சுற்றுக்கு எதிர்த் திசையில் 3, 4 என்ற புள்ளிகள் வழியாகச் சுழன்று 'F' என்ற இடத்தில் முடிவடையும். அவ்வமயம் சிலம்பக்கம்பு முன்போலவே நெஞ்சுக்கு முன் தரைக்கு இணையாகப் பிடிக்கப்பட்டிருக்கும். படம் 19. முன் வீச்சு: தூர முனையின் வலது இடது பக்க சுழற்சி: ஒரு முறை




படம் 19. முன் வீச்சு: தூர முனை சுழன்று வரும் பாதை: ஒரு வழி:

சிலம்பக் கம்பின் தூரமுனை படம். 20-ல் காட்டப்பட்டபடி, வலது புறத்தில் முதலாவது 1, 2 என்ற புள்ளிகள் வழியே கடிகாரச் சுற்றுக்கு எதிர்திசையில் சுழன்று S, என்ற ஆரம்பப் புள்ளியை அடைந்து, பின் இடது புறத்தில் 3, 4, என்ற புள்ளிகள் வழியே கடிகாரச் சுற்றுபோல் சுழன்று F என்ற இடத்தில் முடிவடையும் அவ்வமயம் சிலம்பக்கம்பு முன்போலவே நெஞ்சுக்கு முன் தரைக்கு இணையாகப் பிடிக்கப்பட்டிருக்கும். படம் 20 முன் வீச்சு: தூர முனையின் வலது இடது பக்க சுழற்சி; பிறிதொரு முறை

படம் 20 முன் வீச்சு: தூரமுனை சுழன்று வரும் பாதை: 2-ம்வழி

இவ்விதம் இம் முன்வீச்சு இருவகைப்படும்.

**பக்க வீச்சு:**

சிலம்பக் கம்பின் பக்க முனையை 'இரு கை பக்கப்பிடி' யால் பற்றிக் கம்பை உன் வலது விலாப்புறத்தில் உனக்கு வலப் பக்கத்தில் தரைக்கு இணையாகப் பிடி. உன் நெஞ்சு நேராக இருக்கவேண்டும். நீ நோக்கும் திசைக்கும் சிலம்பக் கம்பின் தூரமுனை நோக்கியிருக்கும் திசைக்கும் இடைப்பட்ட கோணம் நேர் கோணமாகும். (90°)

கம்பைச் சுழற்ற மணிக்கட்டு நன்கு சுழலவேண்டும். 'S' என்ற திக்கை நோக்கிப் பிடிக்கப்பட்ட கம்பியின் தூரமுனை (படம் – 21ல்) காட்டப்பட்டபடி 1, 2 என்ற புள்ளிகள் வழியாகக் கடிகாரச்சுற்றுபோல் சுழன்று 'S' என்ற ஆரம்ப இடத்தை அடையும். பின் அம்முனை கடிகாரச்சுற்றுக்கு எதிர்த்திசையில் 3, 4 என்ற புள்ளிகள் வழியாகச் சுழன்று 'F' என்ற இடத்தில் முடிவடையும்.

பக்க வீச்சு: தூர முனை வலது புறமாகப்படத்தில் காட்டியவாறு சுழலுதல்: ஒருமுறை




படம் 21: பக்க வீச்சு: தூரமுனை சுழன்று வரும் பாதை: ஒரு வழி

சிலம்பக் கம்பின் தூரமுனை படம் 22-ல் காட்டப்பட்டபடி,




படம் 22 பக்கவீச்சு: தூர முனை வலது புறமாகப்படத்தில் காட்டிய வாறு சுழலுதல்: பிரிதொருமுறை

1, 2 என்ற புள்ளிகள் வழியாகக் கடிகாரச் சுற்றுக்கு எதிர்த் திசையில் சுழன்று 'S' என்ற ஆரம்பப்புள்ளியை அடைந்து, பின் 3, 4 என்ற புள்ளிகள் வழியே கடிகாரச் சுற்றுபோல் சுழன்று 'F' என்ற இடத்தில் முடிவடையும். அவ்வமயம் முன் போலவே சிலம்பக்கம்பு விலாப்புறத்தில் பூமிக்கு இணையாய்ப் பிடிக்கப் பட்டிருக்கும். உன் நோக்கு திக்குக்கும், தூரமுனையின் திக்குக்கும் இடைப்பட்டுள்ள கோணம் நேர் கோணமாகும். (90°)

**பின் வீச்சு :**

சிலம்பக் கம்பின் பக்க முனையை 'இரு கை பக்கப்பிடி'யால் பற்றிக் கம்பை உன் நெஞ்சுக்கு முன், தரைக்கு இணையாகப்பிடி. கம்பைச் சுழற்ற, மணிகட்டு நன்கு சுழலவேண்டும்.

முதலில் முன்வீச்சு வீசு. முன்வீச்சு வீசிக்கொண்டே, நெஞ்சின் அருகிலுள்ள கையைக் கொஞ்சம் கொஞ்சமாக மேல் நோக்கிக்கொண்டு போ. ஆனால் நீ முன் வீச்சுதான் செய்து கொண்டிருப்பாய். உன் கைப்பிடியானது கொஞ்சம் கொஞ்சமாக மேல் எழுந்து இறுதியில் உன் தலைக்குமேல் செல்லுகிறது. அப்பொழுது உன் இரு கை மொழிகளும் முன் திசை நோக்கும். உன் கைப்பிடியை உன் தலைக்குப் பின்னாகக் கொண்டு செல். அப்பொழுது நீ வீசிக்கொண்டிருக்கும் வீச்சுக்குப் 'பின் வீச்சு' எனப் பெயர்.

படங்கள் 23, 24-ல் 'பின் வீச்சின்' இரு முறைகள் காட்டப் பட்டுள்ளன.




படம் 23 பின் வீச்சு: தூரமுனையின் ஒரு வழி.




படம் 24 பின் வீச்சு: தூரமுனையின் இரண்டாம் வழி

தலைமேல் வீச்சு :

சிலம்பக் கம்பின் பக்கமுனையை 'இரு கை பக்கப் பிடி'யால் பற்றிக் கம்பை உன் நெஞ்சுக்கு முன் தரைக்கு இணையாகப் பிடி. கம்பைச் சுழற்ற மணிக்கட்டு நன்கு சுழல வேண்டும்.

முதலில் முன்வீச்சு வீசு முன்வீச்சு வீசிகொண்டே, நெஞ்சின் அருகிலுள்ள கையைக் கொஞ்சம் கொஞ்சமாக மேல்நோக்கிக் கொண்டு போ. ஆனால் நீ முன்வீச்சுதான் வீசிக்கொண்டிருப்பாய். உன் கைப்பிடியானது தலைக்குமேல் செல்லுகிறது. நீ இப்பொழுது தலைக்குமேல் வீசிக்கொண்டிருக்கும் வீச்சு 'தலைமேல் வீச்சு' எனப் பெயர்பெறும்.

கீழ்வீச்சு: சிலம்பன் தன் திக்கைநோக்கி நேராக நிற்பதாக வைத்துக்கொள். சிலம்பக்கம்பின் பக்கமுனையை 'இரு கை பக்கப் பிடி'யால் பற்றிக் கம்பை நெஞ்சுக்கு முன், தரைக்கு இணையாக பிடித்திருக்கிருன். அக்கம்பு இடது பக்கத்தில் கீழ்நோக்கிச்சென்று அவனுக்குப் பின்புறமாகப் (கடிகாரச்சுற்ருக) போய் முதுகைச் சுற்றிப் பின் அவன் வலப்புறமாக, மறுபடியும் கீழ்நோக்கி, வந்து மேலெழுந்து (கடிகாரச்சுற்ருக) தான் ஆரம்பத்தில் நிறுத்தின நிலைக்கு (பூமிக்கு சமாந்தரமாக) மேல் நோக்கிக்கம்பு வந்தால், அஃது கீழ்வீச்சாகும்.

படம் 25ல் - கம்பு வலப்புறத்தில் கீழ்நோக்கி வந்து மேலெழு வதைக் காணலாம்.




படம் 25. வலப்பறமாக கீழிருந்து மேலெழும் கீழ் வீச்சு.

படம் 26 கீழ் வீச்சு: சிலம்பனின் வலப்புறமாக கீழிருந்து மேலாகக் கம்பின் தூரமுனை சுழன்று செல்லுதல்.




படம் 26 வலப்புறமாக கீழிருந்து மேலெழும் கீழ் வீச்சு இறுதியில் எதிரியின் தாடையைத் தாக்குதல்

கீழ்வீச்சின் முடிவில் எதிரியின் இடது தாடை தாக்கப்படல்.

இதுபோல் கம்பானது முதலில் வலது பக்கத்தில் கீழ்நோக்கிச் சென்று (கடியாரச் சுற்றாக) பின்புறமாகப்போய் முதுகைச்சுற்றி அவன் இடப்புறமாக மறுபடியும் கீழ்நோக்கி வந்து தான் முன் நிறுத்தின நிலைக்கு மேல்நோக்கி கம்பு வந்தால், அதுவும் கீழ் வீச்சாகும்.

மேல் வீச்சு :

சிலம்பன் ஆரம்ப நிலையில் தன் திக்கை நோக்கி நிற்பதாக வைத்துக்கொள். சிலம்பக் கம்பின் பக்கமுனையை இரு கை பக்கப் பிடியால் பற்றிக் கம்பை நெஞ்சுக்கு முன் தரைக்கு இணையாகப் பிடித்திருக்கிறான். அக்கம்பு இடது பக்கத்தில் கீழ்நோக்கிச் சென்று அவனுக்குப் பின்புறமாகப்போய் சுற்றிப் பின்னால் முதுகிற்குமேல் எழுந்து, வலதுபுறமாகத் தலைக்கு மேலும் வலது தோளுக்கு மேலும் சுழன்று எழுந்து பின் மேலிருந்து கீழாக முன் இறங்கி வந்து தான் முன் இருந்த ஆரம்ப நிலைக்கு வந்தால் அது மேல்வீச்சாகும். இது உடலின் வலப்புறத்தின் மேலிருந்து கீழ்நோக்கி உடம்பின் முன் வேகமாக இறங்குவதால் இது வலப்புற மேல்வீச்சு எனப்படும்.

இதுபோல் அக்கம்பு வலது பக்கத்தில் கீழ்நோக்கிச் சென்று அவனுக்குப் பின்புறமாகப்போய் சுற்றிப் பின்னுல் முதுகிற்குமேல் எழுந்து, இடதுபுறமாகத் தலைக்குமேலும், இடது தோளுக்கு மேலும் சுழன்று எழுந்து பின் மேலிருந்து கீழாக முன் இறங்கி வந்து, தான் முன் இருந்தஆரம்ப நிலைக்கு வந்தால் அதுவும் மேல் வீச்சாகும். இது உடலின் இடப்புறத்தின் மேலிருந்து கீழ் நோக்கி உடம்பின் முன் வேகமாக இறங்குவதால் இது இடப்புற மேல்வீச்சு எனப்படும்.

குறிப்பு :

1) கையின் மொழிகள் (elbows) கீழ், மேல் வீச்சுகள் செய்யும்போது விலாப்புறங்களை ஒட்டி வரவேண்டும்.

2) வலப்புறத்தின் வழியே வரும் கீழ்வீச்சைத் தொடர்ந்து, இடப்புறத்தின் வழியே கீழ் வீச்சையும் பயிலலாம்.

3) வலப்புறத்தின் வழியே வரும் மேல்வீச்சைத் தொடர்ந்து கையைத்திருப்பி, கம்பின் திசையையும் திருப்பி, இடப்புறத்தின் வழியே வரும் மேல்வீச்சையும் பயிலலாம்.

**படைவீச்சு அல்லது தலைமேல் சுழல்வீச்சு அல்லது கூட்டம் கலைக்கும் வீச்சு:**

இவ்வீச்சு முற்காலங்களில் சண்டைகளுக்குப் பயன்படுத்தப் பட்டது. ஆனுல் இக் காலத்தில் போலீஸ்காரர்கள் (காவலர்கள்) பல சமயங்களில் கூட்டங்களைக் கலைக்க இவ்வீச்சைப் பயன் படுத்துகின்றனர்.



படம் 27 முதல் நிலை: கட்டுக்கடங்காத கூட்டத்தை நோக்கி, சிலம்பன் இடதுகால் முன்வைத்து, தலைமேல் படை வீச்சு செய்ய ஆரம்பித்தல்.

இரண்டாம் நிலை: தலைமேல் படைவீச்சு:

இறுதிநிலை: சிலம்பன் இரண்டு தப்படிகள் முன்னேறி முதல் நிலையின் திக்கு நோக்கி நிற்றல். தலையின் மேல் கம்பு 5 படைவீச்சு சுற்றுகள் சுற்றி முடிவடைதல்.

படம் 27-ல் கட்டுக்கடங்காத கலவரம் உண்டு பண்ணும் கூட்டம் ஒன்று காட்டப்பட்டுள்ளது.

சிலம்பன் ஒருவன் சிலம்பக் கம்பின் முனையை, இரு கை தூர பிடியால் பற்றிக் கம்பைத் தன் தலைக்கு மேலாக உயர்த்திக் கலகக் கூட்டத்தாரை நோக்கித் தனது இடது கால் முன்னிருக்கக் கம்பைச்சுழற்ற ஆரம்பிக்கிறான். கலகக் கூட்டத்தார் சற்று அதிக தூரத்திலிருந்தால், சிலம்பன் இரு கை பக்கப் பிடியால் கம்பின் பக்க முனையைப் பற்றவேண்டும்.

இடது காலில் 'பிவட்' செய்து தன்னை (பாதி சுழற்றி) 180° கடிகாரச்சுற்று திசைக்கு எதிராகக் திருப்பி

முன் ஊன்றும்போது, கம்பு வேகமாகத் தலைக்கு மேல் அதிக சுற்றுகள் (Circles) சுற்றிக் கொண்டிருக்கிறது. சிலம்பன் அவ்வமயம் எதிர்திசை நோக்கி நிற்பான். (படம் 27-2ம் நிலை பார்க்கவும்)

பிறகு தொடர்ந்து சிலம்பன் தனது வலது காலில் 'பிவட்' செய்து தன்னை மேலும் 180° கடிகாரச் சுற்று திசைக்கு எதிராகத் திருப்பித் தனது இடதுகாலை முன்ஊன்றும் போது, கம்பு வேகமாகத் தலைக்கு மேல் பூமிக்கு இணையாகச் சுழன்றுகொண்டிருக்கும். படம் 27-ல் 3-ம் நிலையைப் பார்க்கவும். இப்பொழுது மொத்தத்தில் சிலம்பன் தன்னை ஒரு சுற்று சுற்றி, 2காலடி தூரம் முன் சென்றுள்ளான். ஆனால் சிலம்பக் கம்பு 1800' or 5 சுழற்ச்சிகள் சுழன்று விட்டது என்பதில் ஐயமில்லை. சிலம்பன் தொடந்து, மேலும் வலது கால் இடது காலை முறையே எடுத்து வைத்து முன் செல்லலாம். (படம்–27)

சிலம்பன் 2 காலடிகள் எடுத்து வைத்து முன்னேறியதுபோல அவன் பழையபடி 2 காலடிகள் தூரம் பின்னேறி ஆரம்ப இடத்திற்கும் வரலாம். அப்படியானல் இவன் எதிர்மறையாகக் கம்பைச் சுழற்றிக் காலடிகளையும் எதிர்மறையாக வைக்கவேண்டும்.

இவ்விதம் சிலம்பன் சடிதியாகவும் வாயுவேகத்திலும் கம்பைச் சுழற்றவேண்டும். இங்ஙனம் மின்னல் வேகத்தில் சிலம்பு சுழற்றப் படுவதால் ஓர் பயங்கர ஓசை, அலையுண்ட காற்றின்மூலம் எழுப்பப் படுகிறது. இந்த ஒலிக்கே கலவரக்கூட்டம் கலைந்து ஓடிவிடும்.

படம் - 27

மேலும் தன்னைச் சூழ்ந்து எதிர்க்கும் எதிரிகளை முறியடிக்கவும் படைவீச்சு மிகவும் பயன்படும். படம் 28–ல் இரண்டு எதிரிகளை ஒரு சிலம்பன் தாக்குவதைக் காணலாம்.




படம் 28
சிலம்பன் தன் இருபக்கமுள்ள இரு எதிரிகளை தாக்கும் முறை

ஒரு சிலம்பன் படம். 29-ல் காட்டியபடி தரையில் உட்கார்ந்தும் படைவீச்சு வீசலாம். அப்படி உட்கார்ந்து வீசும் வீச்சுக்கு 'நாய் வீச்சு' அல்லது 'குரங்கு வீச்சு' எனப்பெயர். ஏனெனில் குரங்குகள் அல்லது நாய்கள் ஒருவேளை ஒருவனை வளைந்துகொண்டால். அவைகளிடமிருந்து அவன் தப்ப இவ்வீச்சுகள் பயன்படும். குரங்கு, நாய் இவைகளின் தாடைகள் உடையத் தக்கதாக இவ்வீச்சு வேகமாக இருக்கும்.



படம். 29 'நாய்வீச்சு' அல்லது 'குரங்கு வீச்சு'

படம். 30-ல், ஒரு சிலம்பன், எதிரிகள் எறியும் கற்களிலிருந்து தன்னைக் காத்துக்கொள்ளும் வீச்சு புலனாகிறது.




படம் 30. கல்லெறியைத் தடுக்கும் நூதனச் சுழல் வீச்சு

அலங்கார வீச்சு அல்லது அழகு வீச்சு

சிலம்பு சுழற்றும் கலையிலும், காலடி முறைகளிலும் மிகுந்த தேர்ச்சி பெற்ற ஆட்டக்காரர்கள் தாங்கள் இக்கலையில் பெற்ற தேர்ச்சியைப் பிறர்கண்டு களிக்குமாறு, அக்கலையை அரங்கேற்றுவது முண்டு. பிறர்கண்டு மகிழ இக்கலையின் திறமைக் காட்சிகளை அவர்களுக்குக் கண்காட்சியாக அடிக்கடி அளிப்பது மரபு.

சிலம்பின் இரு முனைகளிலும் தீப்பந்தங்கொண்டு ஓர் வீரன் அழகு வீச்சைத் திறம்படச் செய்யுங் காட்சியைப் படம் 31 வருணிக்கிறது.

வட்டமாக வளைத்த ஓர் சிலம்பின் பல பாகங்களில் தீப்பந்தங்கள் தொடுத்து அழகுபடச்சுழற்றி பார்வையாளரை (ரசிகர்களை) மகிழ்விக்கும காட்சி படம். 32-ல் கொடுக்கப்பட்டுள்ளது. தீப்பந்தங்கள் இருட்டில் அழகுபட சுழலுதல் கண்கொளாக் காட்சியாகும்.



படம். 31 தீப்பந்தச் சிலம்பைச் சுழற்றும் காட்சி



படம். 32 தீப்பந்தங்கள் தொடுத்த வட்டவளையை இரு கையால் சுழற்றுதல்.

இரு கைகள் கொண்டு, தீப்பந்தங்கள் தொடுத்த இரு சிலம்புகளை அலங்காரமாகச் சுழற்றி வீசுவதைச் சித்தரிக்கும் காட்சி படம் 33-ல் தெளிவாக்கப்பட்டுள்ளது.



படம் 33 தீப்பந்தங்கள் தொடுத்த இரு சிலம்புகளை மத்தியில் பற்றி இரு கைகளால் சுழற்றுதல்

**அடி முறைகள் அல்லது தொடு முறைகள்:**

**வெட்டு**

**மேல் வெட்டு**

இடது காலும், இடது தோளும் சிலம்பன் செல்லும் திக்கு நோக்கி, வலதுகால், இடதுகாலுக்குப் பின்னாக (இரண்டு தோள் களுக்கிடைப்பட்ட தூரத்தை உள்ளடக்கியதாகக் கொண்டு) ஊன்றப்பட்டு நிற்குங்கால் சிலம்பக் கம்பின் தூரமுனை, எதிரியின் உச்சித்தலை நோக்கி, சிலம்பனின் நெஞ்சு உயரத்தில் 'இருகை பக்கப் பிடி' அல்லது 'இருகை தூரப்பிடி' முறையில் பற்றப்பட்டுத் தயாராக இருக்கவேண்டும். இது ஆரம்ப நிலையாகும். எதிரியின் தலை உச்சியில், மேல்வெட்டு, செய்ய, சிலம்பன் ஆரம்ப நிலையிலுள்ள தன் கம்பை இடதுபுறமாகவும் தனக்குப் பின்னாகவும் இழுத்து

(கடிகாரச் சுற்றுபோல) பிறகு மேல் வீச்சாகக் கம்பைச் சுற்றி எதிரியின் தலை உச்சியின் மேல், மேல்வீச்சு வெட்டாக விழுமாறு அதைச் சடிதியில் அடித்து முடிக்கிறன். படம் 34-ல் கருப்பு வண்ணக் கால்சட்டை அணிந்த சிலம்பன் கொடுத்த தலை உச்சி வெட்டை, வெள்ளைக் கால்சட்டை அணிந்த வீரன் தடுத்து நிறுத்துவதைப் பார்க்கலாம். தாக்குபவனின் வலதுகால் முன்னால் வந்துவிட்டதைப் படத்தில் கவனிக்கவும்.




படம் 34 தலை உச்சி வெட்டு தடுத்து நிறுத்தப்படல்

கீழ் வெட்டு: சிலம்பன் நிற்கவேண்டிய ஆரம்ப நிலை முன்பு விவரிக்கப்பட்டுள்ளது. இந்நிலையை ஏற்று நிற்கும் கருப்புநிறக் கால்சட்டை அணிந்த சிலம்பன், தன் எதிரியின் முழங்காலின் கீழே வெட்டு கொடுக்க எத்தனிக்கிறன். சிலம்பன் ஆரம்ப நிலையிலுள்ள தன்கம்பை இடது புறமாகவும், தனக்குப் பின்னாகவும் இழுத்து பிறகு அது உடலைச்சுற்றி வலப்புறம் வந்ததும், முழங்காலுக்குக் கீழ், கீழ்வீச்சாகக் கம்பைச்சுழற்றி (படம் 35) எதிரியின் குதிரை முக எலும்பில் அவ்வீச்சு கீழ் வெட்டாக விழுமாறு அதைச் சடிதியில் முடிக்கிறன். தாக்குகிற சமயம் தாக்குபவனின் வலது கால் இடதுகாலுக்கு முன் வந்துவிட்டதைக் கவனிக்கவும்.




படம் 35 எதிரியின் குதிரைமுக எலும்பில் கீழ் வெட்டு விழுதல்

நடுவெட்டு: ஆரம்ப நிலையை ஏற்று நிற்கும் கருப்பு நிறக் கால் சட்டை அணிந்த சிலம்பன், தன் எதிரியின் முழங் கால்களுக்கு மேலே தோள்களுக்குக் கீழேயுள்ள உடம்பின் பாகத்தில் நடு வெட்டு கொடுக்க எத்தனிக்கிருன் என வைத்துக் கொள்ளுங்கள். ஆகவே, சிலம்பன் ஆரம்ப நிலையிலுள்ள தன் கம்பை இடது புறமாகவும், தனக்குப் பின்னுகவும் இழுத்து பிறகு அது உடலைச் சுற்றி வலப்புறம் வந்ததும், கம்பு பூமிக்கு இணையாகச் சுழற்றப்பட்டு (படம். 36.ல் காட்டப்பட்டபடி) கம்பின் தூரமுனைப்பாகம் எதிரியின் இடதுகை மொழியில் நடுவெட்டாகச் சடிதியில் விழுகிறது. அவ்வமையம் தாக்குகிறவனின் வலது காலும் முன் சென்றிருப்பதைக் காண்க.




படம். 36 எதிரியின் இடதுகை மொழியில் நடுவெட்டு விழுதல்

**முகவெட்டு அல்லது முகவாள்**

உச்சிவெட்டை எதிரியின் முகத்தில் வெட்டுமாறு சற்று சாய்வாகச் சுழற்றி செங்குத்தாக முகத்தை நோக்கி வெட்டினல், கம்பின் முனைப்பாகம் எதிரியின் முகத்தில் படம் 37-ல் காட்டப் பட்டபடி சடிதியில் வெட்டும். இதை முகவெட்டு அல்லது முகவாள் எனக்கூறுவர்.




படம் 37 எதிரியின் இடது முகத்தில் முகவெட்டு விழுதல்

**உள் வெட்டு:**

வெட்டுகளை, உள் வெட்டுகள், வெளி வெட்டுகள் என இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

சிலம்பக்கம்பு நெஞ்சினருகிலிருந்து புறப்பட்டு எதிரியை வெட்டப் புறப்பட்டால், அவ்வெட்டிற்கு உள்வெட்டு என்று பெயர். இவ்வெட்டில், கம்பு பூமிக்கு இணையாகச் சுழலும்.

**வெளி வெட்டு :**

சிலம்பக் கம்பு, சிலம்பனின் உடலின் பின்னுகச் சுற்றி எதிரியின் உடம்பின் இலக்குகளை வெட்டுமாயின் அவ்வெட்டிற்கு வெளி வெட்டு என்று பெயர்.

**அறுப்புகள்:**

அறுப்பு, வெட்டை ஒத்தது ஆனல் வெட்டில் கம்பின் சுழற்சி முடிவுபெறுகிறது. அறுப்பில் சிலம்பக்கம்பு வெட்டைப்போல உடம்பின் இலக்கில் செங்குத்தாக விழாமல் சற்று சரிவாக விழும், வேறுவிதமாக விவரிக்கவேண்டின், கம்பு சுழன்று சுழற்சியாகச்

சென்று முடிவு பெறும் மொத்தப்பாதையின் ஒரு கட்டத்தில் உடம்பின் ஒரு பாகம் இலக்கானல், அந்த இலக்கான பாகத்தில் 'அறுப்பு' உண்டாகும் எனச் சொல்லலாம்.

ஒரு இலக்கு கம்பின் ஒரு முனையால் தாக்கப்பட்டுப் பின்னும் கம்பின் முனை அந்த இலக்கை தொடர்ச்சியாகத் தாக்கி இழுத்துப் பின்னும் அது சுழன்று சென்ருல் அது அறுப்பாகும். ஓர் இலக்கைக் கம்பு அறுத்தபின், கம்பின் சுழற்சி அல்லது கம்பின் போக்கு முடிவு பெருது. மேலும் அது சுழன்று செல்லும் தன்மையுடையது.

**உச்சி அறுப்பு:**

தலையில் தொடுக்கும் 'உச்சி அறுப்பு', 'உச்சிவெட்டை' ஒத்தது. ஆனுல் 'உச்சி வெட்டு', தலையில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் முடிவடையும். ஆனுல் 'உச்சி அறுப்பு' என்பது தலையில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் கோடாக அறுத்தபின், கம்பு சுழன்று மேலும் செல்வதாகும்.

**நடு அறுப்பு:**

எதிரியின் இடுப்பிற்கு மேல், தோள்களுக்குக் கீழ் கொடுக்கப் படும் அறுப்புகளுக்கு நடு அறுப்பு எனப்பெயர். இதில் குறிப்பாக சிலம்பக் கம்பானது பூமிக்கு இணையாகச் சுழன்று செல்லும் என்பது வெள்ளிடை மலை.

**கீழ் அறுப்பு:**

எதிரியின் இடுப்பிற்குக்கீழே கொடுக்கப்படும் அறுப்புகளுக்குக் கீழ் அறுப்புகள் என்று பெயர். இம்முறையில் சிலம்பக் கம்பு சிலம்பனின் உடலைப் பின்னுகச் சுற்றி, வலப்புறத்தில் கீழிருந்து மேலாக எழுந்து எதிரியின் காலின் கீழிருந்து இடுப்பு வரையுள்ள இலக்குகளைக் கோடிட்டு அறுத்துப் பின்னும் மேல்நோக்கி எழும் தன்மையுடையது. கீழ் அறுப்பு எதிரியின் இடது, வலது புக்கங்களுக்கும் கொடுக்கப்படலாம்.




படம் 38 எதிரியின் தொடையில் கொடுக்கப்படும் கீழ் அறுப்பு.

**முக அறுப்பு அல்லது முகவாள் அறுப்பு:**

உச்சி அறுப்பை எதிரியின் முகத்தில் அறுக்குமாறு சற்று சாய்வாக சுழற்றிவிட்டால் அது முக அறுப்பு அல்லது முகவாள் அறுப்பு எனப் பெயர் பெறும். (படம்-39)




படம் 39 முக அறுப்பு அல்லது முகவாள் அறுப்பு

**உள் அறுப்பு:**

அறுப்புகளை, உள் அறுப்புகள், வெளி அறுப்புகள் என இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

சிலம்பக்கம்பு நெஞ்சினருகிலிருந்து புறப்பட்டு எதிரியை அறுக்கப் புறப்பட்டால் அவ்வறுப்புக்கு உள் அறுப்பு என்று பெயர். இவ்வறுப்பில் கம்பு பூமிக்கு இணையாகச் சுழலும்.

வெளி அறுப்பு:

சிலம்பக் கம்பு, சிலம்பனின் உடலின் பின்னுல் சுற்றி, எதிரியின் உடம்பின் இலக்குகளை அறுக்குமாயின் அவ்வறுப்புக்கு வெளி அறுப்பு என்று பெயர்.

குத்துகள்:

நேர்குத்து: எளிது. சிலம்பன் ஆரம்ப நிலையில் சிலம்பக் கம்பை முன் பிடித்து நிற்கிருன் என வைத்துக்கொள். படம் 40-ல் காட்டப்பட்டுள்ள கருப்பு நிற கால்சட்டை அணிந்துள்ள வீரன் சிலம்பக் கம்பின் பக்கமுனையை வலது கையில் பற்றியும், இடது கையின் இரு விரல்களால் (பெருவிரலும், ஆள்காட்டி விரலும்) கம்பைச் சற்றுத் தள்ளிப்பற்றியும், நிற்கிருன்.




படம். 40 நெஞ்சுயரக் குத்தின் முதல் நிலை.

கம்பைப்பற்றி, இருகைகளையும் எதிரியை நோக்கி நேராகத் தள்ளும்போது கம்பின் தூரமுனை எதிரியைக் குத்துகிறது. பொதுவாகச் சிலம்பக் கம்பை இங்ஙனம் பிரயோகித்து எதிரியின் நெஞ்சு, (படம் 41). தொண்டை, தொப்புள், தொடை, கணுக்கால், நெற்றி (படம் 42) இவைகளில் குத்தலாம்.




படம் 41 நெஞ்சில் தொடுக்கும் நேர் எறிகுத்து. (நெஞ்சு எறி குத்தின் இறுதி நிலே)

குறிப்பு: மேற்கூறிய நேர்குத்தை, வேகமாகப் பிரயோகிக்க, வலது காலே, இடதுகால் முன் கொண்டுவந்து எதிரியைக் குத்தினல் அக்குத்து நேர் எறிகுத்தாகும். படம் 41-ல் கருப்புநிறக் கால்சட்டை அணிந்த மல்லன் எதிரியின் நெஞ்சில் நேர் எறிகுத்து செய்வதைக் காணலாம்.

அவ்வமயம் அவனது வலதுகால் இடதுகால் முன் வேகமாகச் செல்வதால் அவன் உடலின் அதிகபளுவைக் கம்பில் செலுத்த முடிகிறது.




படம் 42 நெற்றியில் தொடுக்கும் நேர்குத்து,

படம் 42ல் கறுப்பு நிறக் கால்சட்டை அணிந்த சிலம்பன் எதிரியின் நெற்றியில் கம்பின் தூரமுனே கொண்டு 'குத்து: எளிது' செய்யப் போவதைக் காணலாம்.

படம் 43 பின் குத்து: எளிது.




('இரு கை தூரமாற்றுப்பிடி' முறைப்படி இடதுகால் முன் வைத்து 'பின் குத்து: எளிது' செய்தல்)

பின் குத்து: எளிது

இக்குத்தானது சிலம்பனின் பின்னுகச் செல்லும் தன்மை யுடையது. எதிரியின் எப்பாகமும் இப் பின்குத்துக்கு எதிர்பாராத வாறு இலக்காகலாம்.

இதில் சிலம்பனின் ஆரம்ப நிலேயானது படம் 44ல் காட்டிய வண்ணம் அமையவேண்டும். அதாவது இடது கால் எதிரியை நோக்கி முன்னுகவும், வலதுகால் பின்னுகவும் ஊன்றப்பட்டுள்ளது. வலதுகை கம்பின் பக்க முனேயைப்பற்ற இடதுகை வலது கைக்குச் சற்று முன்னுல் 'இருகை தூர மாற்றுப்பிடி' முறையில் பிடிக்கப்பட் டுள்ளது.

இந்நிலேயிலிருந்து காலேயும் பிடியையும் மாற்ருதபடி, கம்பை எதிரியை நோக்கி நீட்டிக் குத்திஞல், அம்முறை 'பின்குத்து: எளிது' எனப் பெயர் பெறும். (படம் 43)

படம் 44 எதிரியின் மீது பிரயோகிக்க எழுந்த பின்குத்தின் இறுதிச் செய்கையை சித்தரிக்கிற தெனச் சொல்லலாம்.




படம் 44 பின்குத்தின் இறுதிநிலை.

படம். 44-ல் கண்டபடி வலதுகால் முன்னாகவும், இடதுகால் பின்னாகவும் இருக்கும்படி சிலம்பன் வலது காலை இடதுகாலுக்கு முன் கொண்டுவந்து ஊன்றி கம்பின் தூரமுனையில் இடதுகையைப்பற்றி, வலது கையை சற்று தூரத்தில் 'இருகை தூரமாற்றுப்பிடி' முறையில் படம் 44ல் கண்டவாறு பற்றி, எதிரியின் 'மேல் பின்குத்து எளிது' செய்யலாம். படம்43-ல் 'பின்குத்து எளிது' செய்ததூர முனை படம் 44-ல் பக்க முனையாக மாற்றப்பட்டும், படம் 43-ல் காட்டப்பட்ட பக்கமுனையானது, 44-ல் தூர முனையாக மாற்றப்பட்டு 'பின்குத்து எளிது' செய்யப் பிரயோகிக்கப் படுவதைக் காணலாம்.

பின் எறிகுத்து:

இதில் சிலம்பனின் ஆரம்ப நிலையானது படம் 44ல் காட்டிய வண்ணம் அமையவேண்டும். அதாவது இடதுகால் எதிரியை நோக்கி முன்னாகவும், வலதுகால் பின்னாகவும் ஊன்றப்பட்டுள்ளது.

வலதுகை கம்பின் பக்கமுனையைப் பற்ற இடதுகை வலது கைக்குச் சற்று முன்னால் இருகை தூர மாற்றுப்பிடி முறையில் பிடிக்கப்பட்டுள்ளது.




படம் 45: பின் எறிகுத்து: முதல்நிலை




படம் 45: பின் எறிகுத்து: இறுதிநிலை

இந்நிலையிலிருந்து படம் 45ல் கண்டபடி சிலம்பன் இடது காலில் 180° இடதுபுறமாக சுழன்றால் வலதுகால் ஓர்அடி எதிரியை நோக்கி முன் செல்லும்! அவ்வமயம் கம்பின் தூரமுனையை இடது கையை பற்றுமாறும், வலதுகை சற்று தூரத்தில் 'இருகை தூர மாற்றுப்பிடி, முறையில் பற்றுமாறும் செய்து, கம்பை இடது கையால் பின் இழுத்து பின்வேகமாக இருகையாலும் எதிரியைக் குத்தினால், அக்குத்து 'பின் எறி குத்தாகும்'.

இக் குத்து வலது காலை மேலும் ஒரு அடி முன்வைத்துக் கொடுக்கப்படுவதால், இக்குத்தில் அதிக வேகமும் சாரமும் உண்டு.

**பக்கக் குத்து:**

இவ்வகைக் குத்து சிலம்பனின் வலது, இடது பக்க வாட்டில் செல்லும். முக்கியமாக இவ்வகைக் குத்து, எதிரியின் வல, இடப் புறங்களில் தைக்க பயன்படுத்தப்படுகிறது.

**பக்கக் குத்து: எளிது.**

சிலம்பன் ஆரம்பநிலையில் இடதுகால் முன் வைத்து, வலது கால் பின்வைத்து நிற்கும்போது எதிரி, தன் வலது, அல்லது இடதுபுறம் வருவானுனல், அதற்குத் தகுந்தாற்போல் சிலம்பன் தன் கம்பின் தூரமுனை முறையே வலப்புறமாகவோ, இடப்புற மாகவோ செல்லும்படி கம்பைப் பிடித்துக்கெள்ளுவான்.

தன் வலப்புறம் 'பக்கக் குத்து: எளிது', செய்யுங்கால், இடதுகை சிலம்பின் பக்கமுனையைப் பற்றியிருக்கும். வலதுகை 'இரு கை தூரமாற்றுப்பிடி' முறைப்படி கம்பைப் பற்றியிருக்கும்.

தன் இடப்புறம் 'பக்கக் குத்து: எளிது' செய்யுங்கால்,வலதுகை சிலம்பின் பக்க முனையைப் பற்றியிருக்கும். இடது கை 'இரு கை தூர மாற்றுப்பிடி' முறைப்படி கம்பைப் பற்றியிருக்கும்.

மேற்படி நிலையில் நின்று, கால்களை நகர்த்தாது கம்பை முறையே வலப்புறமாகவோ, அல்லது இடப்புறமாகவோ செலுத் தினுல் அது 'பக்கக்குத்து எளிது', என்று பெயர் பெறும்.

**பக்க எறி குத்து:**

சிலம்பனின் ஆரம்ப நிலை 'நேர்குத்து-எளிது'க்குச் சிலம்பன் நிற்கும் நிலையை ஒத்தது. இந்நிலையில் நிற்கும் சிலம்பன் வலது, அல்லது இடதுபுறமாக ஒரு காலடி தூரம் விலகிச் சென்று முறையே எதிரியின் இடது அல்லது வலது பாகங்களில் அதிக பளுவோடு வேகமாகக் கம்பைச் செலுத்தினுல், அக்குத் துக்கு 'பக்கஎறிகுத்து' எனப்பெயர்.

சிலம்பன் வலப்புறம் முன்னேறி, எதிரியின் இடது பக்கம் 'பக்க எறிகுத்து' செய்ய வேண்டின், தன் கம்பின் பக்கமுனையை வலது கையால் பற்றியிருப்பான்.

பக்க எறிகுத்தில் பொதுவாக சிலம்பன் 'இரு கைதூர மாற்றுப்பிடி' முறையில் கம்பைப் பற்றுவான்.

வேகவீச்சு அடி,

நானுவித வீச்சுகள் வீசும் முறைகள் முன்பு விவரிக்கப்பட்டுள்ளன. மணிக்கட்டுகள், கைமொழிகள், தோள்கள் இவைகள் வேகமாகச் சுழலவும், இயங்கவும் வேண்டின் பலவித வீச்சுகள் பயிலுதல் நன்று.

மல்லர்கள் பொரும் விளையாட்டுகளின் வீச்சுகள், வேக வீச்சுகளாக மாற்றப்பட்டு ஒரே நேரத்தில் எதிரியின் உடலின் பல பாகங்களில் வேகமாகத் தொடர்ந்து தைக்கும்படி பிரயோகிக்கப் படுகிறது.

கீழ் வேகவீச்சு அடி.

ஆரம்ப நிலையிலிருக்கிற சிலம்பன் (அதாவது இடது கால் முன்வைத்து சிலம்பக்கம்பு எதிரியை நோக்கி நீட்டிநிற்கும் நிலை). தன் கம்பை தனக்கு இடது புறத்தில் (தூரமுனை கீழ்நோக்கி வர) கடிகாரச் சுற்றுபோல் சுழற்றி அக்கம்பைத் தனக்குப் பின்புறமாகவும் தனக்கு வலப்புறமாகவும் செலுத்தி, தனக்கு வலப்புறம் தூரமுனை கீழ்நோக்கி இருக்க வந்தபின், அதை வேகமாகச் சுழற்றி படம் 46ல் காட்டியபடி தூரமுனை கீழிலிருந்து மேலோக எழுந்து, ஒரே நேரத்தில் எதிரியின் பலபாகங்களையும் தாக்கிச் செல்வதை அம்புக் குறிகள் விளக்குகின்றன. இங்ஙனம் கீழ்வீச்சு எதிரியின் பல பாகங்களை ஒரே சமயத்தில் தாக்குவதால் இதற்கு 'கீழ் வேக வீச்சு அடி' அல்லது 'கீழ் வேக வீச்சு அறுப்பு' எனப்பெயர்.




படம் 46 'கீழ் வேக வீச்சு அடி' அல்லது 'கீழ்வேக வீச்சு அறுப்பு'

மேற்கூறிய கீழ்வேக வீச்சு அடியை, ஒரு கை கொண்டும் அடிக்கலாம்.

மேல்வேக வீச்சு அடி:

இவ்வேக வீச்சு அடி, 'கீழ்வீச்சு' அடியை ஒத்தது. ஆனல் குறிக்கத்தகும் ஒரு வேறுபாடு யாதெனில் 'மேல் வேக வீச்சு அடி' யானது, படம் 47ல் விவரிக்கப்பட்டுள்ளவாறு, எதிரியின் உடலின் மேல் பாகங்களிலிருந்து கீழ் பாகங்கள் வரை ஒரே தொடர்ச்சி யாகக் கொடுக்கப்படுகிறது. (மேலிருந்து கீழ் நோக்கி)




படம் 47 'மேல் வேக வீச்சு அடி' அல்லது 'அறுப்பு'

விளக்கம்:

ஆரம்ப நிலையிலிருக்கிற சிலம்பன் (அதாவது இடதுகால் முன் வைத்து சிலம்பக் கம்பு எதிரியை நோக்கி நீட்டி நிற்கும் நிலை)

தன் கம்பை தனக்கு இடது புறத்தில் (தூரமுனை கீழ் நோக்கி வர கடிகாரச் சுற்றுபோல சுழற்றி, அக்கம்பைத் தனக்குப் பின்புறமாகச் செலுத்தி, தனக்கு வலப்புறம் தூரமுனை மேல் நோக்கி இருக்க வந்தபின், கடிகாரச் சுற்று திசையாக (படம்-47ல் அம்புக் குறிகள் காட்டப்பட்டபடி) வேகமாகச் சுழற்றித் தூரமுனை மேலிருந்து கீழ் நோக்கித் துரிதமாகச் சென்று எதிரியின் பலபாகங்களையும் தாக்கும் படிசெய்கின்றான்.

இங்ஙனம் மேல் வீச்சு எதிரியின் பல பாகங்களை ஒரே சமயத்தில் தாக்குவதால் இதற்கு 'மேல் வேக வீச்சு அடி' எனப் பெயர்.

**பின் வேக வீச்சு அடி :**

ஆரம்ப நிலையிலிருக்கும் சிலம்பன் (அதாவது இடதுகால் முன் வைத்து சிலம்பக் கம்பு எதிரியை நோக்கி நீட்டி நிற்கும் நிலை) தன் சிலம்பைத் தனக்குப் பின்புறமாகச் செலுத்திப் படம் 48-ல் சித்திரிக்கப்பட்டபடி எதிரியின்வலதுபாக இலக்குகளில் வேகமாக வீசி அடிக்க எத்தனிக்கலாம். இவ்வடியைப் 'பின் வேகவீச்சு அடி' எனக் கூறுவதுண்டு. ஏனெனில் இம்முறையில் கம்பின் தூர முனையானது சிலம்பனை வலம் வந்து ஒரு முறை சுற்றி வேகமாக எதிரியைத் தாக்குகிறது. பொதுவாக ஒரு கை மட்டும் கம்பைப் பற்றியிருக்கும். படம் 48- ல் கறுப்புநிறக் கால்சட்டை அணிந்த வீரன் எதிரியின் வலதுகால் இலக்குகளை வலது கையில் சிலம்பு கொண்டு தாக்க எத்தனித்த நிலை வருணிக்கப்பட்டுள்ளது.



படம் 48: 'பின் வேக வீச்சு அடி' அல்லது 'அறுப்பு'

'பின்வேக வீச்சு அடி' செய்யும் சிலம்பன் தனது இடது, வலது கால்களில் வலப்புறமாகப் படத்தில் காட்டியவாறு 'பிவட்' செய்து, மேற்படி அடியைக் கொடுப்பதுதான் ஒழுங்கான முறையாம். இங்ஙனம் 'கிருக்கி' (பிவட்) செய்வதால் கம்பானது நன்கு வீச்சாகச் சுழன்று தனக்குப் பின்னல் சென்று எதிரியைத் தாக்க வழிவகுக்கிறது.

**'வேக அடி படை வீச்சு' அல்லது 'தலைமேல் சுழலடி வீச்சு' அல்லது 'கூட்டங்கலைக்கும் வேக அடி வீச்சு'**

'படைவீச்சு' அல்லது 'தலைமேல் சுழல்வீச்சு' அல்லது 'கூட்டம் கலைக்கும் வீச்சு' என்ற வீச்சு வீசும் முறைகள் முன்பு நன்கு விவரிக்கப்பட்டுள்ளன. மேற் கூறிய வீச்சை மின்னல் வேகத்தில் சுழற்றி எதிரிகளின் இலக்குகளைத் தாக்கப் பயன்படுத்தினுல் அவ் வீச்சுக்கு 'வேக அடி படை வீச்சு' அல்லது 'தலைமேல் சுழலடிவீச்சு' அல்லது 'கூட்டங் கலைக்கும் வேக அடி வீச்சு' என்று பெயர்.

**ஏமாற்றும் வரிசை:**

உலகில் நன்கு அறிமுகமான பலபல விளையாட்டுகளில், எதிரியை எளிதில் ஏமாற்றி தங்கள் யுக்தியாலும், தந்திரத்தாலும் 'எதிரியைத் தோற்கடித்தல்' என்றமுறை சிறப்பிடம் பெற்றுள்ளது.

இச் சிலம்ப விளையாட்டிலும் கூட மேற் கூறிய 'ஏமாற்று வரிசை' நன்கு பயிலப் பெற்று வந்தது. எதிரியை ஒரு புறத்தில் வெட்டுவதுபோல் காட்டி, திடீரென இன்ருெரு புறத்தில் குத்துவது சிலம்பனின் சமயோசித புத்தியையும், தந்திரோபாயத்தையும் சுட்டிக் காட்டுவதாகும். இவ்வண்ணம் எதிரியைக் குத்துவதுபோல நயம்பட நடித்துக்காட்டி, அவன் எதிர்பாராதவண்ணம் சடிதியில் பிறிதொரு இலக்கில் 'அறுத்தல்' செய்தலும் யுக்தியாகும்.

எதிரியின் திறமைக்கேற்ப ஏமாற்று வரிசையை அவனிடம் பிரயோகிப்பது நல்லது. ஏமாற்று வரிசையில் பல முறைகள் உண்டு.

படம் 49 ஏமாற்று வரிசையில் ஒரு முறையை மட்டும் சித்தரித்துக் காட்டுகிறது. கருப்பு நிறக் கால்சட்டை அணிந்துள்ள சிலம்பன் தன் எதிரிமேல் 'கீழ்வீச்சு அடி'யைப் பிரயோகிப்பது போல் ஏமாற்றிவிட்டுத் திடீரெனக் கம்பின் தூரமுனையைப் படம் 49-ல் காட்டியவாறு கீழ் நோக்கி இழுத்து, தனக்குப் பின்னுக இடப்புறம் செலுத்திப் பின் மேல்வீச்சாக எதிரியின் தலையைத் தாக்குகிருன்.

ஏமாற்று வலையில் சிக்கின வெள்ளை நிறக் கால்சட்டை அணிந்த சிலம்பன், கீழ்நோக்கி வந்த எதிரியின் கம்பைத் தடுத்து நிறுத்தப் பூமிக்கு இணையாகக் கம்பைத் தன் முன் பிடித்துக் கீழ் அழுத்தும் வண்ணம் நிற்பதைக் காணலாம். ஆகவே, எதிரியிடமிருந்து தன் தலைக்கு வரும் அடியை அவன் தவிர்க்க இயலாது நிற்பதையும் காணலாம்.



படம் 49 ஏமாற்றும் வரிசை:

## கம்பு சுழற்றுதலோடு சேர்ந்த காலடி முறைகள்

**கம்பு சுழற்றுதலோடு கூடிய இரண்டடிப் பாவலா—முன் செல்லல்**

இம்முறையில் காலடிப் பயிற்சி, நடந்து முன் செல்லுதலை ஒத்தது. ஆனால் எந்தக்கால் முன்னால் இருக்கிறதோ, அதே பக்கத்துத் தோளும் அதே திக்கை நோக்கி அமைந்திருக்க வேண்டும்.

உதாரணமாக, சிலம்பன் தனது இடதுகாலை முன் வைத்து வலது காலை அதற்குப் பின்னாக தோள்களுக் கிடைப்பட்ட தூரம், தனது கால்களுக் கிடைப்பட்ட தூரமாக அமையுமாறு கொண்டு நிற்க வேண்டும்.

இந்நிலையில், வலது கால் முதலில் முன்னாக நகர்ந்து ஒரு தப்படி சென்று ஊன்றியதும், வலது தோளும், அதே திக்கை நோக்கி நகர்கிறது. உடனே இடதுகால் முன்னோக்கி நகர்ந்து வலது காலுக்குமுன் ஒரு தப்படி சென்று ஊன்றியதும், இடது தோளும் அதே திக்கை நோக்கி நகர்கிறது. இவ்வாறு வலது,

இடது கால்கள் மாறி மாறி முன்னேக்கிச் செல்கிறது. அச்சமயம் வலது, இடது தோள்களும் நகர்ந்து ஒரே திக்கு நோக்கி நகர் கின்றன. இக்காலடி முறையை மறுபடியும் மறுபடியும் செய்ய சிலம்பன் ஒரேதிசையை நோக்கி முன்னேறுகிருன்.

இக்காலடி முறையின் ஆரம்ப நிலையில் சிலம்பன் நிற்கிருன் எனக் கொள்க (அதாவது இடதுகால் முன்வைத்து நிற்றல்) அப்பொழுது சிலம்பன் முன்பு விவரித்தபடி "முன்வீச்சு முறை 1"ன்படி (பக்கம் 60) கம்பை வலதுபுறத்தில் சுழற்ற ஆரம்பித்து தொடர்ந்து வீசிக்கொண்டு முன் சென்ருல் அது 'கம்பு சுழற்றுதலோடு கூடிய இரண்டடிப் பாவலா முன் செல்லல்' எனப் பெயர் பெறும். இம் முறைக்கு 'பாம்பின் வரிசை' அல்லது 'அரவடி வரிசை' என்ற மறு பெயர்களும் உண்டு.

இதுபோல் முன் செல்லாது, பின் செல்லும் முறையையும் பழகுதல் நன்று.

**கம்பு சுழற்றுதலோடு கூடிய இரண்டடிப் பாவலா—பின்செல்லல்**

இக்காலடி முறையின் ஆரம்பநிலையில் சிலம்பன் நிற்கிருன் எனக் கொள்க. (அதாவது இடது கால் முன் வைத்து நிற்றல்) அப்பொழுது சிலம்பன் முன்பு விவரித்தபடி முன்வீச்சு: நிலை 2ன் படி (பக்கம் 61) கம்பை இடதுபுறத்தில் சுழற்ற ஆரம்பித்துத் தொடர்ந்து செய்து கொண்டு பின் சென்ருல் அது 'கம்பு சுழற்ற லோடு கூடிய இரண்டடிப் பாவலா—பின் செல்லல், எனப் பெயர் பெறும். இம்முறைக்குப் 'பாம்பின் வரிசை' அல்லது 'அரவடி வரிசை' என்ற மறு பெயர்களும் உண்டு.

மேலும் மேற்கண்ட இரண்டு பயிற்சிகளையும் வலது கால் முன்வைத்தும் செய்து பழகுதல் வேண்டும்.

இவைகளன்றி, வேறு சில கம்பு சுழற்றும் பயிற்சிகளையும், இக்காலடி முறைகளோடு சேர்த்துப் பயிலுதல் வரவேற்கத் தக்கது.

**கம்பு சுழற்றுதலோடு கூடிய மூவடிப் பாவலா:**

படங்களில் காட்டப்பட்டபடி, இம் மூவடிப் பாவலாவைத் திறம் படச்செய்யும் சிலம்பன் தமிழன் மரபிற்கேற்ப நீண்ட ஆடை அணிந்திருப்பதை உற்றுநோக்குக.

"மூவடிப் பாவலா"வின் ஆரம்ப நிலையில் (அதாவது படம் 50ல் கண்டபடி) சிலம்பன் தனது இடது காலையும், வலது காலையும் முறையே Iம், IIம் வட்டங்களுக்குள் பட ஊன்றியிருப்பதைக் காணலாம். சிலம்பக் கம்பை அவன் நெஞ்சுக்கு சற்று உயரமாக, 'இரு கை தூரப்பிடி' முறைப்படி பற்றியிருப்பதையும் காண்க.




படம் 50 மூன்றடிப் பாவலா; கம்பு சுழற்றலோடு கூடிய ஆரம்பநிலை.

மேற்கூறிய ஆரம்பநிலையிலிருக்கும் சிலம்பன் தனது இடது காலை III-வது வட்டத்திற்குள் கொண்டு செல்கிறார் (படம் 51)



அவ்வமயம் சிலம்பன் முன்பு விவரித்தபடி 'முன்வீச்சு நிலை-2ன் படி' கம்பை இடப்புறத்தில் சுழற்ற ஆரம்பிக்கிருன். படம்-50-ல் காட்டப்பட்டபடி, வட்டங்களில் காலடி வைத்துத் திரும்பவும் அவன் தனது பழைய ஆரம்ப நிலைக்கு வரும்போது கம்பு சுழன்று 'முன்வீச்சு முறை-2' முற்றுப்பெறும், இந்நிலைக்கு வருமுன் கம்பு (படங்கள் 51, 52, 53 இவைகளில் காட்டப்பட்டபடி (முன்வீச்சு–முறை-2ன்) மூன்று நிலைகளை அடைந்து செல்கிறது. இம்முறையை நன்கு பயிலுதல் வேண்டும். ஏனெனில் இது அடிப்படைத் திறமைகளுள் ஒன்ருகும்.

இவ்வாறே, சிலம்பன், முன்விவரித்தபடி 'முன் வீச்சு முறை 1–ன் படி' கம்பை வலப்புறத்தில் சுழற்ற ஆரம்பித்து, வட்டங்களில் காலடி வைத்துப் பழைய ஆரம்ப நிலைக்கு வரும்போது கம்பும் சுழன்று 'முன் வீச்சு நிலை–1' முற்றுப்பெறும். இம்முறையையும் நன்கு பயிலுதல் வேண்டும். ஏனெனில் இது அடிப்படைத் திறமைகளுள் ஒன்ருகும்.

இவைகளின்றி வேறு சில கம்பு சுழற்றும் பயிற்சிகளையும் இக்காலடி முறைகளோடு சேர்த்துப் பயிலுதல் வரவேற்கத்தக்கது.




படம். 52
மூன்றடி பாவலா: முன்வீச்சு நிலை 2: 2ம் நிலை




படம். 53
மூன்றடி பாவலா: முன்வீச்சு நிலை 2: 3ம் நிலை

**கம்பு சுழற்றுதலோடு கூடிய நாலடிப் பாவலா.**

படம். 54-ல் சிலம்பனின் ஆரம்ப நிலை தெளிவாகக் காட்டியுள்ளது. இடது, வலது கால்கள் முறையே வட்டம் I, IIல் ஊன்றப்பட்டுள்ளன. படத்தில் கண்டபடி சிலம்பக்கம்பு, அதன் மத்தியில் வலது கையினுல் பற்றப்பட்டுள்ளது. இப்பிடிக்கு 'மத்திப்பிடி' என்று பெயர். ஒரு முனை கீழ் நோக்கியும், மறு முனை வானை நோக்கியும் பூமிக்குச் செங்குத்தாக இருப்பதைக் காண்க.




படம் 54 கம்பு சுழற்றுதலோடு கூடிய நாலடிப் பாவலா: ஆரம்ப நிலை.

படம். 55, 56–ல் கண்டவாறு, சிலம்பன் தனது இடது காலை வட்டம் III–ல் ஊன்றுகிருன். அப்பொழுது 'கம்பு பக்க விச்சு முறை 1ன் படி' (பக்கம் 62) கம்பை இடது புறத்தில் சுழற்ற ஆரம்பித்து, தனது வலதுகால் IV-ம் வட்டத்துள் செல்லும் போது, அதை தனது வலது பக்கத்தில் முடிக்கிருன். வானை நோக்கியிருந்த முனை இன்னும் அவ்வாறே இருக்கிறது.




படம். 55 கம்பு சுழற்றுதலோடு கூடிய நாலடிப் பாவலா: பக்க விச்சு-1 (2ம் நிலை)



படம். 56 கம்பு சுழற்றுதலோடு கூடிய நாலடிப் பாவலா: பக்க வீச்சு-1 (3ம் நிலை)

இந்நிலையில் இருக்கும் சிலம்பன் தனது கம்பின் மேல் நுனியைக் கீழே செல்லும்படி சுழற்றுகிறான். பின் கீழே சென்ற நுனி பின்னாகச் சென்று 1 சுற்று சுற்றி மறுபடியும் படம் 57ல் காட்டியபடி கீழே வரத்தக்கதாகச் சுழற்றிய பின் படம். 58-ல் காட்டியபடி கம்பின் மத்தியை இடதுகைப் பெருவிரலும், ஆள்




படம். 57
கம்பு சுழற்றுதலோடு கூடிய
நாலடிப் பாவலா:
பக்க வீச்சு முறை–1
(4ம் நிலை)




படம் 58
கம்பு சுழற்றுதலோடு கூடிய
நாலடிப் பாவலா: பக்க வீச்சு
முறை–2 (5ம் நிலை)
இடது பக்கத்தில் வீச்சை
ஆரம்பித்தல்

காட்டி விரலும் பற்றுகிறது. உடனே சிலம்பனின் வலது கால் II-ம் வட்டத்தில் ஊற்றுவதற்காக நகர ஆரம்பிக்கிறது.




படம் 59
கம்பு சுழற்றுதலோடு கூடிய
நாலடிப் பாவலா.
பக்கவீச்சு முறை-2 (6-ம் நிலை)

அப்போது 'பக்கவீச்சு—முறை 2'—ன்படி வானை நோக்கிய கம்பின் முனை, இடது புறத்தில் சுழல ஆரம்பித்து சிலம்பனின் வலப்புறத்தில் முடிவடைகிறது. அச்சமயம் சிலம்பன் படம் 60-ல்




படம் 60
கம்பு சுழற்றுதலோடு கூடிய
நாலடிப் பாவலா.
ஆரம்ப நிலையை ஒத்த படம்
(7ம் நிலை).
கம்பு இடதுகையில் இருத்தல்.

கண்டபடி 7-ம் நிலையை அடைகிறான். ஆனால் கம்பு ஆரம்ப நிலையில் அவனது வலது கையில் இருந்தது. இப்பொழுது அக் கம்பு அவனது இடது கைக்கு மாறிவிட்டது. பிறகு படம் 54-ல் கண்டவாறு சிலம்பன் ஆரம்பநிலைக்கு வருகிறான்.

**எதிரியின் சிலம்பக்கம்பைப் பறித்தல்**

சிலம்ப விளையாட்டின் சிறப்புத் திறமை யாதெனில், எதிரியின் சிலம்பக் கம்பை அவனிடமிருந்து பறிப்பதாகும். இங்ஙனம் கம்பை எதிரியிடமிருந்து கைப்பற்றப் பல தந்திரோபாயங்கள் உண்டு. இரு முறைகள் மட்டும் கீழே விளக்கப்பட்டுள்ளன!

முறை 1: படம் 61-ல் சித்தரிக்கப்பட்டுள்ளபடி கருப்பு நிறக் கால்சட்டை அணிந்த சிலம்பனும், எதிரியும், சிலம்பக் கம்புகளின் தூரமுனைகள் தரையில்படும் வண்ணம் வைத்து. தங்களது இடது கைகளில் அவைகளின் பக்க முனைகளைப் பற்றியிருப்பதைக் காண்க. இதுதான் போட்டியின் ஆரம்ப நிலை.



படம் 61 சிலம்ப மல்லர்கள் ஒருவரை ஒருவர் எதிர்த்து நிற்கும் காட்சி.

போட்டியை ஆரம்பிக்கச் சைகைகள் காட்டப்பட்டவுடன், கருப்பு நிறக் கால்சட்டை அணிந்த சிலம்பன் வேகமாகத் தன் கம்பை எதிரியின் இரு கால்களின் மத்தியில் நீட்டித் தள்ளி,




படம். 62
கருப்பு திறக் கால்சட்டை அணிந்த சிலம்பன் எதிரியின் கால்களுக்கு மத்தியில் கம்பை நீட்டித்தள்ளுதல்.

பின் எதிரியை நோக்கித் 'தவளைப் பாய்ச்சல்' செய்து தனது இடது காலால் எதிரியின் இடது காலைப் படம் 63-ல் காட்டியபடி வளைத்துத் தென்னி, எதிரியின் இரு தொடைகளுக்கு மிடையே யுள்ள தன் சிலம்பால் அவ்விரு தொடைகளையும் நெருக்கி, தன் வலது கை சிலம்பின் பக்க முனை பற்றவும், தன் இடது கை, கம்பின் இம் முனையிலிருந்து சற்று உருவிச் சென்று, கம்பைப் பற்றவும் செய்து, இவ்விதம் படம் 63ல் காட்டப்பட்டுள்ளபடி




படம் 63
கருப்புநிறக் கால்சட்டை அணிந்தவர் எதிரிக்குப் ஷ்ட்டு போடல்

நெம்பு கோலின் தத்துவ அடிப்படை (Law of Lever) ரீதியில் இயந்திர லாபமிருக்குமாறு (Mechanical Advantage) தன் கம்பை

கீழ்நோக்கி வேகமாக அழுத்தியும், எதிரியின் இடதுகாலை தன் நோக்கி இழுத்தும், எதிரியின் வலது காலை கம்பின் உதவியால் முன்னால் தள்ளியும், எதிரியை நிலைதடுமாறச் செய்து (unbalanced position) எதிரியின் கால்களையும், கம்பையும் அவன் வசதியாக அசைக்கமுடியாதபடி செய்து கம்பைப் பறித்தல் ஓர் சீரிய முறையாகும்.

மேற்கண்ட முறைப்படி அடிகளைத்தாங்குவோர் நிலைதடுமாறி, எதிரியின் பூட்டை (Lock Hold) உடைக்க முடியாதபடியானால், எதிரி அவன் கம்பைக் கைப்பற்றுவது மிக எளிதல்லவா? அங்ஙனம் பூட்டு போடப்பட்டுள்ளவன் நிலை தடுமாறி விழுந்து கிடப்பதைப் படம்- 64 சுட்டிக் காட்டுகிறது.




படம் 64: எதிரி நிலை தடுமாறி விழுதல்

முறை 2;

ஆரம்ப நிலையில் ஒருவரை ஒருவர் எதிர்த்து நின்ற சிலம்ப மல்லர்கள் இருவரும் படம் 65-ல் காட்டியவாறு தங்களது வலது கால்களை மேலெடுத்து ஒருவரை ஒருவர் நெருங்குவதைக் காணலாம்.




படம் 65: மல்லர்கள் சிலம்புகளை உயர்த்திப் பொர எழும் காட்சி.

சிலம்புகளை உயர்த்தி, வலது கால்களைத் தூக்கிப் பொர எழும் காட்சியைப் படம் 65 விளக்குகிறது. பிறகு படம் 66–ல் சித்தரிக்கப் பட்டவாறு இருவரின் சிலம்புகள் ஒன்றை ஒன்று கொளுவுவதைக் காணலாம்.




படம் 66: சிலம்புகள் ஒன்றை ஒன்று கொழுவுதல்.

மேற்படி படத்தில் கருப்புநிறக் கால் சட்டை அணிந்த மல்லன் தனது இடது கை விரல்களை விரித்து வைத்திருப்பதையும், படம் 67-ல் அம்மல்லன் தனது சிலம்பினை எதிரியின் சிலம்பிற்கு இணையாகப் பிடித்திருப்பதையும் உற்று நோக்குக.




படம் 67: சிலம்பின் மேல் விரல்கள் விரித்து எதிரியின் கம்பிற்கு இணையாகத் தன் சிலம்பை நீட்டல்

தாக்குபவனின் விரல்கள் சிலம்பின்மேல் விரித்திருக்க, எதிரியின் சிலம்பிற்கு இணையாகத் தன் சிலம்பை உந்தித் தள்ளுதலின் காட்சியைப் படம் 67 விளக்குகிறது. (தாக்குபவன் கருப்புக் கால்சட்டை அணிந்தவன்)

படம். 68-ல் காட்டியபடி சிலம்பன் எதிரியின் சிலம்பினை முறையே தனது இடது, வலது கைகளினால் பற்றுகிறான்.




படம் 68: தாக்குபவன் எதிரியின் சிலம்பைத் தன் சிலம் போடு சேர்த்துப் பற்றுதல்.

படம். 68, தாக்குபவன், எதிரீயின் சிலம்பினை முறையே தன் இடது, வலது கைகளினல் தன் சிலம்போடு சேர்த்துப் பற்றும் காட்சியை விளக்குகிறது.

எதிரியின் இரு கைப்பிடிகளுக்கும் இடையில், தாக்குபவனின் வலது கையும், சற்று உயரத்தில் தாக்குபவனின் இடது கையும், இரு சிலம்புகளையும் பற்றியிருப்பதால், எதிரியின் இரு கைகளும் சிலம்புகளுக்குள் நசுக்கப்படுவதைப் படம் 68 நன்கு சித்தரித் திருக்கிறது.

இந்நிலைக்குப்பிறகு தாக்குபவன் வலது கால் முன்வைத்த நிலையிலிருந்து 'தவளைப்பாய்ச்சல்' செய்து எதிரியிடம் நெருங்கி, தனது வலது காலின் பின்புறம், எதிரியின் வலது காலின் பின் புறத்தை ஒட்ட, படம் 69-ல் காட்டியவாறு, அதைக் கொளுவித் தென்ன, அதே சமயத்தில் இரு சிலம்புகளையும் தனது இடது புறமாக, அம்புக் குறிகள் காட்டப்பட்டுள்ள திக்கு நோக்கி இழுக்கும் சமயம்,




படம். 69 தாக்குபவன் சிலம்புகளைத் தன் இடதுபுறமாகச் சுழற்றி இழுத்தல் முறை.

எதிரி சிலம்பங்களுக்கிடைப்பட்ட தன் இரு கை விரல்களையும் தந்திரமாக உருவி இரு சிலம்புகளைத் தானும்பற்றி, கொளுவப் பட்டிருந்த தன் வலது காலையும் விடுவித்துப் படம் 70-ல் கண்டபடி நிற்குங்கால்,







படம் 70: தாக்குபவன் எதிரியின் கைகளைத் தென்னவைத்தல்

M1/247
N28

தாக்குபவன் எதிரியை முதுகில் சுழற்றி வீசிஎறியத் தன் நிலையை ஆயத்தம் செய்வதைப் படம் 70 வருணிக்கிறது.

தாக்குபவன் சிலம்புகளின் இரு தூரமுனைகளையும் கீழே தன் இடது பக்கமாக இழுத்து எதிரியின் வலது, இடது கைகளைப் படத்தில் கண்டவாறு தென்ன வைத்து, தனது இடது காலையும் எதிரியண்டை பின்னிட்டுக் கொணர்ந்ததால், எதிரியைச் சுலப மாகத் தன் முதுகின்மீது அவன் முதுகுபட, மலர்த்திப் படம் 71-ல் கண்டவாறு அவனை வில்லாக வளைத்துத்தன் முதுகில் சுழற்றி வீசி எறிய எத்தனிக்கிருன்.



படம். 71 தாக்குபவன் எதிரியை முதுகில் சுழற்றி வீசி எறியப் போகும் காட்சி

படம்: 72-ல் தாக்குபவன் எதிரியை முதுகில் சுழற்றி வீசி எறிந்த காட்சி சித்தரிக்கப்பட்டுள்ளது' எதிரியின் முகம் தரை நோக்க, அவன் கவிழ்ந்து தரையில் கிடத்தப்பட்டிருப்பதைக் காண்க.



படம் 72: எதிரியை முதுகில் சுழற்றி தரையில் வீசி எறிந்த காட்சி.

ஆனல் இந்த அவல நிலேயிலும் எதிரி இரு சிலம்பினேப் பற்றிய கைகளேயும் நெகிழ விடாதிருப்பது போற்றத் தக்க வீரச் செயலாகும்!

ஆகவே, தாக்குபவன் எதிரியின், கைகளை சற்று உயர்த்தித் திடீரென தனது வலது காலை அவனது இரு கைகளுக்கு மிடையில் புகுத்தி படம் 73-ல் கண்டவாறு சிலம்புகளின் இருமுனை களையும் அம்புக் குறிகள் காட்டிய திக்குகள் நோக்கிப் பலமாகச் சுழற்ற,



படம் 73 எதிரியின் கைகளுக்கும் சேர்த்த சிலம்புக்கு மிடையில் வலது காலைப் புகுத்திப் பூட்டுப் போடல்

தாக்குபவன் எதிரியின் கைகளை உயர்த்தித் திடீரென தனது வலதுகாலை அவனது இருகைகளுக்கு மிடையில் புகுத்தி, எதிரிக்குப் பூட்டுப் போடுவதைப் படம் 73 வருணிக்கிறது.



படம் 74: தாக்குபவன் இரு சிலம்புகளையும் எதிரியினிட மிருந்து பறித்த காட்சி.

படம். 74-ல் கண்டவாறு, தாக்குபவன், இரு சிலம்புகளையும் எதிரியிடமிருந்து பறித்த காட்சி புலனுகிறது;

எஸ். குருசாமி என்ற சிறந்த சிலம்பாசிரியர் எழுதிய 'சிலம்பக்கலை' என்ற ஓர் சிறு நூல் (Booklet) கீழ்க்கண்ட ஐந்து முறைகளையும் ஒரு சிலம்ப மல்லன் எதிரியிடம் பொரும்போது ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று வலியுறுத்துகிறது. இந்த ஐந்து முறைகளும் அச் சிறுநூலைத் தழுவி எழுதப்பட்டுள்ளது.

எதிரியை மடக்க அல்லது தன்னைத் தற்காக்கச் செய்யும் முறைகள்.

முறை 1: பம்மல்

ஒருவன் எதிரியை மருளவைக்குமாறு, பதுங்கி நிற்றல் நிலைக்குப் பம்மல் என்று பெயர். 'பம்மல்' சிலம்ப விளையாட்டில் முக்கிய இடம் பெறுகிறது. ஒருவன் 'பம்மல்' நிலையிலிருந்தால் அவனது எதிரி, அவன் முன் செல்லப்போகிருனு? அல்லது பின் வாங்கப்போகிருனு? என்று ஐயம் அடைவார். அந் நிலையைத் தனக்குச் சாதகமாக அவன் பயன்படுத்திக்கொள்ளவேண்டும்.

படம். 75, பம்மல் முறையை எளிதில் விளக்குகிறது. இம் முறையைக் 'கிழவி முறை' எனவும் கூறுவர்.



படம். 75 கிழவி முறை: (பம்மல் முறை)

முறை 2:

பொதுவாகப் 'பதுக்கல்' என்பது தான் வைத்திருக்கும் ஒரு பொருளைத் தன் எதிரிக்குத் தெரியாமல் மறைத்து வைத்தலாகும்.

ஒருவன் தனது சிலம்பை, எதிரியின் பார்வையிலிருந்து விலக்கி வைத்தலுக்குப் 'பதுக்கல்' என்று பெயர்.

சிலம்பம் விளையாடும்போது, விளையாடுபவர் தன்னுடன் எதிர்த்து விளையாடுபவர்க்குத் தான் எவ்வாறு கம்பைப் பயன் படுத்தப்போகிறார் என்பதை எதிரி அறியாதவாறு, அதை மறைத்து விளையாடுதலுக்கு 'பதுக்கல்' என்று பெயர். சிலம்பு விளையாடும் ஒவ்வொருவரும் 'பதுக்கல்' முறையை நன்கு பயின்று கொள்ளுதல் மிகவும் இன்றியமையாதது.

சிலம்பப்போட்டியில் விளையாடுபவர், தன்னுடன் எதிர்த்து விளையாடுபவர்க்கு தான் எந்தப் 'பிடியை'ப் பயன்படுத்துகிரு ரென்பதையும் தெரியாதவாறு மறைத்தல் நலம். மேலும் கம்பின் முனைகளைத் திடீரென மறைத்து, மாற்றிப் பிடிப்பதால், எதிரியை நன்கு திணரவைத்துச் சிக்கவைக்கலாம்.

தனது சிலம்பைத் தனது, வலது, இடது பக்கங்களிலும் தனது பின்புறமாகவும் திடீரென மறைத்து வைத்தும், எதிரி எதிர்பாராத சமயம் அவனைத் தாக்குதல் ஓர் சிறந்த வழியாகும்.

முறை 3: 'மின்னல்'

'மின்னல்' முறையானது சிலம்ப மல்லன் துரிதமாகவும், துடுக்காகவும் சிலம்பினைச் சுழற்றி, எத்திசையும் ஏரு நடை அல்லது அரிமா நடை போட்டு, முன் ஏறிப் பின் பதுங்கி (புலிபோல). எதிரியை மருளவைத்து விரட்டுவதற்கும, அல்லது எதிரியின் பயங்கர அடிகளை மின்னல் வேகத்தில் போக்கி (எதிர்த்துக்கட்டி) அவனை மடக்குவதற்கும் பிரயோகிக்கப்படுகிறது.

எவ்வாறு காரிருளில், விண்ணில் வெள்ளிக் கொடிபோல் மின்னல் தோன்றி, இமைப் பொழுதில் மறையுமோ, அவ்வண் ணமே, கண்மூடி விழிப்பதற்குள், அதிவேகத்தில் நெற்றிமுட்டுச் சிலம்பு பல சுளிவு நெளிவுகளுடன் பல கோணங்களில் திரிந்து சென்று எதிரியைத் தாக்கிவிடும். அவ்வாறு சில வல்லுனர் சிலம்பு விளையாடும் போது, வீசுகிருர்களா? அல்லது அறுக்கிருர் களா? அல்லது வெட்டுகிருர்களா? என்பதை அறிவதுகூட மிகக்

கஷ்டமாக இருக்கும். ஏனெனில், மின்சார விசிறி வேகமாகச் சுழலும்போது அதன் மூன்று இறகுகளும் தனித்தனியே தெரியா தொழியுமோ, அவ்வாறே, சிலம்பக் கம்பும் தனித்து நீண்ட கம்பாகக் காட்சியளிக்காது.

முறை 4: மிரட்டல்

"ஆள்பாதி; அகங்காரம் பாதி" என்ற முதுமொழிக் கேற்ப பொருபவனுக்கு, ஏற்ற உடற்கட்டும், மனதிடனும், மன உறுதி யும் எதிரியை மருள வைக்கும், மன அகங்காரமும் மிக இன்றி யமையாததாகும்.

எதிரியைப் பயமுறுத்த வேண்டின் சிலம்பன் தனது கண் களைக் கோவைப் பழம் போன்று சிவப்பாக்கி, சிங்கப்பார்வை (அரிமா நோக்கு) காட்டி, சிலம்பைக் காற்றுமிசை வேகமாகச் சுழற்றி ஏவி, பயங்கர ஓசை எழுப்பி நாகமெனச் சீற அல்லது சிலம்பைத் தரையில் இங்கும் அங்கும் சிதறி சுழற்றி அடித்து அச்சமுண்டாக்குவர். வேறு சிலர் புலியானது புள்ளிமானின் குருதி குடிக்க எண்ணி, அதைப் பார்த்துப் பம்பிச் சீறி, காலடி வரிசைகளால் கலங்கவைத்துக் குறிதவருது பாயும் வண்ணம், தங்களது ஒப்பற்ற உடான் துள்ளளாலும், பலவிதக் காலடி வரிசை களாகிய, அரவடி, ஒற்றைச்சுவடு, இரட்டைச் சுவடு, மூவடி, நாலடி பாவலாக்கள், படைவீச்சு முதலிய கம்பு சுழற்றும் திறனு லும் எதிரிகளை மிரட்டுவர். பருந்து, பாம்பைப் பயமுறுத்தி, அல கிடுவது போல், எதிரியைப் பயமுறுத்தி மடக்குவதும் ஓர் சிறந்த முறையாகும். இம்முறைக்கு 'மிரட்டல்' முறை' எனப் பெயர்.

குறிப்பு: யார் எப்படி மிரட்டினுலும், மிரட்டுபவனை எதிர்த்து விளையாட வேண்டியது அவசியம். இவ்விளையாட்டில் 'விழிப்பு', மிகமிக அவசியம்.

முறை 5: மயக்கமுறவைக்கும் வீச்சுகள் அல்லது இடசாரி, வல சாரி வீச்சுகள்.

இவ்விளையாட்டில் வல்லவர்கள் விளையாடுங்கால் எந்தக் கைப் பக்கம் கம்பு சுழல்கிறது என்பதை அறிவது மிகவும் கஷ்டம். இதைத் தான் இடசாரி, வலசாரி, அல்லது மயக்கமுறவைக்கும் வீச்சுகள் என்பர். மேற்கூறிய திறமை எல்லோருக்கும் எளிதில் அமைவதில்லை, சிலருக்குத்தான் இவ்வேகம் அமையும். ஒரு சிலர் இடது சாரியாக இருப்பர். வேறு சிலர் வலதுசாரியாகத் திகழ்வர். இடதுசாரியாக இருப்பவர் வீசும் கம்பு இடதுபுறத்தில் வரும்போது

அதிவேகமாக இருக்கும். வலதுசாரியாக இருப்பவரின் வீசும் கம்பு வலது புறத்தில் வேகமாக இருக்கும். கூடியவரை இடது வலது ஆகிய இருபுறமும் வீசும் பயிற்சி கொடுத்துப் பழகுவது மிகவும் நலம்.

**சிலம்பை உருவி விடல்:**

சீரிய சிலம்பக்கலையில் பயிலவேண்டிய பிரிதொரு முக்கிய திறமை யாதெனில், ஒருவன் தன் சிலம்பக்கம்பை எதிரியின் சிலம்பக் கம்பின்மேல் சருக்கி, சிலம்பைப்பற்றிய எதிரியின் கை விரல்களையும், மணிக்கட்டுகளையும் தாக்கலாம்.

சிற்சில சமயங்களில் இங்ஙனம் தன் சிலம்பை எதிரியின் சிலம்பின்மீது உருவிவிட்டு அவனது உடம்பின் பல இலக்கு களையும் தாக்கலாம்

அனேக சந்தர்ப்பங்களில் எதிரியின் கம்பின்மேல் அல்லது அவனது கம்பின்கீழ் உருவிவிடப்பட்ட சிலம்பினல், எதிரிக்குப் பூட்டுப்போட்டு அவனை நிலை தடுமாறவைக்கலாம். அல்லது அவனது கம்பைப் பறிக்கலாம். இங்ஙனம் செய்ய ஒருவன் தனது சமயோசித புத்தியை மின்னல் வேகத்தில் பிரயோகிக்கவேண்டும்.

**சிலம்பக் கம்பின் பிரயோக நீளம்:**

சிலம்பக்கம்பின் நீளம் ஒருவனின் 'நெற்றிமுட்டு' அளவாக இருந்தபோதிலும் அக்கம்பைத் தேவைக்குத் தகுந்தார்போல நீட்டவோ, குறுக்கவோ பழகிக்கொள்வது ஒருவனின் திறமையைக் காட்டும்.

சற்று தூரத்தில் விலகித் தன்னைப் பாதுகாக்க நிற்கும் தன் எதிரியைத் தாக்க, சிலம்பன் தனது சிலம்பின் முழு நீளத்தையும் ஒருவேளை பிரயோகிக்க வேண்டியதாயிருக்கும்.

தூரத்தில் பாவலா செய்யும் எதிரியைச் சடிதியில் தாக்க கம்பின் முழு நீளத்தோடு தனது கையின் நீளமும் சேரும்படி கையை நன்கு நீட்டிக் குத்தவேண்டிய சமயமும் நேரிடலாம்.

விலகி ஓடும் எதிரியின்மீது தொடர் அடிகள் கொடுக்க எத்தனிக்கும்போதும் கம்பை நீட்டிப் பிரயோகித்தல் தகும். இங்ங னம் சிலம்பை நீட்டிப் பிரயோகிக்க வேண்டுமாயின் கைப்பிடி யானது கம்பின் கடைசி முனையில் அமையுமாறு செய்யவேண்டும்.

எதிரியின் தாக்குதலைக்கட்ட அல்லது தேக்கவேண்டுமாயின் கம்பு தனது உடம்பிற்கு அருகிலிருக்குமாறு அதைச் சுருக்கிப் பிடிக்கவேண்டிய நிலை ஏற்படலாம்.

'சிலம்பைச் சுருக்குதல்' என்பது 'சிலம்பை உடைத்து அதன் நீளத்தைக் குறைப்பது' என்று இங்கு பொருள்படாது. 'சிலம்பைச் சுருக்குதல்' என்பது உடம்பின் முன்புறமாகவோ, பின்புறமாகவோ, அல்லது அதன் பக்கங்களிலோ, சிலம்பு அதிக அளவு நீளாதபடி செய்தல். இங்ஙனம் செய்ய கம்பின் பிடியில் மாறுதல் செய்ய வேண்டும். படம் 76-ல் சிலம்பன் தனது கம்பை உடம்போடு அணைத்து சுருக்கி வைத்திருப்பதைக் காணலாம்.




படம் 76 சிலம்பைச் சுருக்கிப் பிடித்தல்

படம் 77-ல் சிலம்பன் உடம்பின் எல்லாப் பாகங்களையும் பாதுகாக்கும் வண்ணம் தன் சிலம்பை, உடம்பின் நீளத்திற்கு ஒட்டி குருக்கிப்பிடித்திருப்பது நன்கு விளக்கப்பட்டுள்ளது.




படம் 77 சிலம்பை உடம்பைப் பாதுகாக்கச் சுருக்கிப் பிடித்தல்.

முன்பு விளக்கப்பட்ட நாலுவித காலடி வரிசைகள், வீச்சு முறைகள், அடிமுறைகள் இவைகளைப் பயின்றபின், தொடர்ந்து பயிலவேண்டியது யாதெனில், இருவராக எதிர்த்து நின்று பயிலவேண்டிய காலடி முறைகளோடு சேர்ந்த அடி வரிசைகளும் அடிகளைக் கட்டும் முறைகளுமாம்.

கால், கை ஒத்துழைக்கும் திறமை, வேகம், சமயோசித புத்தி முதலிய திறமைகள் இப்பயிற்சிகளினால் தெளிவுபடும்.

பதினேழு விதமான அடிப்படை அடிமுறைகள், அவைகளைக் கட்டும் வழிகள் தனித்தனியே கீழே தொடுக்கப்பட்டுள்ளன. ஆசானுக்கு ஆசான் இந்த அடிமுறைகளின் அமைப்பு அல்லது அடிமுறைகளின் கூட்டு அல்லது சேர்க்கை (Combination) வேறுபடலாம்.

கீழே கொடுக்கப்பட்டுள்ள பதினேழு அடிமுறைகளையும், அவைகளைக் கட்டும் முறைகளையும் இந்நூல் ஆசிரியர் தனது அனுபவத்தினாலும், நூற்றுக்கு மேற்பட்ட ஆசான்களோடு பேட்டி கண்டதன் விளைவாலும், தனது 17 வருட ஆராய்ச்சியினாலும், விஞ்ஞான ரீதியில் தொடுத்துள்ளார். மனித உடம்பில் தாக்கக்கூடிய அனேக அடிப்படை இலக்குகள், குறிப்பிடப் பட்டுள்ளன.

புகைப்படங்கள் பல நூறுகள் எடுத்துத் துருவி ஆராய்ந்தும், தமிழகத்தின் பல சேரிகள், பல கிராமங்கள், பல பட்டணங்களுக்கு நேரில் சென்று ஆங்குள்ள தமிழ் பேராசிரியர்களையும், சிலம்ப நிபுணர்களையும் அணுகி, இக்கலையின் நுட்பங்களை சேகரித்தும், வரை படங்கள் பல நூறுகள் வரையப்பெற்றும் அச்சுப் பிளாக்குகள் செய்யப்பெற்றும், ஆங்கிலத்தில் இக் கலையின் சாரத்தை நூலாக அச்சிட்டும், பல பத்திரிகைகள் மூலம் இக்கலையின் பெருமையை விளம்பரப்படுத்தியும், ஆங்கிலப் பிரதியை தேன் தமிழில் மொழி பெயர்த்து, இங்ஙனம் அச்சிட்டும், இக் கலைக்கு இவ்வாறாக இருபதினாயிரம் ரூபாய்களுக்குமேல் செலவிட்டுள்ளார். இத்தீவிர ஆராய்ச்சியின் பலனாகப் புத்துயிர்பெற்ற இக்கலையைக் கசடறக் கற்று உலகில் பரப்பவேண்டுமாயின் பின்வரும் அடிப்படை அடி முறைகளையும், அடிகளைக் கட்டும் வழிகளையும் நாம்முறையோடு பயிலவேண்டும்.

கீழ்க்காணும் அடிப்படை முறைகளைக் கற்ற ஓர் சிறந்த சிலம்ப ஆட்டக்காரர், பிறகு தனது அடிவரிசைகளை, எதிரியின் திறமைக்குத் தகுத்தவாறு மாற்றி அமைத்துக்கொள்ளவேண்டும். போட்டியில் எதிரியின் கை, கால், கம்புத்திறமையை எடை போட்டுப் பார்த்து அதற்கேற்றார்போல, அடிமுறைகளின் தொகுப்பை, அல்லது அடிமுறைகளின் அமைப்பைத் தொகுத்துக்கொள்ளவேண்டும்.

இப்பதினேழு அடிவரிசைகளோடு, தமிழகத்தில் இன்னும் பயிலப்படும் பனைஏறி மல்லு, குறவஞ்சி, துலுக்காணம், கூடல் ஒளிவு, அய்யன் கால்வரிசை, பறையர் வரிசை, கர்நாடக வரிசை போன்ற பலவிதமான அடிகளின் தொகுப்புகளையும் ஒருவன் திறம்படப் பழகி தனது ஆற்றலைப் பெருக்கிக்கொள்ளுதல் சாலவும் நன்று. மேற்கூறிய அடிமுறைகளின் கால் அடி வரிசைகளும், கம்பு சுழற்றுதலின் நுணுக்கங்களும் பல வரைபடங்களின் விளக்கவுரைகளோடு அடுத்து அச்சிடப்படும் சிலப்ப நூலில் இடம் பெறும்.

திரு டேவிட் மேனியல் ராஜ் அவர்களின் தொகுப்பு

ஆதார அடி வரிசைகளைக் கிரமமாகக் கற்கும் வரிசை கீழே கொடுக்கப்பட்டுள்ளது. (எதிரியைத் தாக்குதல்)

| அடி வரிசையின் பெயர் | துரிதமாகவும், ஒன்றன்பின் ஒன்றாகவும், தொடுப்பாகவும் அடி தொடுக்கப்படும் இலக்குகள் | அடிவகை |
|---|---|---|
| ஒரு அடி வரிசை | தலை உச்சியில் மட்டும் | அறுத்தல் |
| இரு அடிகள் வரிசை | இடது தோளில் | வெட்டுதல் |
| | வலது கணுக்காலில் | வீச்சாக அடித்தல் |
| மூன்று அடிகள் வரிசை | இடது தோளில் | வெட்டுதல் |
| | வலது கணுக்காலில் | வீச்சாக அடித்தல் |
| | வலது சென்னியில் | வீச்சாகசுழற்றிஅடித்தல் |
| நாலடிகள் வரிசை | இடது வலது கன்னங்களில் | அறுத்தல் |
| | இடது வலது கணுக்கால்களில் | வீச்சாக அடித்தல் |
| ஐந்தடிகள் வரிசை | இடது வலது விலாப் புறங்களில் | கீழ்த்தார் அறுத்தல் |
| | இடது வலது காரை எலும்புகளில் | வெட்டுதல் |
| | நடு நெஞ்சில் | குத்துதல் |
| ஆறு அடிகள் வரிசை | நடுநெஞ்சில் | குத்துதல் |
| | இடது கன்ன எலும்பில் | வெட்டுதல் |
| | நடு நெஞ்சில் | குத்துதல் |
| | வலதுகன்ன எலும்பில் | வெட்டுதல் |
| | தொண்டையில் | குத்துதல் |
| | தலையில் உச்சியில் | அறுத்தல் |

| அடி வரிசையின் பெயர் | துரிதமாகவும். ஒன்றன்பின் ஒன்ருகவும், தொடுப்பாகவும் அடி தொடுக்கப்படும் இலக்குகள் | அடிவகை |
|---|---|---|
| ஏழு அடிகள் வரிசை | இடது கன்னத்தில் | முகவாள் அல்லது கன்ன அறுத்தல் |
| | வலது விலாப்புறத்தில் | குத்துதல் |
| | வல்து இடது தலையில் | சுடச் சுட மின்னல்போல இரு சுழல் அறுப்புக்கள் |
| | நடுநெஞ்சில் | எறிகுத்து |
| | இடது கன்னத்தில் | அறுத்தல் |
| | வலது கணுக்காலில் | வீச்சாக அடித்தல் |
| எட்டு அடிகள் வரிசை | இடது வலது விலாப் புறத்தில் | கீழ்த்தார் அறுத்தல் |
| | இடது வலது தோள் பட்டைகளில் | கைமாற்றி மேலறுப்புகள் கொடுத்தல் |
| | இடது வலது கன்னங் களில் | முகவாள் அறுத்தல் |
| | வலது கன்னத்தில் | பிறட்டி அடித்தல் |
| | இடதுகால் குதிரை எலும்பில் | குத்துதல் |
| ஒன்பது அடிகள் வரிசை | இடது வலது விலாப் புறத்தில் | கீழ்த்தார் அறுத்தல் |
| | இடது வலது கன்னங் களில் | முகவாள் வீச்சு |
| | இடது வலது தோள் பட்டைகளில் | மேல்த்தார் அறுத்தல் |
| | இடது வலது கன்னங் களில் | முகவாள் அறுப்பு |
| | இடது விலாப்புறத்தில் | எறிகுத்து |

| அடி வரிசையின் பெயர் | துரிதமாகவும் ஒன்றன்பின் ஒன்ருகவும் தொடுப்பாகவும் அடி தொடுக்கப்படும் இலக்குகள் | அடிவகை |
|---|---|---|
| பத்து அடிகள் வரிசை | இடது வலது விலாப் புறத்தில் | கீழ்த்தார் அறுத்தல் |
| | இடது வலது காரை எலும்பில் | மேல்த்தார் அறுத்தல் |
| | இடது கணுக்காலில் | வீச்சாக அடித்தல் |
| | இடது வலது கன்னங் களில் | வெட்டுதல் |
| | வலது கணுக்காலில் | வீச்சாக அடித்தல் |
| | வலது கன்னத்தில் | வெட்டுதல் |
| | இடது கணுக்காலில் | வீச்சாக அடித்தல் |
| பதினெரு அடிகள் வரிசை | இடது வலது தாடை களில் | கீழ்த்தார் அறுத்தல் |
| | இடது வலது காரை எலும்புகளில் | மேல்தார் அறுத்தல் |
| | தலையில் வலது இடது பக்கத்தில் | உடான் துள்ளிக் குதித்து அடித்தல் |
| | நெற்றியில் | குத்து |
| | இடதுவலதுகன்னத்தில் | முகவாள் அறுத்தல் |
| | இடது வலது கணுக் காலில் | வீச்சாக அடித்தல் |
| பன்னிரண்டு அடிகள் வரிசை | இடது வலது விலாப் புரத்தில் | கீழ்த்தார் அறுத்தல் |
| | இடது வலது தோள் பட்டையில் | கைமாற்றி வீச்சாக கொடுத்தல் |
| | இடது விலாவில் | எறிகுத்து (Jab) |
| | இடது கன்னத்தில் | மேல்தார் அறுத்தல் |
| | வலது இடது கணுக் கால்களில் | வீச்சாக அடித்தல் |
| | தலையில் வலது பக்கத்தில் | அறுத்தல் |
| | வலது இடது காரை எலும்புகளில் | உடான் துள்ளி தொடரடி கொடுத்தல் |
| | வலது விலாப் புறத்தில் | எறிகுத்து |

| அடிவரிசையின் பெயர் | துரிதமாகவும், ஒன்றன்பின் ஒன்ருகவும் தொடுப்பாகவும் அடி தொடுக்கப்படும் இலக்குகள் | அடிவகை |
|---|---|---|
| பதின்மூன்று அடிகள் வரிசை | இடது வலது கன்னங்களில் | மேல்தார் அறுத்தல் |
| | இடது வலது கணுக்கால்களில் | கீழ்த்தார் அறுத்தல் |
| | வலது கணுக்காலில் | பின் வீச்சு வீசுதல் |
| | இடது வலது கன்னங்களில் | மேல்தார் அறுத்தல் |
| | இடது வலது கன்னங்களில் | மேல்வீச்சுக்கள் |
| | இடது வலது காரை எலும்புகளில் | மேல்தார் அறுத்தல் |
| | இடது வலது குதிரை முகங்களில் | கீழ் வீச்சாக அடித்தல் |
| பதிஞன்கு அடிகள் வரிசை | மேற்கண்ட பதின்மூன்று இலக்குகளோடு இறுதியில் தொடையிலும் கொடுத்தல் | மேற்கூறிய அடிவகைகளோடு இறுதியில் தொடையில் குத்துதல் |
| பதினைந்து அடிகள் வரிசை | நடு நெஞ்சில் | குத்துதல் |
| | இடது கணுக்காலில் | வீச்சாக அடித்தல் |
| | தலையில் இடதுபக்கத்தில் | சுழற்றி வெட்டுதல் |
| | வலது கணுக்காலில் | வீச்சாக அடித்தல் |
| | வலது இடது காதுகளருகில் | சுழற்றி வீச்சாக அடித்தல் |
| | இடது வலது கால் முட்டுகளில் | வீச்சாக அடித்தல் |
| | தலையில் இடதுபக்கத்தில் | வெட்டுதல் |
| | வலது விலாப்புறத்தில் | எறிகுத்து |
| | இடது வலது தாடைகளில் | கீழ்த்தார் அறுத்தல் |
| | இடது விலாப் புறத்தில் | எறிகுத்து |
| | நெஞ்சில் | பின் எறிகுத்து |
| | தலையில் உச்சியில் | அறுத்தல் |

| அடி வரிசையின் பெயர் | துரிதமாகவும், ஒன்றன்பின் ஒன்றாகவும், தொடுப்பாகவும் அடி தொடுக்கப்படும் இலக்குகள் | அடிவகை |
|---|---|---|
| பதினாறு அடிகள் வரிசை | நெஞ்சில் | குத்துதல் |
| | இடது கன்ன எலும்பில் | உள் அறுப்பு |
| | நெஞ்சில் | குத்துதல் |
| | வலது கன்ன எலும்பில் | உள் அறுப்பு |
| | நெஞ்சில் | குத்துதல் |
| | தலையில் உச்சியில் | அறுத்தல் |
| | தொடையில் | குத்துதல் |
| | இடது பாதத்தில் | வீசி அடித்தல் |
| | தலையில் இடதுபாகத்தில் | சுழற்றி அடித்தல் |
| | வலது முழங்காலில் | வீசி அடித்தல் |
| | வலது இடது செவிப் பக்கத்தில் | வெட்டுதல் |
| | இடதுகால் முட்டில் | கீழ்வீச்சாக அடித்தல் |
| | வலது பாதத்தில் | வீசி அடித்தல் |
| | தலையில் உச்சியில் | அறுத்தல் |
| | கால்முட்டில் | குத்துதல் |
| பதினேழு அடிகள் வரிசை | இடது வலது குதிரை முகங்களில் | அறுத்தல் |
| | இடது வலது தாடைகளில் | கீழ்த்தார் அறுத்தல் |
| | இடது வலது பாதங்களில் | பக்க அறுப்பு அறுத்தல் |
| | தலையில் இடது வலது பச்கங்களில் | உடான் துள்ளி 2 தொடர் அடி கொடுத்தல் |
| | இடது வலது விலாப் புறங்களில் | கீழ்த்தார் அறுத்தல் |
| | இடது வலதுதோல்களில் | மேல்தார் அறுத்தல் |
| | இடது வலது கன்னங் களில் | வீச்சாக அடித்தல் |
| | இடது வலது காரை எலும்புகளில் | அறுத்தல் |
| | நெற்றியில் | எறிகுத்து |

மேலே கொடுக்கப்பட்டிருக்கும் ஒன்று முதல் பதினேழு அடிகள் வரிசைகளின் தாக்குதல்களுக்கு மாற்று அடிமுறைகள் பின்வருமாறு.

| அடிவரிசை எண் | தடுக்கும் முறை |
|---|---|
| 1. | தலைக்கு இலக்கான அடியைத் தடுக்கத் தன் கம்பைத் தலைக்குமேல் உயரமாகச் சற்று முன்னால் தரைநோக்கிச் சற்று சாய்வாகப் பிடித்துத் தாங்குதல். |
| 2. | எதிரியின் மீது அவன் தன் கைமேல் கொடுக்கும் அதே இலக்குகளில் மாற்று அடிகளைக் கொடுத்துக் கொழுவுதல். |
| 3. | மேற்கண்டவாறே. |
| 4. | மேற்கண்டவாறே. |
| 5. | இந்த வரிசையிலுள்ள முதல் நான்கு அடிகளுக்கும், எதிரியின் அதே இலக்குகளில் மாற்று அடிகளைக்கொடுத்துக் கொழுவிப் பின் நெஞ்சில் குத்துவதைத் தவிர்க்கத் தன் கொம்பைச் செங்குத்தாகப் பிடித்து எதிரியின் பூமிக்கு இணையான கம்பை அப்பால் தள்ளவும். |
| 6. | 1-ஆம், 3-ஆம், 5-ஆம் தாக்குதல்களுக்கு எதிரியின் கம்பு தன்மேல் தைக்காதவாறு அதை அப்பால் தள்ளுதல். 6-ஆம் அடியைத் தடுக்கத் தன் கம்பைத் தலைக்குமேல் சற்று முன்னால் தரைக்கு இணையாகப் பிடித்துத் தாக்குதல். 2-ஆம், 4-ஆம், 6-ஆம் அடிகளைத் தடுக்க எதிரியின் அதே இலக்குகளில் மாற்று அடிகள் கொடுத்து கொழுவுதல் |
| 7. | 1, 2, 6, 7-ஆம் அடிகளுக்கு எதிரியின்மீது அதே இலக்குகளில் மாற்று அடிகள் கொடுத்துக் கொழுவுதல். 3-ஆம், 4-ஆம் அடிகளுக்குத் தன் கம்பைத் தன் தலைக்குமேல் சற்று முன்னால் தரைக்கு இணையாகப் பிடித்துத் தாங்கிப் பின் |

| அடிவரிசை எண் | தடுக்கும் முறை |
| --- | --- |
| | இறங்குதல் 5-ஆம் அடியாகிய குத்து தன்மேல் தைக்காதவாறு எதிரியின் கம்பை அப்பால் தள்ளுதல். |
| 8. | எதிரியின்மீது அவன் தன்மேல் கொடுக்கும் அதே இலக்குகளில் மாற்று அடிகளைக் கொடுத்துக் கொழுவுதல். |
| 9. | எதிரி தன்மேல் தாக்கும் முதல் எட்டு இலக்குகளைப் போன்ற அவன் இலக்குகளுக்கு மாற்று அடிகளைக் கொடுத்துக் கொழுவுதல். ஒன்பதாவது இலக்கில் வரும் குத்தைத் தடுக்க, சற்று விலகி கம்பை அப்பால் தள்ளுதல். |
| 10. | எதிரி தன்மேல் தாக்கும் அதே இலக்குகளைப் போன்ற அவன் இலக்குகளுக்கு முறையே மாற்று அடிகளைக் கொடுத்து அவன் கம்பைக் கொழுவுதல். |
| 11. | எதிரி தன்மேல் தாக்கும் முதல் நான்கு அடிகளுக்கும், கடைசி 4 அடிகளுக்கும் அவன் அடிக்கும் அதே இலக்குகள் போன்ற அவன் இலக்குகளுக்கு மாற்று அடிகளைக் கொடுத்து அவன் கம்பைக் கொழுவுதல். 5-ஆம் 6-ஆம் அடிகளுக்குக் கம்பைச் சாய்வாக தனதுதலையின் மேல் வலது இடது பக்கங்களில் தூக்கிப்பிடித்து பின்விலகித் தாங்குதல். 7-வது அடியை தன்மேல் தைக்காதவாறு எதிரி கம்பை அப்பால் தள்ளுதல். |
| 12. | எதிரிகளின்மேல் தாக்கும் 1, 2, 6, 7, 8-ஆம் அடிகள் ஏவப்படும் இலக்குகளைப்போன்ற அவன் இலக்குகளுக்கு மாற்று அடிகளைக் கொடுத்து அவன் கம்பை கொழுவுதல். 3-ஆம், 4-ஆம் அடிகளைத் தடுக்கத் தன் கம்பை இடது, வலது தோள்பட்டைகளுக்கு மேல் சற்று சாய்வாகத் தாங்கிப் பிடித்தல். 5-ஆம், |

அடிவரிசை எண் | தடுக்கும் முறை

12-ஆம் அடிகளாகிய குத்துகள் தன்மீது தைக்காதவாறு எதிரி கம்பை அப்பால் தள்ளுதல். 9-வது அடியைத் தடுக்கத் தன் கம்பை தன் தலையில் வலது பக்கம் சாய்வாக உயர்த்திப் பிடித்து தாங்குதல். 10-ஆம், 11-ஆம் அடிகளைத் தடுக்க தன் கம்பை தனது வலது இடது புற தோள்களுக்கு மேல் முறையே சாய்வாக உயர்த்திப் பிடித்துத் தாங்குதல்.

13. எதிரி தன்மேல் அடி கொடுக்கும் 13 இலக்கு களைப்போன்ற எதிரியின் இலக்குகளுக்கு மாற்று அடிகளைக் கொடுத்து அவன் கம்பை கொழுவுதல்.

14. எதிரி தன்மேல் அடிகொடுக்கும் முதல் 13 இலக் குகளைப் போன்ற அவன் இலக்குகளுக்கு மாற்று அடிகளைக் கொடுத்து அவன் கம்பைக் கொழுவு தல். 14-ஆம் அடியாகிய குத்து தன்மேல் தைக் காதவாறு எதிரியின் கம்பை அப்பால் தள்ளுதல்.

15. 1, 10, 13, 14 அடிகளாகிய குத்துக்கள் தன்மேல் தைக்காதவாறு எதிரியின் கம்பை அப்பால் தள்ளுதல் – எதிரி தன்மேல் கொடுக்கும் 2, 4, 5, 6, 7, 8, 11, 12 அடிகள் விழும் இலக்கு களைப் போன்ற அவன் இலக்குகளுக்கு மாற்று அடிகளைக்கொடுத்து அவன் கம்பை கொழுவுதல் 3-ஆம், 9-ஆம் அடிகளைத் தடுக்கத் தன் கம்பைத் தலையின் இடது பக்கத்தின் மேல் சாய்வாகப் பிடிக்கவும், 15-ஆம் அடியைத் தடுக்கத் தன் கம்பைத் தன் தலையின்மேல் தரைக்கு இணையாகப் பிடித்து தாங்குதல்.

16. எதிரி தன்மேல் கொடுக்கும் 2, 4, 8, 10, 11, 12, 13, 14-ஆம் அடிகள் விழும் இலக்குகளைப் போன்ற அவன் இலக்குகளுக்கு மாற்று அடி களைக்கொடுத்து அவன் கம்பைக் கொழுவுதல் 1, 3, 5, 7, 16-ஆம் அடிகளான குத்துக்கள்

| அடிவரிசை எண் | தடுக்கும் முறை |
|---|---|
| | தன்மேல் தைக்காதவாறு எதிரியின் கம்பை அப்பால் தள்ளுதல். 6-ஆம், 15-ஆம் அடிகளைத் தடுக்கத் தன் கம்பைத் தன் தலைக்கு மேல் சற்று முன்னாகவும், தரைக்கு இணையாகவும் இருக்குமாறு தரங்கிப் பிடித்தல். 9-ஆம் அடியைத் தடுக்கத் தன் கம்பைத் தன் தலைக்கு இடதுபுறத்தில் சற்று சாய்வாகப் பிடித்துத் தாங்குதல். |
| 17. | எதிரி தன்மேல் தாக்கும் 1, 2, 3, 4, 5, 6, 9, 10, 11, 12, 13, 14, 15, 16-ஆம் அடிகள் விழும் இலக்குகளைப்போன்ற அவன் இலக்குகளுக்கு மாற்று அடிகளைக் கொடுத்து அவன் கம்பைக் கொழுவுதல்.<br><br>ஏழாம் எட்டாம் அடிகளைத் தடுக்கத் தன் கம்பைத் தன் தலைக்குமேல் சற்று முன்பாகத் தரைக்கு இணையாகத் தாங்கிப் பிடித்துப் பின் இறங்கல். 17-ஆம் அடியாகிய குத்து தன்மீது தைக்காதவாறு கம்பை அப்பால் தள்ளுதல். |

# அத்தியாயம் 5

## சிலம்பப் போட்டியின் விதிகள்

சிலம்பப் போட்டி

விதி 1 வட்ட வடிவ விளையாட்டு அரங்கம்

விதி 2 சிலம்பக்கம்பு: அளவை

விதி 3 பொரும் மல்லர்களின் எண்ணிக்கை

விதி 4 சிலம்பனின் உடை

விதி 5 சிலம்பனின் பாதுகாப்பு உபகரணங்கள்

விதி 6 போட்டி நடத்த வேண்டிய காலவரை

விதி 7 நடுவர்கள்

விதி 8 மல்லர்கள் விளையாட்டு அரங்கினுள் இறங்கும் சடங்கு

விதி 9 போட்டி ஆரம்பித்தலின் ஒழுங்கு

விதி 10 தாக்கக் கூடிய உடம்பின் இலக்குகள்

விதி 11 விதியை மீறுதலும், நல் நடக்கையின்மையும் அதற்கேற்ற தண்டனைகளும்

விதி 12 போட்டியில் வெற்றி எண்களை வழங்கும் முறை

விதி 13 வெற்றி பெற்றவனைக் கணித்தல்

விதி 14 போட்டியின் முடிவு

சிலம்பப் போட்டியில் காணவேண்டிய நற்பண்புகள்

**சிலம்பப் போட்டி :**

ஒரு குழுவைச் சார்ந்த இருவர் பொரும் போட்டிகளாகிய, மல்யுத்தம் (Wrestling), குத்துச் சண்டை, (Boxing) ஜூடோ (Judo), வாள் சிலம்பம் (Fencing), இவைகளைப்போல சிறந்தது சிலம்பப் போட்டியாகும் (Silambam).

குறிக்கப்பட்ட காலவரைக்குள் ஒரு சிலம்பப் போட்டியாளன் தனது எதிரியின் உடலின் (விலக்கப்பட்ட இலக்குகள் தவிர) இலக்குகளில் அதிகம் தொடுதல் (Touches) செய்து, அதற்கேற்ப அதிக எண்கள் பெற்ருல் அல்லது எதிரியின் சிலம்பைத் தான் கைப்பற்றினுல், அவன் வெற்றிவாகை சூடப்பெறுவான்.

குறிப்பு: இந் நூல் ஆக்கியோன் தமிழ் நாட்டிலுள்ள பல மாவட்டங்களிலுள்ள நூற்றுக்கு மேற்பட்ட சிலம்ப ஆசிரியர்களிடம் அணுகிப் பேட்டிகண்டதின்மூலம் சிலம்ப விளையாட்டு விதிகளைக் கிரமமாகவும் நவீன காலத்தில் நடைமுறைப் போட்டிகள் நடத்துவதற்கு ஏற்றவாறும் ஆராய்ந்து!தொகுத் துள்ளார். ஆகவே இங்கு தொகுக்கப் பட்டுள்ள விதிகள் அதிகார பூர்வமானவைகள் எனக் கொள்ளலாம்.

லட்சுமிபாய் உடற்பயிற்சிக் கல்லூரி (குவாலியர்) யில் M. P. E. பட்டப்படிப்பிற்காகச் செய்த சிலம்பம்பற்றிய ஆராய்ச்சிக்குப்பின் (Research), அழகப்பா உடற்பயிற்சிக் கல்லூரி, காரைக்குடியில் விரிவுரையாளராகப் பணியாற்றிவருங்கால், மேற்கொண்ட ஆராய்ச்சியினுல் கீழ்க்காணும் 14 விதிகள் உருவாக்கப்பட்டுள்ளன. 1971-ம் ஆண்டு மார்ச் மாதம் வெளியிடப்பட்ட சிலம்பம்பற்றிய ஆங்கில நூலில் இப் 14 விதிகளும் இடம் பெற்றுள்ளன. இந்திய நாட்டின் எல்லா மாநிலங்களிலும், மலேயா, சிங்கப்பூர், சிங்களம் மற்றும் மேலைய நாடுகளிலும், சிலம்பக்கூடங்கள் இச்சீரிய விளையாட்டு விதிகளைக் கடைப்பிடிக்க முன்வந்துள்ளன. ஆயினும் விதிகளில் ஏதேனும் மாற்றங்கள் தேவையானுல், அம் மாற்றங்கள் கலை வளர்ச்சிக்காகவும், நற்பண்பு வளர்ச்சிக்காகவும், வரவேற்கப்படும்.

**விதி 1: வட்டவடிவ விளையாட்டு அரங்கம்.**

சிலம்பப் போட்டி சமதளமான சற்றுக் கடின தரையில் நடத்தப் பட வேண்டும். மண் தரையிலும் வழுக்கக்கூடிய பரப்பிலும், போட்டி நடத்தலாகாது.

பொதுவாக விளையாட்டு அரங்கம் வட்ட வடிவமானதாக இருக்க வேண்டும். இருவர் பொரும் போட்டியை நடத்த குறைந்த பட்சம் 20′ அல்லது அதிகபட்சம் 25′ ஆரமுள்ள வட்டவடிவ விளையாட்டுத் திடல் அல்லது விளையாட்டு அரங்கம் தேவை.

குறிப்பு: ஆனால் ஒவ்வொரு கட்சியும் இரண்டு இரண்டு வீரர்களை உடைத்தாயிருந்து அவ்விரு கட்சிகளிடையே போட்டி நடத்த வேண்டுமாயின் மேற்கூறிய வட்டப்பரப்பு போதாது. ஆகவே 30′ முதல் 35′ ஆரமுள்ள வட்டப் பரப்பு மைதானத்தை உருவாக்கவேண்டும்.

**விதி 2: சிலம்பக்கம்பு: அளவை.**

நன்கு வளையக்கூடிய ஆனால் நன்கு உரமேற்றப்பட்ட மூங்கில் கழியின் பருமன் நுனிமுனை முதல் கடைமுனைமட்டும் ஒரே சீராக இருக்கவேண்டுவது அவசியம்.

பொதுவாக சிலம்பக்கம்பின் நீளம் ஒருவரின் நெற்றியை முட்டும் அளவாக இருக்கும். அதாவது தரையில் செங்குத்தாக ஊன்றப்பட்டால் அக் கம்பின் மறு முனை அன்னாரின் நெற்றிவரை நீண்டிருக்கும்.

முதல்தரமான (First class) போட்டியில் கலந்துகொள் வோரின் சிலம்பக்கம்பின் நீளம் குறைந்த பட்சம் 5′ 6″ மும் கூடிய பட்சம் 5′ 8″ மும் இருக்கலாம். சிலம்பக் கம்பின் பருமன் (விட்டம்) நுனி முனை முதல் கடை நுனிவரை கண்டிப்பாய் $1\frac{1}{8}$ அங்குலம் இருத்தல் வேண்டும்.

ஜூனியர் குழு பையன்களும் பெண்களும் போட்டிகளில் பொர வேண்டுமாயின், சிலம்பக்கம்பின் நீளமும், அதன் பருமனும் அவர்களின் உடல் வலிமைக்கும் வயதிற்கும், ஏற்ப, முறையே குறைக்கப்படவேண்டும். பருமனைப் பொருத்தமட்டில் $\frac{1}{2}$″ விட்ட முள்ள சன்னமான சிலம்பக்கழிதான் அங்கீகரிக்கப்படவேண்டும்.

போட்டியிடும் சிலம்ப மல்லர்களின் கம்புகள் இரண்டும், வெவ்வேறு வர்ணப்பூச்சுகள் பூசப்பட்டதாயிருக்கவேண்டுவது (Paints) அவசியம்.

சிலம்பப் போரில் சிலம்பக் கம்பின் இரு நுனிகளும் (முனைகள்) எதிரியைத்தொட (தாக்க) அனுமதிக்கப்படுவதால், கம்பின் இரு நுனிகளும் பிறிதொரு வர்ணப்பூச்சால் நுனியிலிருந்து 3 அங்குல

நீளத்திற்குப் பூசப்பட்டிருக்கவேண்டும். ஒட்டக்கூடிய ஒருவித பசையாலும் நுனிகள் (3'' நீளத்திற்கு) பூசப்படலாம்.

குறிப்பு: பசை தேய்க்கப்படுவதின் ஒரே நோக்கம் எதிரியின்மீது குறியிடுவதற்கேயாம்.

**விதி 3: பொரும் மல்லர்களின் எண்ணிக்கை.**

சமமான விளையாட்டுத் திறமையும் உடற்கட்டுமுள்ள இரு சிலம்ப மல்லர்கள்தான் சிலம்பப்போட்டியில் பங்குபெற அனுமதிக்கப்படவேண்டும்.

குறிப்பு: இரண்டுபேர் கொண்ட ஒரு கட்சிக்கும், இரண்டு பேர் பேர்கொண்ட வேறொரு கட்சிக்குமிடையே போட்டி நடத்துவதும் மரபு. அங்ஙனமாயின் ஒழுங்கானமுறையில் தீர்ப்பு செய்ய தேவையான நடுவர்களும் (Referees) போதிய அளவு ஆடுகளப்பரப்பும் அவசியம்.

**விதி 4. சிலம்பனின் உடை.**

போட்டியில் அணியவேண்டியவை: (i) முழு நீளக்கையுள்ள வட்டக் கழுத்து பனியன் (ii) இரு கால்களையும் முற்றிலும் மூடக்கூடிய உடலோடு ஒட்டும் பனியன் உடை (iii) கால்சட்டை (iv) துணிச்சப்பாத்து (Canvas Shoes)

குறிப்பு: சிலம்பம் பழகும் மாணவர்கள் அரைக்கால் சட்டையையும், கையில்லாப் பனியனையும், துணிச் சப்பாத்துகளையும் உபயோகிக்கலாம்.

**விதி 5: சிலம்பனின் பாதுகாப்பு உபகரணங்கள்.**

(i) தலைச்சீரா (Helmet)
(ii) முகமூடி (Face Protector)
(iii) நெஞ்சு உரை (Protective Jacket for Chest or Chest Guard.
(iv) வயிற்று உறை (Abdominal Guard)

இவைகளோடு நவீன காலத்தில் ஏனைய விளையாட்டுகளில் உபயோகிக்கப்படும் பாதுகாப்பு உபகாரணங்களையும் (Protective Gear) விளையாட்டு வீரர்கள் போட்டியில் பாதுகாப்பிற்காக உபயோகிக்க அனுமதிக்கப்படுகிறார்கள்.

**விதி-6 போட்டி நடத்த வேண்டிய கால வரை.**

முதல் தரமான சிலம்பப் போட்டியில் (First class match) கால வரை குறைந்தபட்சம் ஆறு நிமிடங்களும் கூடிய பட்சம் பத்து நிமிடங்களும் கொடுக்கப்பட வேண்டும். போட்டிக்குக் கொடுக்கப் படும் மொத்தக் கால வரை, கால் பங்குகளுள்ள நான்கு கால வரை களாகப் பிரிக்கப்பட்டு, அக்கால வரைகளுக்கு இடையே ஓய்வு நேர மும் கொடுக்கப்பட வேண்டும்.

ஜூனியர் குழுவைச் சேர்ந்த பையன்கள் அல்லது பெண் பிள்ளைகளுக் குறிய போட்டியின் போது கால வரையை ஆறு நிமிடங்களுக்கு மேல் அதிகமாக்கக் கூடாது.

ஆனால் எந்தக் குழுவினருக்குப் போட்டி நடத்தினாலும், முதலாம், மூன்ரும் கால் கால வரைக்குப் பின் ஒரு நிமிட இடைவெளி நேரம் (Interval) கட்டாயமாகக் கொடுக்கப்பட வேண்டும்.

இரண்டாம் கால் கால வரைக்குப் பின் பாதி நேர இடைவெளி நேரமாக (Half time interval) மூன்று நிமிடங்கள் கண்டிப்பாய் கொடுக்கப் பட வேண்டும்.

பாதி நேர இடைவெளி காலத்தை பொதுவாக மூன்று நிமிடங் களுக்கு மேல் அதிகரிக்கக் கூடாது. ஆனால் போட்டியிடும் இரு மல்லர்களும் சுமுகமான முறைப்படி நடுவரிடம் (Referee) பாதிநேர இடைவெளி காலத்தை அதிகரிக்க விண்ணப்பித்தால், நடுவர் பாதி நேர இடைவெளி காலத்தை மேலும் முப்பது செக்கண்டுகள் (விநாடிகள்) அதிகரிக்கலாம்.

சீதோஷ்ண நிலை காரணமாகவோ, அல்லது வேறு எந்தக் காரணத்தாலோ, விளையாட்டுப் போட்டி தடைப்படுமானல், தலைமை நடுவர் போட்டி கடிகாரத்தை நிறுத்துமாறு ஆணையிட வேண்டும். தடைகள் நீக்கப்பட்டவுடன் தலைமை நடுவர் மறுபடியும் போட்டியைத் தொடர்ந்து நடத்த நேரம் கணிப்பவருக்கு செய்கை மூலம் அறிவிக்க வேண்டும்.

**விதி-7 நடுவர்கள் (Referees)**

சிலம்பப் போட்டியை நல் முறையில் நடத்தவும், தீர்ப்புக் கூறவும் ஐந்து நடுவர்கள் தேவை. நான்கு நடுவர்களும், ஒரு தலைமை நடுவரும் (Chief Referee) போட்டியைத் திறம்படக் கணிக்கலாம். குறிப்பிட்ட இருநடுவர்கள் குறிப்பிட்ட ஒரு சிலம்பன் மேல் கொடுக்கப்படும் தொடுதல்களையும், அடிகளையும், அவனது

விதி மீறும் செயல்களையும் கணித்துத் தீர்ப்புக் கூறுவர். வேறு இரு நடுவர்கள் அடுத்த சிலம்பனின் மேல் கொடுக்கப்படும் தொடு தல்களையும், அடிகளையும், அவனது விதி மீறும் செயல்களையும் கணித்துத் தீர்ப்புக் கூறுவர்.

குறிக்கப்பட்ட இரு நடுவர்கள் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட ஒரு போட்டியாளரின் முன்னும் பின்னுமாக சற்று விலகி நின்று அவனது திறமையைக் கணிப்பர்

தலைமை நடுவரோவெனில், போட்டிக்கு இடையூராக இல்லாத வாறு. இருமல்லர்களின் மத்தியில் சற்று விலகி நின்று அவவிருவர் மீதும் தனது தீர்ப்பைச் செய்வார். பிற நான்கு நடுவர்களின் திர்ப்பைத் தலைமை நடுவர் ஏற்கலாம். அல்லது அதை மறுக்கலாம். ஆனல் பொதுவாக சந்தேகமான சில கட்டங்களில் தலைமை நடுவர், பிற நடுவர்களின் தீர்ப்பைக் கேட்டு அவர்களோடு கலந்து தீர்ப்புக் கூற வேண்டும்.

### தலைமை நடுவரின் வேலைகள் (Duties)

1 சிலம்பப் போட்டியை விதிப்படி ஆரம்பித்தல்

2 சிலம்பப் போட்டியை விதிப்படி இறுதியில் நிறுத்துதல்

3 சிலம்பப் போட்டியை விதிக்கிணங்க தற்காலிகமாகத் தடை செய்தல்.

4 தற்காலிகமாகத் தடை செய்த போட்டியை விதிப்படி மறுபடியும் தொடர்ந்து ஆரம்பித்தல்

5 பிற நான்கு நடுவர்களின் ஒத்துழைத்தலோடு சிலம்பப் போட்டியை விதிப்படி கணித்தல்.

### எண்கள் வரைநரின் வேலைகள் (Scorer's duties)

சிலம்பப் போட்டியின் போது, பொருவோர்களின் மீது நடுவரால் வழங்கப்படும் வெற்றி எண்களையும், அன்னூர்களின் மீது அமத்தப்படும் தண்டனைகளையும் முறையே குறிப்பு எண் காகித்தத்தில் (Score Sheet) எழுத எண்கள் வரைநர் ஒருவர் நியமிக்கப்படவேண்டுவது மிக அவசியம்.

**விதி 8 மல்லர்கள் விளையாட்டு அரங்கினுள் இறங்கும் முறை (செயல்)**

குறிப்பு: சிலம்புகளை வீசிக்கொண்டு சிலம்ப மல்லர்கள் விளையாட்டு அரங்கினுள் செல்லும் காட்சி எழில் மிகும் காட்சியாம்.

இரு போட்டியாளர்களும் பொதுவாக தங்கள் தங்களது ஆசான்கள் அல்லது குருக்களோடு சேர்ந்து நன்கு வர்ணம் பூசப்பட்ட எழில்மிகு சிலம்பக் கம்புகளை அழகுபடச் சுழற்றிக் கொண்டும் நயம்படக் காலடி வைத்துக்கொண்டும் விளையாட்டரங்கத்தை ஒரு முறை அல்லது இரு முறைகள் சுற்றிவருவர். பின்பு, அவர்கள் குறிக்கப்பட்ட ஆடுகளத்தினுள் சென்று சிலம்பக் கம்பால் கடவுளுக்கும், குருவிற்கும், பிறகு பிறருக்கும், மரியாதை செய்து பின் எதிரிக்கும், வணக்கம்செய்து போட்டிக்குத் தயாராக நிற்பர்.

'எதிரிக்கு மரியாதை செய்தல்' என்பது ஓர் கட்டாய மரபாகும்.

**விதி 9: போட்டி ஆரம்பித்தலின் ஒழுங்கு.**

'எதிரிக்கு மரியாதை செய்தல்' என்ற கட்டாய சடங்கு முடிந்ததும், பின்வருமாறு போட்டி ஆரம்பமாகும்.

தலைமை நடுவர், போட்டியில் பொர தயாராக இருக்கும் மல்லர்களின் மத்தியில் நீட்டியிருக்கும் தனது சிலம்பக்கம்பை உயரத்தூக்கி செய்கைகாட்டி, "பொருக" என்ற வாய்சொல்லை உரக்கச்சொல்லியதும் போட்டி ஆரம்பமாகும்.

போட்டி ஆரம்பமாகும் சமயம், ஏனைய நான்கு நடுவர்களும், தங்களுக்குக் குறிக்கப்பட்டிருக்கும் போட்டியாளனின் திறமையைக் கணிப்பதற்காக தகுந்த இடங்களைத் தெரிந்துகொள்ளவேண்டும்.

**விதி 10: தாக்கப்படும் உடம்பின் இலக்குகள்.**

கண்கள், வாய், மூக்கு, குறி, இவைகளைத்தவிர ஒருவனின் ஏனைய உடம்பின்முன் இலக்குகள் (தலைமுதல் பாதம்வரை) தாக்கப்படலாம். பிடறி (பின் தலை)யைத்தவிர எதிரியின் உடம்பின் பின் பாகத்திலுள்ள இலக்குகளும் தாக்கப்படலாம்.

சிலம்பத்தில் "தொடுதல" என்றுல் சிலம்பக் கம்பின் ஏதாவது ஒரு முனை எதிரியின் இலக்குகளை வெட்டுதலாலும், குத்துதலாலும் அடித்தலாலும், தொடுதலாலும் சேர்வதாகும்.

**விதி 11 விதியை மீறுதலும், நல் நடக்கையின்மையும்: தண்டனை வழங்குதலும்**

வேண்டுமென்று எதிரியை முரட்டுத்தனமாகவோ அல்லது விதிகளுக்கு முரண்பாடாகவோ தாக்கி, எதிரி காயப்படுமாறு செய்தால் தாக்கியவரை ஆடுகளத்திலிருந்து, வெளியேற்றவோ அல்லது அன்னாருக்கு எண் ஒன்றைக் குறைக்கவோ தலைமை நடுவருக்கு அதிகாரம் உண்டு.

போட்டியாளர் ஒருவரை அரங்கிலிருந்து வெளியேற்றம் செய்யவேண்டிய நிலை ஏற்படின், தலைமை நடுவர் பிற நடுவர்களையும் கலந்து ஆலோசித்தல் வேண்டும். தகாதவிதமாக எதிரியைத் தாக்கியவருக்கு ஒரு எண் குறைக்கப்பட்டு ஆடுகளத்தில் அவர் அனுமதிக்கப்பட்டால் அன்னாருக்கு ஓர் "இறுதி எச்சரிப்பை'' தலைமை நடுவர் திட்டமாக வழங்கவேண்டும்.

ஆனால் ஒரு போட்டியாளர் விலக்கப்பட்ட இலக்குகளான கண்கள், வாய், மூக்கு, கழுத்து, மார்புக்கூட்டின் நடுப்புறம் (Solar Plex) குறி முதலானவைகளில் ஏதாவது ஒன்றின்மேல் தாக்குவதாயிருந்தால், தலைமை நடுவர் அன்னாரை உடனே ஆடுகளத்திலிருந்து, வெளியே அனுப்பவேண்டும்.

தலைமை நடுவர் போட்டியை ஆரம்பிப்பதற்கு முன்னே, அல்லது நடுவர் இறுதி விசில் ஊதியபின்னே, போட்டியாளர் எதிரியைத் தாக்குதலும் அல்லது தாக்குவதற்கு ஆரம்பமாக சில முறைகளைக் கையாளுதலும் கண்யமான நடத்தைக்கு முரண்பாடானது.

இது 'கண்யமற்ற செயல்' என்று கணிக்கப்படுவதால் இது விதியை மீறும் சம்பவமாகும். இம் மீறுதலுக்காக மீறியவருக்கு ஒரு எண் குறைக்கப்பட்டு, 'கண்யமற்ற செயல்' என்ற பிரிவின் கீழ் வரைநரால் (Scorer) பதிவு செய்யப்படவேண்டும். விதியை மீறியவர் எச்சரிப்பையும் (Warning) பெறவேண்டும்.

நடுவரின் அல்லது நடுவர்களின் தீர்ப்பை எதிர்த்து ஒரு போட்டியாளர் மோசமாகப்பேசினாலும், முரட்டுத்தனமாக விளையாட்டில் நடந்துகொண்டாலும், கெட்ட வார்த்தைகள் பேசினாலும், அல்லது மற்றவர்களை ஏளனமாகப் பேசினாலும், அன்னார் விளையாட்டு அரங்கத்திலிருந்து உடனே வெளியேற்றப்படவேண்டும்.

விதி 12 போட்டியில் வெற்றி எண்களை வழங்கும் முறை.

பொதுவாக போட்டியாளர்கள் தங்கள் எதிரியின் குறிக்கப் பட்ட இலக்குகளில் கம்பைத் தீண்டி (தொட்டு) அதனுல் அவர்கள் பெற்ற மொத்த எண்களைக் கணக்கிட்டபின், எப்போட்டியாளன் தன் எதிரியைவிட அதிகம் எண்களைக் குறிப்பிட்ட காலவரைக்குள் பெற்றதாகக் கணிக்கப்படுவரோ, அவரே போட்டியில் வெற்றி பெற்றவராவார்.

இலக்குகளில் கம்பின் நுனிப்பாகம் தொடுவதைத் திட்டம் பண்ண கம்பின் நுனிகளில் வர்ணப்பசைகள் தடவுதல் மரபு. வர்ணப்பசை எதிரியின் உடையிலோ, அன்னுரின் உடலிலோ 'குறி'யிடும்.

உடம்பின் முன் பாகங்களில் (விலக்கப்பட்ட பாகங்கள் தவிர) கம்பு தொடப்பட்டால், ஒவ்வொரு தொடுதலுக்கும், ஒவ்வொரு எண் வழங்கப்படும். உடம்பின் பின் பாகங்களில் (விலக்க்ப்பட்ட பாகங்கள் தவிர) கம்பு தொடப்பட்டால், ஒவ்வொரு தொடுதலுக்கும் இரண்டு இரண்டு எண்கள் வழங்கப்படவேண்டும்.

விதி 13 வென்றவனைக் கணித்தல்

உடம்பின் இலக்குகளில் விதிப்படி தொடுதல் செய்து அதிக எண்கள் பெற்று, போட்டியின் கால இறுதிவரை தன் சிலம்பக் கம்பையும் பாதுகாத்து வைத்திருக்கும் போட்டியாளர் வெற்றி பெற்றவராவர்.

உடம்பின் முன்புறத்திலுள்ள வரையறுக்கப்பட்ட இலக்கு களில் அல்லது உடம்பின் பினபுறத்திலுள்ள வரையறுக்கப்பட்ட இலக்குகளில் சிலம்பக்கம்பின் நுனிகள் விதிப்படி தொடுதல் செய்தால் தாக்குபவனுக்கு முறையே ஒரு எண்ணும், இரண்டு எண்களும் வழங்கப்படவேண்டும.

போட்டியாளன் ஒருவன் தனது போட்டி விளையாட்டுக் காலவரை முடிவுபெறுமுன், ஓர் நொடிப்பொழுது தனது சிலம்பக் கம்பை எதிரியினிடம் பறிகொடுத்துவிட்டால், அவன் தனது போட்டியை இழந்தவனுவான். அவன் அதுவரை ஒருவேளை அதிக எண்கள் பெற்றிருந்தாலும், அவன் போட்டியில் தோற்றவனுவான்.

**குறிப்பு:** சிலம்பக்கம்பை எதிரியிடமிருந்து கைப்பற்ற ஒருவன் தந்திரமுள்ளவனாக இருத்தல் வேண்டும். ஒரு போட்டியாளன் கவனக்குறைவாக இருந்தால், அவன் தனது எதிரியிடம் சிலம்பைப் பறிகொடுக்க நேரிடும்.

**விதி 14:** போட்டி முற்றுப்பெறல்.

போட்டியின் குறிப்பிட்ட காலவரையின் முடிவில், காலம் கணிப்பவர் (Timer) இறுதி விசில் ஊதினதும் அதாவது விளையாட்டு முடிவு சப்தம் ஒலித்ததும் போட்டி முற்றுப்பெறும். அல்லது ஒருவனின் சிலம்பக்கம்பு எதிரியால் கைப்பற்றப்பட்டதை தலைமை நடுவர் அங்கீகரித்ததும் அல்லது ஒரு போட்டியாளர், போட்டியிலிருந்து தானாக விலகக்கோரியதைத் தலைமை நடுவர் ஒப்புக்கொண்டதும், அல்லது ஒரு போட்டியாளர் தான் தோற்றதாக ஒப்புக்கொண்டு, மேற்கொண்டு தொடர்ந்து இறுதிவரை விளையாட மறுத்ததை தலைமை நடுவர் ஒப்புக்கொண்டதும், போட்டி முற்றுப்பெறும். குறிக்கப்பட்ட காலவரை முடியும்போது, போட்டியாளர்கள் சம எண்கள் எடுத்திருந்தால் போட்டியில் இரு திறத்தாருக்கும் வெற்றிஇல்லைஎன்பதைக் கணிப்பர். அதாவது அது ஆங்கிலத்தில் (DRAW) எனக் கூறப்படும். அப்படியானால் ஒருவர் ஜெயிக்கும்வரை மூன்று நிமிட காலவரை கூட்டப்படலாம்.

**குறிப்பு:** காலம் கணிப்பவர் (Timer) போட்டி ஆரம்பித்த உடன் தனது கடிகாரத்தை இயக்குவர். நடுவர்கள் கடிகாரத்தை நிறுத்த சைகை காட்டும் அல்லது விசில் ஊதும் சமயங்களிலெல்லாம், காலம் கணிப்பவர் கடிகாரம் இயங்காதவாறு செய்வர். பிறகு போட்டி மறுபடியும் தொடர்ந்து நடக்க சைகை, அல்லது விசில் கொடுத்ததும் நிறுத்தப்பட்ட காலத்திலிருந்து மறுபடியும் கடிகாரம் தொடர்ந்து இயங்கச்செய்யவேண்டிய பொறுப்பு காலம் கணிப்போருக்கு உண்டு. போட்டியின் ஒவ்வொரு கால் காலவரை முடிவுபெறும்போதும், காலவரை கணிப்பவர் போட்டிக் கடிகாரத்தை இயங்காதவாறு செய்வார். விதி 6-ல் கொடுக்கப்பட்ட இடைவெளி நேரங்களை (Intervals) வழங்குவதும், இடைவெளி நேரங்கள் முடிவடையும்போது, விசில் ஊதி, இடைவெளிகால முடிவைக் காட்டுவதும் காலவரை கணிப்பவரின் வேலையாகும்.

சிலம்ப விளையாடலில் நன்நடக்கை அல்லது முன்மாதிரி

சிலம்பக் கம்பினுல் 'வணக்கம் செலுத்துதல்' என்ற முறை இன்றும் வழக்கத்தில் இருப்பதினுல், வணக்கம் (Salutation) அல்லது மரியாதை செய்தல் என்ற மரபு சிலம்பப்போட்டியில் அலங்கரிப்பாக அமைகிறது.

'வணங்குதல்' என்ற மரபு மனதில் கடவுளுக்கும், பிறகு தனது ஆசானுக்கும், எதிரிக்கும், நடுவர்களுக்கும், பார்வையாளருக்கும், போட்டியாளர் கொடுக்கும் மரியாதையைக் காட்டுகிறதாக அமைகிறது.

சிலம்பப் போட்டியில் கலந்துகொள்வோர், நடுவரின் தீர்ப்பை ஏற்காமலிருக்கக்கூடாது. அத்தீர்ப்பு அந்த சூழ்நிலையில் இப்படித் தான் இருந்திருக்கவேண்டும் என்று விவாதிக்கவும், தீர்ப்புச் சொல்லவும் இடமில்லை.

அத்தீர்ப்பை நடுவர்கள்தான் வழங்க உரிமையுடையவர்களாவர். ஆனுல் தங்களுக்குச் சந்தேகமான சில தீர்ப்பை சுமுகமான முறையில் நடுவரிடம் வினவித் தெரிந்துகொள்ளலாம்.

அல்லது 'தங்களது தீர்ப்பை நான் ஒப்புக்கொள்ளவில்லை' 'ஆனுல் நான் தொடர்ந்து போட்டியில் கலந்துகொள்ளுகிறேன்' எனத் தலைமை நடுவரிடம் சுமுகமானமுறையில் கண்யமாகக்கூறி, காலவரை முடிவுபெறும் வரை தொடர்ந்து விளையாடவேண்டும். பிறகு எழுத்துமூலம் விண்ணப்பிக்கவும் வேண்டும். அப்படியானுல் விளையாட்டுப்போட்டி முற்றுப்பெற்றதும், தலைமை நடுவரும், மற்ற நடுவர்களும் கலந்து ஆலோசித்துப் பழையபடி அவர்களது தீர்ப்பை வழங்குவர். அவர்கள் இங்ஙனம் கலந்து இறுதியில் எழுத்தின்மூலம் கொடுக்கும் தீர்ப்பு முடிவானது.

சிலம்ப விளையாட்டு இருவர் பொரும் போட்டிகளில் மிகச் சிறந்ததெனக் கொள்ளலாம். இவ்விளையாட்டில் பங்கு பெறுதலே ஓர் சிறந்த செயலாகும்.

சமயோசிதபுத்தி, கண் - கை ஒத்துழைப்பு, துரிதம், மணிக் கட்டின் சுழற்சித் திறமை, காலடி வரிசையின் திறமை, உடலை நாலுபுறமும் சுழற்றும் அல்லது துள்ளவைக்கும் திறமை முதலிய நல்ல திறமைகளை இக்கலை அபரிமிதமாக ஊட்டுகிறது.

மேலும் இக்கலை பயிலுபவன், பொறுமை, சாந்தம், பிறரை மதித்தல், மற்றவர்களிடம் நன்முறையில் பழகும் தன்மை, இவைகளைப்போன்ற நற்பண்புகளை வளர்த்துக்கொள்வான்.

சுருங்கக்கூறின், இச் சிலம்பக்கலையானது, சிலம்பனின் சிலம்பக் கம்பு சுழற்சித் திறனையும், அவனின் மனிதத்தன்மையையும், பண்பாட்டையும் மலரவைக்கிறது.

ஆனால் சிலம்பப்போட்டியின்போது, சிற்சில சமயங்களில் போட்டியாளர்களின் கோபம் பரீட்சிக்கப்படலாம். அல்லது ஒருவனுக்கு சில சம்பவங்கள் கோபத்தைத் தூண்டலாம். ஆனாலும் அச்சம்பவங்களின்போது கோபத்தைத் தணிக்கப் பழகிக் கொள்ளுதல் மிகவும் போற்றற்குரியதாம். விளையாட்டுத் திறமையும், பண்பும் உள்ளவனே போட்டியில் வென்றவனாவான். "விளையாட்டு விளையாடுவதற்கே" என்ற சிறந்த நோக்கத்தோடு போட்டியில் பங்குபெறும்போது, இந்தச் சிலம்பக்கலை 'அபாயகரமான விளையாட்டு' என்று நினைக்கக்கூட இடமில்லை.

## SILAMBAM MOTTO

"Exhibit character and skill in a Silambam Bout"

"When the Great Scorer Comes
To write against your name
He writes not, that you won or lost
But how you played the Game"

Great is to Triumph
Greater far noble Combat

# அத்தியாயம் 6

## வீர சிலம்பக் கலையின் நுட்பமும், உடற்கல்வி மேதைகள் கணித்த மதிப்பீடும்

**உலகில் சிலம்பக்கலை**

"யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்" என்றார் புரட்சிக்கவி பாரதியார். இதற்கிணங்க,

"யாமறிந்த கலைகளிலே சிலம்பக்கலை போல்
இனிதாவது எங்கும் காணோம்" என்று பறைசாற்றி,

"தே மதுரச் சிலம்போசை உலகமெலாம்
பரவும்வகை செய்தல் வேண்டும்" எனக் கங்கணம் கட்ட வேண்டிய நிலையில் தமிழர்களாகிய நாம் இருக்கிறோம்.

"இறவாத புகழுடைய புது நூல்கள்
தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமை இல்லை
திறமான புலமையெயின் வெளிநாட்டோர்
அதை வணக்கஞ் செய்தல் வேண்டும்"

என்ற கவிமணி பாரதியாரின் பாடலை நாம் நினைவில் கொண்டு நமது தமிழ் கலைகளை உலகிற்குக் கொடுக்க வேண்டாமா?

வருகின்ற பாரதத்தைக் கற்பனைக் கண்கொண்டு பார்த்த நமது தேசியக் கவி பாரதியார் பின் வருமாறு வீரக்கவிதை புனைந்துள்ளார்.

ஒளி படைத்த கண்ணினாய் வா வா வா
உறுதி கொண்ட நெஞ்சினாய் வா வா வா
களி படைத்த மொழியினாய் வா வா வா
கடுமை கொண்ட தோளினாய் வா வா வா
தெளிவு பெற்ற மதியினாய் வா வா வா
சிறுமை கண்டு பொங்குவாய் வா வா வா
எளிமை கண்டு இரங்குவாய் வா வா வா
ஏறு போல் நடையினாய் வா வா வா

இவ்வண்ணம் ஒளி படைத்த கண்களையும், உறுதி கொண்ட அஞ்சா நெஞ்சத்தையும், தினவு எடுக்கும் மார்புகளையும், பளிங்கு போல் தெளிவுபெற்ற அறிவாற்றலையும், கொண்ட நெஞ்சில் இரக்கமுள்ள, ஆனாலும் ஏறு நடை போடும் ஆண்மைமிக்க இளங் காளையர்களும், கன்னிகைகளும் நமது நாட்டிற்கு—ஏன்? இவ் உலகிற்கே தேவை!

இத்தகைய நற்பண்புள்ள இளஞ் சிங்கங்களை உருவாக்கும் உலைக்களங்களான பலவித விளையாட்டு அரங்கங்களும், சிலம்பக் கூடங்களும் நம் நாட்டில் பல திக்குகளிலும் மலரவேண்டும். ஒப்பற்ற வீரம்படைத்த ஆசான்களும், பண்புமிகு வீரப்பரம்பரை களும் ஈசலென எழ வேண்டும்.

சிலம்பக்கலையின் மறுமலர்ச்சி:

'கிரிக்கெற்', 'உதைபந்து', 'ரக்பி', என்ற விளையாட்டுகளை உருவாக்கிய பெருமை இங்கிலாந்து தேசத்துக் குறியது. 'கூடைப்பந்து 'கைப்பந்து' 'பேஸ்பால்' ஆகிய விளையாட்டுகளைத் தோற்றுவித்த சிறப்பு அமெரிக்காவுக்கு உண்டு. ஜப்பானிய நாடு, ஜூடோ என்ற மற்போர் விளையாட்டின் விருத்தியைப் பற்றிப் பெருமை கொள்ளத்தான் செய்கிறது. நாகரிகத்தின் இருப்பிடமான கிரேக்க நாடு ஒலிம்பிக் விளையாட்டுகளின் தோற்றுவாய் எனப் புகழப்படுகிறது.

கிரேக்க நாடு நாகரிகத்தில் வளருமுன், உலக நாகரிகத் தின் சிகரமெனப் புகழப்பட்ட நமது தமிழ் நாட்டில், 'கல் தோன்றி மண் தோன்ரு காலத்திலிருந்து' பரம்பரை பரம்பரையாக வீரச் சிலம்பக்கலை உயிரினும் பெரிதாகப் பேணப்பட்டு வளர்க்கப் பட்டதென யூகிக்க வழியுண்டு. இந்நூலாசிரியரால் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்ட "Silambam: Technique & Evaluation" என்ற சிலம்பக்கலையின் அடிப்படை நுட்பங்களைக் கொண்ட நூலின் மூலம், பாரதநாட்டிலும், உலக நாடுகளிலும் இவ்விளையாட்டுக் கலை அறிமுகப் படுத்தப்பட்டிருக்கிறது. வெகு காலம் இக்கலை பின்னணிக்கு ஒதுக்கப்பட்டிருந்த போதிலும், வெகு விரைவில் இது தன் புகழை எய்யும் என நம்பப்படுகிறது. தற்போது தமிழகத்தில் சிலசிலம்பக் கூடங்களை இந்நூலாசிரியர் அரங்கேற்றி யும், அரங்கேற்றங்களை ஊக்குவித்தும், அரங்கேற்றங்களுக்குத் தலைமை தாங்கியும், சிலம்ப வீரர்களையும், ஆசான்களையும் ஊக்கு வித்தும், சிலம்பக்கலை பற்றிப் பேசியும் வருகிருர். மேற்படி நிகழ்ச்சிகள் மதுரை, திருநெல்வேலி பேட்டை, வல்லநாடு

தூத்துக்குடி, காரைக்குடி முதலிய இடங்களில் நடந்தது. இது போல் நாம் ஒவ்வொருவரும், வெற்றிச் சங்கை முழக்கி இக்கலையை உலகிற்கு அறிவிக்காமலிருக்கலாமா?

**சிலம்ப வித்தையின் தனிச் சிறப்பும், அக்கலையின் மூன்று அம்சங்களும் :**

சிலம்பக்கலை, வீரர்களாலும், தமிழ் அரசர்களாலும் அதிகமாக ஊக்குவிக்கப்பட்ட காலத்தில், இவ்வித்தையின் நுட்பங்களும், விஞ்ஞான ரீதியில் கணிக்கப்பட்டு, பார்வையாளர்களின் கவர்ச்சியை ஈர்த்து, அவர்களை மயிர்க்கூச்செரிய வைத்த, வீரக் கலையாகத் திகழ்ந்தது.

நவீன வாள் சண்டையைவிட (Sword fencing) தாக்குதலிலும், தற்காப்பிலும், பரந்த இடவியாப்தியை (Range) உடையது சிலம்பக் கலையாகும். மற்ற வீச்சு விளையாட்டுகளை இதோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது உலகிலேயே இச்சிலம்ப வீச்சு ஒன்றுதான் தற்காப்புக்கலைகளில் (Defensive arts) மிக முக்கிய அம்சம் பெறுகிறது.

தமிழ் இலக்கியம் தந்த குறிப்புக்களிலிருந்தும், பரந்த ஆராய்ச்சிகளிலிருந்தும் புலனுவது யாதெனில் சிலம்பக்கலை, போர் உணர்ச்சி ஊட்டும் யுத்தவிளையாட்டாக மட்டும் கணிக்கப்படாதபடி, ஒருவனது தற்காப்பு வினையாகவும், அவனது ஆரோக்கிய வாழ்விற்கு அடிகோலும் உடற்பயிற்சி விளையாட்டாகவும் மிளிர்கிறது என்ருல் அது மிகையாகாது. மேலும் இக்கலை ஒருவனை நற்பண்புள்ளவனுக மாற்றும் 'பொழுதுபோக்கு விளையாட்டாகவும்' அதாவது ஒருவனுக்குப் புத்துணர்ச்சியைத் தூண்டக் கூடிய 'கேளிக்கை விளையாட்டாகவும்' (திருவிழாக் காலங்களிலும், அரங்கேற்றச் சமயங்களிலும்) அமைகிறது. இக்கலை மேற் கூறியவாறு இம்மூன்று அம்சங்களையும் பெற்றிருக்கிறது.

**இன்றைய தேசிய ஆபத்து நிலையும், வீர உணர்ச்சியின் தேவையும்**

1966-ஆம் ஆண்டு மே திங்களில் வெளியான Physical Educator (Vol. 23 No. 2) என்னும் பத்திரிகையில் லாரன்ஸ் ஷியா ஷெட்டானே என்பவர் "பையன்களுக்குக் குஸ்தி (மல்லுக்கட்டுதல்) தேவை" என்றும் நமது குடியரசின் பலம் அல்லது சக்தி, நமது வருங்காலத் தலைவர்களின் கையிலே

உள்ளது என்றும், அது தேசம் ஆபத்தான சூழ்நிலையில் இருக்கும்போது, அவர்கள் செய்யும் தீர்மானத்தையும், காட்டும் தீரத்தையும் பொறுத்திருக்கிறது என்றும், மல்லுக்கட்டுதல், நமது பின் சந்ததியாருக்கு நாம் தாராள மனப்பான்மையுடன் பின் வைத்துப்போகும் பரம்பரைச் சொத்து என்றும், அவர்களை அதற்குத் தகுதியுள்ளவர்களாகச் செய்வதற்கு நாம் எல்லா முயற்சிகளையும் செய்யவேண்டுமென்றும் கூறுகிருர்.

வாழ்க்கையில் தற்காப்புக்கு ஏற்படும் எந்த ஆபத்தான நிலையையும் சமாளிப்பதற்கேற்ற போதிய தகுதியான உடல் நிலையை நம்முடைய பின் சந்ததியாருக்கு அளிப்பதற்காக, நமது உயர்நிலைப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் உள்ள மாணவ சமுதாயத்தினர்களுக்கு சிலம்பம் உள்பட எல்லா தற்பாதுகாப்புச் செயல்களிலும், போர் வினை நுட்பங்களிலும் உள்ள அடிப்படைத் தத்துவங்களில் போதனைகள் கொடுக்கப்படவேண்டுவது சாலவும் நன்று.

மாணவர்களின் தலையாய வீர உணர்ச்சி

பள்ளி வயதில் வீர உணர்ச்சி தலைதூக்கி நிற்பதாலும், சிலம்பம், குஸ்தி, காரத்தி முதலிய விளையாட்டுகள் மூலம் தற்பாது காப்புக் கலையைப் ((Self-defence activities) பயில, மாணவர் ஆர்வமும், ஆத்திரமும் உடையவர்களாயிருப்பர்.

ஆகவே மாணவர் பலம், திறமை, உடல் உறுதி, தீரம், சமயோசித உபாயங்கள், சமயோசிதபுத்தி, முதலியவற்றை விருத்தி செய்யும் நோக்கத்துடன் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் உள்ள உடற்பயிற்சிப் பாடத்திட்டங்களில் இவ்விளையாட்டுகள் முக்கிய இடம் பெறச்செய்தல் கல்வி நிபுணர்களின் கடமையாகும்.

வீர உணர்ச்சிக் கலைகளைப் பயிலுவதால் மாணவர்கள் பண்பட்ட உள்ளங்களைப் பெறுதல் திண்ணம்.

மாணவர்களுக்கு சரீர மனவளர்ச்சி

A Dynamic concept of Physical Education for Secondary Schools என்ற நூலில் "வீர உணர்ச்சி விளையாட்டுகள்" என்ற தலைப்பின்கீழ் பின்வரும் நல்ல கருத்துக் குவியல்கள் தொகுக்கப் பட்டுள்ளன.

புராதன கிரேக்கர்கள் வீர உணர்ச்சி விளையாட்டுகளை பலத்தை மட்டும் சோதிக்கும் விளையாட்டுகள் எனக் கருதாது, திறமை, வீரம், கட்டுப்பாடு, முதலிய நல் இயல்புகளை விருத்தி செய்யும் வழிகள் எனவே கருதினர். குத்துச்சண்டை (Boxing) மல்லுக்கட்டுதல் (Wrestling) போன்ற மற்போர்களின்மூலம் ஆக்ரமிப்பு திறமை, துரிதம் அல்லது தன்னைப் பாதுகாத்தல் முதலிய சரீர இயல்புகளும், சகிப்புத்தன்மை, ஆண்மை, தீரம், தன்னம்பிக்கை, சமயோசித புத்தி, எதிரியின் நோக்கை முன் அறிதல் முதலிய மன இயல்புகளும் உருவாக்கப்படுகின்றன என்பதை ஒருவரும் மறுக்கமுடியாது.

எனவே மேற்கூறிய நல்ல சரீர, மன இயல்புகளை பள்ளிச் சிறுர்களும், கல்லூரி மாணவர்களும் தங்களது சரீரத்திலும், இதயங்களிலும், படைக்கப்பெற வேண்டுமாயின் வீர உணர்ச்சிப் பால் ஊட்டும் சிலம்பம், குத்துச்சண்டை, மல்யுத்தம், வாட் சண்டை, ஜூடோ, கராத்தி போன்ற கலைகள் எல்லாப் பள்ளி, கல்லூரி விளையாட்டுப் பாடத் திட்டங்களிலும் தகுதியான இடத் தைப் பெறவேண்டும்.

**விளையாட்டுத்துறை பாடத்திட்டத்தில் சிலம்பின் சேவை நோக்கு**

மேற்கூறிய உயரிய நோக்கம் கொண்டு பள்ளி, கல்லூரி செல்லும் இளங்காளையர்களுக்கு இக்கலையின் சிறப்பைக்காட்ட, இந்தியா முழுவதிலும் உடற்பயிற்சித் துறையில் டாக்டர் பட்டம் பெற்ற 12 உடற்பயிற்சி வல்லுனர்களை இந்நூலாசிரியர் அணுகினர். இந்திய பாடத்திட்டத்தில் இக்கலையின் அவசியத்தை அவர்கள் நன்கு வலியுறுத்தியிருப்பது நம் பாரதநாட்டு விளையாட் டுத்துறை சரித்திரத்தில் குறிப்பிடத்தகுந்த சம்பவமாகும். சிலம்பம் பற்றிய கருத்தறிவினத் தொடர்களின் பிரதிகள் உடற்பயிற்சிக் கல்வி வல்லுனர்களுக்கும், அதாவது உடற்பயிற்சிக் கல்வித் துறையில் டாக்டர் பட்டம்பெற்ற மேதைகளுக்கும், (அட்டவணை பார்க்க) உடற்பயிற்சிக் கல்லூரிகளில் பட்டப்படிப்பு அல்லது பட்டமேற்படிப்பு வகுப்புகள் நடத்தும் கல்லூரித் தலைவர்களுக்கும் (Principals) அனுப்பப்பட்டன. சிலம்பம் மக்களுக்கு அளிக்கும் பயனை (பங்கை) இவ்வல்லுனர்கள் பெரிதும் பாராட்டியுள்ளனர்.

உடற்பயிற்சித் துறையில் சிலம்பம் அளிக்கும் பயனைப் பற்றி டாக்டர் பட்டம் பெற்ற உடற்பயிற்சிக் கல்வி நிபுணர்களின் ஆராய்ச்சியின் முடிவு பின்வருமாறு.

**பயன்கள், நிறைவேறல்-தாரதம்ய மதிப்பீடு.**

கீழ்க்காணும் படம் 78 நிபுணர்களின் ஆராய்ச்சியை விளக்குகிறதாயிருக்கிறது.




படம் 78 பயன்கள் நிறைவேறல்-தாரதம்ய மதிப்பீடு.

நிபுணர்களின் அபிப்பிராயப்படி, சிலம்ப விளையாட்டின் ஒவ்வொரு அம்சமும் 5 பங்கு பயன்கள் உடையதெனக் கொண்டால், உடல்வளர்ச்சி (Physical) பயன் மட்டுமே 4. 2 பங்கு பயன்கள் பெற்று முதலிடத்தைப் பெறுகிறதைக் காணலாம். பொழுதுபோக்குப் பயன் (Recreational outcome), பாதுகாப்புப்

பயன் (Self-defence outcome) இவை ஒவ்வொன்றும், 5-பங்கில் 2. 9 பங்குகள் பெற்று இரண்டாம் இடத்தைப் பெறுகின்றன.

திரைப்பட நடிகர்களான திரு எம். ஜி. ராமச்சந்திரனும், திரு சிவாஜி கணேசனும், திரு ஜெமினி கணேசனும், ஜெய் சங்கரும், திரைப்படமாகப் பிடிக்கப்பட்ட சிலம்பப்போர்கள் ரசிகர்களுக்கு ஓர் சிறத்த பொழுது போக்காக அமைகிறது எனத் தெரிந் துள்ளார்கள். உடற்பயிற்சிக் கல்வி மேதைகளின் ஆராய்ச்சியின் முடிவும் இதை ஒத்திருப்பது குறிப்பிடத்தக்கது. தற்பாதுகாப்பு விளையும் 2. 9 பங்கு பயனைப்பெற்று இக்கலையின் தரத்தை உயர்த்துகிறது. மன அபிவிருத்தி பயன் 5-இல், 2. 4 பங்குகள் பெறுகிறது. "நல்ல உடம்பில் தல்ல அறிவுத்திறன்" என்ற முதுமொழி இங்கு உண்மையென நிரூபிக்கப் பட்டுள்ளது காண்க. இவ்விளையாட்டில், சமூகப் பண்பின் மதிப்பு 3. 6 சதவீத மெனக் கணிக்கப்பட்டுள்ளது. என்னே இக்கலையின் பயன்!

**இயக்கும் தசைகளின் செயல்களுக்குச் சிலம்பம் அளிக்கும் நன்மைகள்—தாரதம்ய மதிப்பீடு.**

படம்–79 சிலம்பம் தசைகளுக்கும், உடல் உறுப்புகளுக்கும் அளிக்கும் பயனை நன்கு வெளிப்படுத்துகிறது.

இயக்கு தசை செயல்களில், கை–கண் (Hand-eye Co-ordination) இவற்றின் கிரமமான இணைப்பு 4. 5 மதிப்பைப் பெற்று சிலம்ப விளையாட்டின் சிறப்பைப் பன் மடங்கு அதிகரிக்கிறது. பாதம்–கண், இவற்றின் கிரமமான இணைப்பு (Foot–eye Co-ordination) 3. 7 பங்குகளைப் பெறுவதால், இவ்விளையாட்டு, கண், கால்கள் இவைகளின் ஒன்றுபட்ட ஒத்துழைப்பின் திறமையை வளர்க்கிறதென்பதைக் கணிக்கிறது. உடல் உறுப்புக்களை அசைத்து இயக்குவதில் சுறுசுறுப்புத்தன்மை (Agility) 4. 1 பங்கைப் பெற்று இக்கலையின் மதிப்பை நன்கு உறுதிப் படுத்துகிறது.

தேகத்தை சமநிலையில் வைத்துக்கொள்ளும் தன்மை (Balance), தசைகளின் சக்தி (Energy), துரிதம் (Speed), தசைகளின் சகிப்புத்திறன் (Endurance), தசைபலம் (Strength) இரத்த ஓட்டத்திறன் (Circulo endurance) இவை முறையே 3. 3, 3. 2, 3, 2, 2, 9, 2, 6, 2, 9 என்ற மதிப்பீடுகளைப் பெறுகின்றன. இப் பயன்களைப் பெற்று அனுபவிக்க, இளஞ்சிருர்கள் முன்வர வேண்டும்.




படம் 79 இயங்கு தசைகளின் வளர்ச்சி விபரம் ஒப்பிடப்படல்.

**பல்வேறு மக்கள் சிலம்பக் கலையில் காட்டும் ஆர்வத்தின் தாரதம்யம்**

கல்விச் சாலைகளை விட்டு வெளியேறின இளைஞர்கள் (பையன்கள்), கிராம மக்கள், உயர்நிலைப்பள்ளி மாணவர், விவசாயிகள், கல்லூரி மாணவர் இவர்கள் யாவரும் இக்கலையில் மிக ஆர்வமுள்ளவர்களாக இருக்கின்றனர். அன்னாரின் ஆர்வங்களை, 3.8, 3.7, 3.5, 3.1, 3 என்ற விகித உயரமுள்ள கருத்த நீண்ட சதுரங்கள் (படம் 80-ல்) தெளிவாகக் காட்டுகின்றன.




படம் 80 பல்வேறு மக்களின் ஆர்வத்தின் தாரதம்யம் -ஒப்பிடப்படல்.

தொழிற்சாலையில் பணிபுரிவோர், நகர மக்கள், நடுநிலைப் பள்ளி மாணவர்கள், கல்லூரி மாணவியர், இன்னும் பலதிறப்பட்ட மக்கள் கூட்டங்களும், இக்கலையில் ஆர்வம் காட்டுகிறதை படம்-80 சித்தரிக்கிறது. இந்த ஆர்வம் மேலும் மேலும் தூண்டப்பட்டு இக்கலையின் பயனை எல்லா மக்களும் அனுபவிக்கப் பாடுபட வேண்டும்.

காவலர், போர்வீரர், பெண்கள், விளையாட்டில் ஆர்வமுள்ள வர்கள் இவர்களுக்கு சிலம்பம் அளிக்கும் நற்பயன்கள்.

படம் 81, மேற்கூறிய் குழுக்களுக்கு சிலம்பம் வழங்கும் பயன்களின் விகிதத்தைக் கணிக்கிறது. இராணுவத்திலுள்ள போர்வீரர்களுக்கும், காவலர்களுக்கும், போர் உணர்ச்சியையும், வீரத்தையும், ஊட்டும் தற்காப்புக் கலையாக சிலம்பம் அமைவதால், மேற்கூறிய குழுக்கள் இக்கலைக்கு முக்கியத்துவம் கொடுத்து அதை ஊன்றிக் கற்கவேண்டுமென்பது நிபுணர்களின் தீர்ப்பு.

விளையாட்டுகளில் திறன்பெற்ற மாணவர்கள், மேலும், தங்களது விளையாட்டுத்திறன்களைப் பெருக்கிக்கொள்ள இக்கலை யையும் பயிலுதல் நல்லதென்பது நிபுணர்களின் கூற்று.

பெண்களுக்குக்கூட, சிலம்பம் நல்ல தற்காப்பைக் கொடுக்கிற தென்று உடற்பயிற்சிக் கல்வி மேதைகள் கணித்திருப்பது பெண்களின் கவனத்தையும் கவர்வதாயிருக்கிறது.

தங்கள் பெண்குழந்தைகள் பிறரால் தாக்கப்படுவதினின்றும், நகைகளைப் பறிகொடுப்பதினின்றும், காப்பாற்றப்பட வேண்டிய அவசியத்தை, அமெரிக்க நாடு உட்பட பல நாடுகள் உணர ஆரம்பித்ததுமட்டுமில்லாது, கல்லூரியில் படிக்கும் பெண்களுக்குத் தற்காப்புக் கலைகள் பாடமாகச் சொல்லிக் கொடுக்கப்பட்டும் வருகின்றன.

## தமிழகத்திலிருந்து வெளிஉலகு சென்ற சிலம்பக் கலையின் மறுமலர்ச்சி

### இலங்கை-யாழ்ப்பாணம்

இலங்கையிலுள்ள யாழ்ப்பாணத்தில் சிலம்பம் மிக பிரபல்ய மடைந்துள்ளது. இலங்கையில் குடியேறிய தமிழ் நாட்டுச் சிலம்ப வீரர்களால் தான் இக்கலை அங்கு பரப்பப்பட்டுள்ள தென்பது சிலம்ப வல்லுனர்களின் கருத்து. யாழ்ப்பாணத்தில் இக்கலை முக்கியமாகத் தற்காப்பு வினையாகவும், உற்சவகாலத்தில் பொழுது போக்கு விளையாட்டாகவும் திகழ்கிறது.

### மலேஷியா-சிங்கப்பூர்

மலேஷியா, சிங்கப்பூர் இவற்றின் பகுதிகளில், அங்கு குடி யேறிய தமிழ்நாட்டு சிலம்ப வீரர்களால் இக்கலை விரிவாகப் பரப்பப் பட்டுள்ளது. அங்கேயும் சிலம்பம் தற்காப்பிற்காகவும், பொழுது போக்கிற்காகவும், கற்கப்படுகிறது.




படம் 81 காவலர், போர்வீரர், பெண்கள், விளையாட்டில் தேறிய மாணவர் இவர்களுக்கு சிலம்பத்தின் அவசியம்—அவசியம் ஒப்பிடப்படல்.

**தாய்லாந்து**

தாய்லாந்தில் கூட தமிழகத்தின் ஒப்பற்ற சிலம்ப விளையாட்டின் நறுமணம் வீசுவதை நுகரலாம். தாய்லாந்தில் பெண்களும் தங்களது கம்பு சுழற்றுத் திறமையைப் பார்வையாளர்கள் ரசிக்கும் வண்ணம் சிலம்ப அரங்கேற்றங்களில் நிரூபித்துக் காட்டுகின்றனர்.

மேற்படி சம்பவங்களை PHYSICAL EDUCATION AROUND THE WORLD (Published by PHI EPSILON KAPPA FRATERNITY, 4000 MEADOWS DRIVE SUITE L-24, INDIANAPOLIS; INDIANA 46205—MONOGRAPH-2 1968–Page 74) என்ற புத்தகத்தின் வாயிலாக அறிந்து கொள்ளுகிறோம். அதன் விபரம் பின் வருமாறு.

"Sword and pole fighting is an ancient traditional Thai Game. It stems from the former times when Siam, in fighting for its freedom was engaged in many manual warfares which included not only the pole but swords, lances, spears and long handled knives with curved blades that were used for close-in fighting. All Thai boys and girls are still instructed in the art of self-defense with a pole which in some areas is known as Thai fencing"

தாய்லந்திலும், அனேக தமிழர்கள் குடியேறியுள்ளதாகத் தெரிகிறது.

**ஆப்ரிக்கா**

தமிழகத்திலிருந்து ஆப்ரிக்காவின் பல திக்குகளிலும் சென்று குடியேறிய மக்கள் இச் சீரிய சிலம்பக் கலையை ஆப்ரிக்க நாட்டிற்கு அறிமுகப் படுத்தியுள்ளதாகத் தெரிகிறது.

**ஜப்பான்**

சிலம்பக் கலையின் ஆர்வம் கிழக்கிலுள்ள ஜப்பானியர்களை எங்ஙனம் எட்டிப் பிடித்தது என்பதையும் தமிழர்கள் ஆராய வேண்டும். ஜப்பானிய இளைஞர்கள் கட்டக் கம்பு (முச்சாண்) சிலம்பத்தில் அதிக அக்கரை காட்டுவதாகத் தெரிகிறது. இந்நூலாசிரியர் 2வது தமிழ் உலக மகா நாட்டில் சிலம்பம் பற்றி வாசித்ததை மூன்று ஜப்பானியர்கள் ஆர்வத்தோடு சுருக்கெழுத்து (short hand) எடுத்தனர்.

**இங்கிலாந்து**

இடைக்காலத்தில் இங்கிலாந்து, குவாட்டர் ஸ்டாப் (Quarter-staff) என்ற கம்பு விளையாட்டில் ஆர்வம் காட்டினது. அக் கம்பு விளையாட்டை, இந்தியாவிற்கு வந்த கிழக்கிந்திய கம்பெனியார் இந்தியாவில் கற்றிருந்திருக்கலாம் என்ற ஒரு கூற்றும் சிலம்ப நிபுணர்களிடம் நிலவி வருகிறது.

இந்தியா

நமது இந்திய நாட்டில், நீலக்கடலில் நித்தம் தவம் செய்யும் குமரி முதல், பனிபடர்ந்த இமயம் வரையிலும், வங்கம் முதல் அரபி வரையிலுமுள்ள தமிழ் நாடு, கேரள நாடு, ஆந்திர நாடு, மகா ராஷ்டிர நாடு, குஜராத் நாடு, வங்க நாடு, மத்திய பிரதேசம், ராஜஸ்தான், பஞ்சாப், ஹரியாணு, ஒரிஸ்ஸா, காஷ்மீர், உத்தர பிரதேசம், பீஹார், முதலிய எல்லா மாநிலங்களிலும், கம்பு விளையாட்டுத் திறன் பூத்துக் குலுங்குவதை நாம் காணலாம். இவ்வாறு பல நாடுகளிலும், நம் நாட்டிலும், தழைத்து வரும் இக்கலைக்கு நமது ஆதரவு மிகவும் தேவை.

சிலம்பக் கலையின் நற் பயன்கள்

உலகின் எப்பாகத்திலும், பயங்கரத் தாக்குதல்கள், கொள்ளையடித்தல் இவற்றில் முக்கியமாகப் பெண் குழந்தைகளின் பாதுகாப்பு அவசியமானதாகவே இருந்து வருகிறது. ஒரு நபருக்கும் அவரது உடமைகளுக்கும் சிலம்பம் பாதுகாப்பை உறுதிப் படுத்துகிறது. சிலம்பக் கம்பு என்ற இச் சாதாரண ஆயுதத்தைக் காவல் துறையினர், கையில் ஏந்திச் செல்லுகின்றனர். இச்சிறுதடி கும்பல்களைக் கட்டுப் பாட்டிற்குள் கொண்டுவர பிரயோகிக்கப்படுகிறது. உலகெங்கும் பத்திரிகைகள் மூலமாயும், வானொலிச் செய்திகள் மூலமாயும் தடியடிகளின் எதிரொலிகளை நாம் கேட்டுக் கொண்டேயிருக்கிறோம்.

பள்ளி, கல்லூரி மாணவர்கள் வீரம் பலம் படைத்தவர் களாகவும், அஞ்சா நெஞ்சமுள்ளவர்களாகவும், பண்புள்ளவர்களாகவும், பொழுது போக்கு நேரங்களில் வீர விளையாட்டுகளைக் கற்பவர்களாகவும் மாறும் நாள் என்றாளோ? அங்ஙனம் அவர்கள் மாற இக்கலை, விளையாட்டுப் பாடத்திட்டத்தில் திட்டமாக இடம் பெறவேண்டும். தற்பாதுகாப்பு வினைகள் ஏளனமாக எண்ணப்பட்டு அவற்றிற்குரிய அங்கீகாரமும், சிறப்பும் குன்றியிருந்த காலம் உண்டு. அப்படிப்பட்ட வளர்ச்சி குன்றிய காலத்திற்கு 1971-ம் ஆண்டு மார்ச் மாதம் துக்கமணி அடிக்கப்பட்டு விட்டது!

சிலம்ப வித்தையைக் குறைவறக் கற்க இருக்கும் ஒவ்வொரு மாணவனும், அதைக் கற்பிக்கும் ஒவ்வொரு ஆசானும் இக்கலை சம்பந்தப்பட்ட சுழற்சிகளைத் திறம்படச் செயலாற்றுவதற்குரிய

காலடி வரிசைகளையும், முக்கிய தந்திர நுட்பங்களையும், அடிப்படை நுணுக்கங்களையும், அதன் சுழிவு, நெளிவுகளையும் தெளிவுபட விளங்கிக்கொள்ள அத்தியாயம் 4-ல் அனேக வரைபடங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஆதார கால் பயிற்சி முறைகள் (Foot work), அடிமுறைகள் (Sequence of hits) இவற்றின் பல்வேறு நிலைகளை அல்லது தோற்றங்களை சுமார் 80 க்கு அதிகமான வரைபடங்கள் தெளிவுற விளக்கிக் காட்டுகின்றன. மேலும் குறிப்பிட்ட கம்பின் சுழற்சிகளும் அதற்கேற்ற காலடி பெயர்ப்புகளும் தொடர்ச்சியாகக் கொடுக்கப்பட்டுள்ளன. வரைபடங்கள்மூலம் விளக்கம் தருதலும், இவ்விளையாட்டில் இன்பம் ஊட்டுவதுமே 4-ம் அத்தியாயத்தின் தலையான நோக்கம். சிலம்பக் கலைச் சொற்களின் அருஞ்சொல் அகராதியில், அருஞ்சொற்களும், அவற்றின் ஆங்கில பதங்களும் அட்டவணை 3-ல் காணக்கிடக் கின்றன. இக் கலைச்சொற்கள் இக்கலையில் ஆர்வமுள்ளோரின் ஆவலை மேலும் தூண்டும்.

**சிலம்ப விளையாட்டின்மூலம் வீர உணர்ச்சி பெருக்கெடுத்தல்:**

தமிழ் இலக்கியப் பண்ணையில் இங்குமங்குமாக சிதறிக் கிடக்கும் குறிப்பு மலர்களிலிருந்து வீர சிலம்பத்தின் சரித்திர வரலாறு, இசைவாகத் தொடுக்கப்பட்டுள்ளது வாசிப்போருக்கு இன்பத்தையும், வீரத்தையும் வாரி வாரி வழங்கும். மேலும் இக் கலையின் பொற்காலத்தையும், வீழ்வு காலத்தையும் அத்தியாயம்-2 வருணிக்கிறது. மாணவர்களுக்கு இக்கலையின் வரலாறு, நல் அறிவையும், நாட்டுப்பற்றையும், புத்துணர்ச்சியையும், இக்கலையில் நல் விருப்பத்தையும், நாட்டத்தையும், அபரிமிதமான தேட்டத் தையும் உண்டுபண்ணும் என்பதில் ஐயமில்லை. சிலம்பம் என்ற சொல்லின் பிறப்பு, சிலம்பைத் தேர்ந்தெடுக்கும் முறை, அதைப் பண்படுத்திப்பேணும் வகை, பயிற்சித் திட்டங்கள், மேலும் இக்கலை சம்பந்தப்பட்ட வேறு சில நுணுக்கங்கள் முதலியவைகளை அத்தியாயம்-3 கோர்வையாக அமைத்துக்காட்டுகிறது. இக் கலையின் விதிகள் அத்தியாயம் 5-ல் நன்கு தெளிவாக்கப்பட்டு விளையாட்டில் பண்புகளை உருவாக்கும் வழிகளையும் வகுக்கிறதா யிருக்கிறது.

அத்தியாயம்-1 சிலம்பக்கலையை அழகாக அறிமுகப்படுத்து கிறது. இங்ஙனம் கவர்ச்சிகரமாக இக்கலையின் சிறப்புகள் இந் நூலில் கொடுக்கப்பட்டிருக்க, இக்கலையின் ஆர்வம் எல்லா மக்களிடமும் பரவவேண்டாமா?

அத்தியாயம்-4ல் கொடுக்கப்பட்டுள்ள ஆதார அடிவரிசைகள் அடிப்படையான அடிகளைக்காட்டும் வரிசைகள் இவைகளைத் தவிர ஒருவன் இக்கலையில் எவ்வளவோ கற்கவேண்டியதிருக்கிறது

"கற்றது கை மண் அளவு
கல்லாதது உலகளவு"

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள வல்ல நாட்டை அடுத்த உடையார்குளத்திலுள்ள சிலம்பப் பயிற்சி பள்ளிக்கூட விளையாட்டு களைக் காண இந் நூலாசிரியர் 1972-ம் ஆண்டு டிசம்பர் மாதம் அங்கு சென்றிருந்தார். ஆசான் தாசன் சின்னச்சாமி உபாத்தியாயர், அவரது சீடர்கள் திரு. வ.பத்மநாபன், திரு பத்மநாபனின் தந்தை திரு. வடிவேல் முதலியோரின் விளையாட்டு முறைகளையும் நேரில் கண்டுகளித்தார். திரு. பத்மநாபன் அவர்கள் திரட்டிய சிலம்பம் பற்றிய சில பழமொழிகளும் கருத்துகளும் சிலம்பத்தில் ஆர்வமுள்ளோரின் கவனத்தை ஈர்க்கும்.

பழமொழிகள்.

"கம்புக்கு எட்டி நிற்காதே!
கத்திக்கு எட்டி நில்."

மாற்று.

"கம்புக்கு ஒட்டி நில்!
கத்திக்கு எட்டி நில்."

"கல்வி, கடல், கம்பு இம்மூன்றிற்கும்
கரை கண்டார் இலர்!"

"முன் நின்றவன் கம்பு அசைந்தால்
அவன் மரணம்!"

"தலைக்கு வந்த அடி
தலைப்பாகையோடு போனது!"

"முன் நின்றவன் கம்பணைத்து
முழங்காலில் அடி"

மேற்கூறிய பழமொழிகள் இவ்விளையாட்டின் சிறப்பையும், இவ்விளையாட்டிற்கு வேண்டிய சில நுணுக்கங்களையும் பறைசாற்றுகின்றன.

காலால் எதிரியின் கண்களில் மண்ணைத்தூவி எதிரியை மடங்கடித்தல் என்ற முறை முன்காலத்தில் வழக்கிலிருந்தாலும், தற்காலத்தில் அது முறைகேடானது என்று கருதப்படுகிறது. கம்பைக் காலால் உதைத்து எதிரியைத் தாக்குதல் என்ற முறை இன்னும் அனேக வட்டாரங்களில் நிலவி வருகிறது. எதிரியின் நெற்றி அல்லது மார்புக்குக் குறிவைத்து கம்பை விட்டெறிந்து எதிரியை "மடக்குதல்" அல்லது "தான் தப்பிச் செல்லுதல்" என்ற முறையை ஒரு சில திறம்படைத்த சிலம்பாட்டக்காரர்கள் இன்னும் வழக்கத்தில் வைத்துள்ளனர் எனத்தெரிகிறது.

வீரம்பல் வரிசை, புதிய நாடக வரிசை, கூடலூர் வரிசை முதலிய அடிவரிசைகளும், துலுக்கவாணத்தில் ஒற்றைக் கிருக்கி, இரட்டைக் கிருக்கி, ஒற்றைச் சீன அடி, இரட்டைச் சீன அடி முதலிய வீச்சுமுறைகளும், சக்கரப்பாண்வெட்டி, இரட்டைக் கம்பு வைத்து வீசுதல், நெஞ்சுப்பந்தம் வீசுதல், கயிறு பந்தம் வீசுதல், சுருள்வாள் வீசுதல், படைவீச்சு (நின்று, உட்கார்ந்து) வீசுதல் மேலும் வாள், கொம்பு, கத்தி, கையடி முறைகள் முதலியன, சிலம்ப விளையாட்டிற்கு நல்ல சிறப்பைக் கொடுத்துள்ளனவென்றும், பஞ்சுவேடம் (பஞ்சொட்டி) புலிவேடம் போன்ற ஆட்டங்களைத் திருவிழாக்களில் தமிழ் மக்கள் விளையாடி வருகிறார்களென்றும் திரு. பத்மநாபன் விபரம் கொடுத்துள்ளார்.

மேற்கூறப்பட்ட புலிவேடங்கள் குறிப்பாகத் தூத்துக்குடி, திருநெல்வேலி இன்னும் அனேகமாக எல்லாத் தமிழகப் பட்டணங்களிலும், திருவிழா வைபவங்களில் அரங்கேற்றப் படுகின்றன என்றும் புலனாகிறது.

புலி வேடங்களைத் தாங்குவோர் சிலம்ப வீரர்கள் தான். ஒற்றை வால் வைத்துப் புலிவேடம் தாங்கி ஒருவன் பவனியில் வந்தால் அவன் சிலம்ப விளையாட்டில் ஓர் நல்ல தேர்ச்சி பெற்றவ னென்பதையும், இரட்டை வால் வைத்துப் புலிவேடம்தாங்கி பவனியில் வந்தால், சிலம்பப்போட்டியில் தனக்கு நிகர் யாவரும் இல்லை என்பதையும் புலிவேடம் தாங்கும் வீரர் பறைசாற்றுகிறார் என்பது தமிழர் மரபு.

அங்ஙனம் ஒரு வீரர் இரட்டை வால் வைத்துப் புலிவேடம் தாங்கி பவனியில் வந்தால், அப்புலிவேடம் தாங்கிய வீரரின் சவாலை வேறு சிலம்ப மல்லன் ஒருவன் ஏற்றுப் போட்டியில் இறங்குவதும் தமிழனின் வீர மரபு.

திருநெல்வேலி நகரை அடுத்துள்ள வயல் தெரு என்ற முத்துராமலிங்கபுரத்திலுள்ள வீரபாதர்வெள்ளைச் சிலம்பக்கலைக் கூட உபாத்தியாயரான திரு. வி. ஏ. முத்துப்பாண்டியன் அவர்கள் சிலம்பம்பற்றிய வேறு சில சீரிய கருத்துக்களையும், விளையாட்டின் நுணுக்கங்களையும் தெரிவித்துள்ளார்கள். அவை பின்வருமாறு:

"நம் நாட்டில் பெண்கள் கூட படைவீச்சு வீசுவார்கள்" வெயிலில் உலர்த்திப் பாடம் செய்த கம்புக்கு உயிரும் உண்டு. கண்ணும் உண்டு. எதிரிகளிடமிருந்து தப்பிக்கவும், அவர்களை வெல்லவும், எண் சாண் உடம்பிற்கு சிரசுதான் பிரதானம்' விளையாட்டின் நுணுக்கங்களையும் திரு முத்துப்பாண்டியன் அவர்கள் கீழே தொகுத்துக் கொடுத்துள்ளார்கள்.

**கம்பு பிடிக்கும் முறைகள்:**

(1) கொடும் பிடி
(2) கண், மூக்குப் பிடி
(3) உடும்புப் பிடி
(4) உயர் நிலைப்பிடி

குறிப்பு: எதிரிகளை அச்சுறுத்தவும், தன்னிடமுள்ள விவேகத்தையும், வித்துவத்தையும், கண் செய்கையையும் அறியும் வாய்ப்பைக் காட்டுவதும், உயர்நிலைப் பிடியாகும். மேற் கூறிய முறைப்படி கம்பைப் பற்றி செய்யும் வினைக்குப் பம்பல் என்று பெயர்.

"கம்புக்கு இவன் தான் அரசன்" என்று எதிரி நினைக்குமாறு பாவலா செய்து எதிரியின் மன பலத்தைக் குறைப்பதும், அவரைப் பயமுறுத்துவதும் "கௌசிக முறை" எனப் பெயர் பெறும்.

**வீச்சு முறைகள்:**

(1) சிலா வரிசை
(2) 4 வீடு கட்டி படைவீச்சு
(3) துலுக்கவாணம்
(4) பனைஏறி மல்லு
(5) ஏறு சிலாம்
(6) ஐயப்பன் படைவீச்சு

**தற்காப்பு முறைகள்:**

(1) கருட பந்தனம்
(2) கௌசிக முறை
(3) உயிர் நிலை காப்பு
(4) கால் பிரித்தல்
(5) இறங்கித் தப்பித்தல்

**கால் முறைகள்**

(1) 1 அடி
(2) 2 அடி
(3) 3 அடி
(4) 4 அடி
(5) 8 அடி

**ஏமாற்று வரிசைகள்**

(1) அடாணு வரிசை
(2) சங்கர நாராயண வரிசை
(3) சிவசூரிய வரிசை
(4) ஓஸ்முனை வரிசை
(5) கொம்பேறி மூக்கன் வரிசை
(6) கோ மாறன் வரிசை
(7) ஐயன் கால் வரிசை
(8) வீமன் வரிசை

**வில்லன், வித்வசன்கள் ஏமாற்றும் கால்கள்**

(1) பறவை
(2) நாகேந்திரப் பாவலா
(3) ஐந்தடி பிரட்டுப் பாவலா
(4) படைதிரட்டிப் பாவலா
(5) மச்சவேந்தன் பாவலா
(6) பதினாடி மல்லங்கால் வேங்கைப் பாவலா

இந்நூல் ஆக்கியோனுக்கு சிலம்ப வித்தையைக் கிரமமாகக் கற்றுக் கொடுத்து, இக்கலையில் அன்னாருக்குத் திறமையையும், ஆர்வத்தையும், ஊட்டிய பிரபல சிலம்பாசிரியரான திரு,

பொன்னையா நாடார் அவர்களின் (திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த பண்ணை விளையை அடுத்த பண்டார விளையில் வசிப்பவர்) சிலம்பம் பற்றிய சிறந்த கருத்துக்கள் இவண் திரட்டிக் கொடுக்கப்பட்டுள்ளன.

"வல்லவனுக்கு வல்லவன் வையகத்திலுண்டு" என்ற பழமொழிக் கேற்ப, சிலம்பக் கலையில் வல்லவர்கள் தமிழகம் முழுவதும், ஏன்? பாரதத்தின் எல்லை எங்கும் இருக்கிறார்கள். குறிப்பாக, தமிழகத்தின் கிராமங்களிலும்,சேரிகளிலும், பட்டணங்களிலும், இவ்வித்தை அனேக வல்லுனர்களுக்குக் குலவித்தையாக இருந்து வருகிறது.

ஒவ்வொரு ஆசானிடமும் இக்கலையின் பற்பல நுணுக்கங்களைக் கற்கும் வண்ணம், இக்கலையின் காலடிப் பெயர்ப்புகளும், கம்பு பிடிக்கும் வகைகளும், கம்பைச் சுழற்றும் தந்திரங்களும், சிலம்பை எதிரியின் மீது திடீரெனப் பிரயோகித்து அவரைப் பூட்டு (Lock) போட்டுத் திணற வைக்கும் விநோதங்களும் கடலெனப் பரந்து இக்கலையின் திறமைகளை நூற்றுக்கணக்கில் அதிகரித்துச் செழிக்கச் செய்வதால், இக்கலை இருவர் போட்டிக் கலைகளில் சீரிய இடத்தைப் பெறுவதாகவும் திரு பொன்னையா பயில்வான் அவர்கள் கூறுகின்றனர். அனேக சிலம்பாசிரியர்களிடம் சென்று இக்கலையைக் கற்றால், இவ்வித்தையின் நெளிவு, சுளிவுகளையும், அனேக ரகசிய விளையாட்டுகளின் தத்துவங்களையும் பயில முடியு மென்பது திண்ணம். திரு பொன்னையா அவர்கள் தமிழகத்தில் இக்கலையைப் பயின்றபின், இலங்கையிலுள்ள யாழ் பாணத்திற்கும் சென்று, அங்கு பாண்டித்தியம் பெற்ற தமிழக சிலம்பாசிரியாகளிடம் இக்கலையின் ரகசிய நுட்பங்களைக் கற்றதாகச் சொல்லுகிறார். யாழ்ப்பாணத்தில் சிலம்பப் போட்டிக்குச் சவாலும் விடுத்திருந்தார்.

சிலம்பத்தில் திறமைபடைத்த வீரர்கள், மனித உடலிலுள்ள வர்ம இடங்களையும், (Vulnerable pressure points), எலும்புப் பொருத்துகளையும், (Joints), விஷ நரம்புகளின் (Nerves near joint or bones) இலக்குகளையும் நன்கு அறிவர். சிலம்பக் கலையை ஊன்றிக்கற்ற வீரர்கள் வர்மத்தில் அடிபட்டுக் கஷ்டப்படுவோரை வர்ம அடியின் ஆபத்திலிருந்து மீட்கவும், தகுதிவாய்ந்தவர்களாயிருப்பர். திரு. பொன்னையா அவர்கள் மேற்படி தகுதிபெற்றவரும் எலும்பு முறிவுகளையும், நரம்புப்பிடிகளையும், மொழி - பிசகுகளையும் சரிப்படுத்தும் திறமை படைத்தவருமாவார், சிலம்பம் கற்றவர்

கராத்தி, மல்யுத்தம், குத்துச்சண்டை, ஜீடோ போன்ற மற்ற மல்லுகளிலும் திறமையைப் பெருக்கிக்கொள்ளுதல் நல்லதென் கிருர். திருநெல்வேலியிலுள்ள பி. வி. எஸ். வர்ம வைத்தியசாலை தலைவர் திரு கேசவப் பிள்ளை அவர்களும் சிலம்பத்திலும் வர்ம வைத்தியத்தில் சிறந்தவர். தைரியஸ் பொன் நாடார் (கருப்பன் துரை, குன்னத்தூர் போஸ்ட் திருநெல்வேலி) அவர்கள் சிலம்பக் கலையில் நன்கு தேர்ந்தவர். இருகைகளிலும் சிலம்பக் கம்புகள் ஏந்தி, மின்னல் வேகத்தில் சுழற்றி விளையாடுவதில் திறம்படைத் தவர். சிலம்பக் கம்பை நெஞ்சுக்குள்ளே வைத்து அணைத்து ஆட வேண்டுமென்பது இவரின் கூத்து. "நாகபந்தம்" என்ற முறை யில் பாண்டித்தியம் பெற்றவர். இவரது சகோதரர் கம்பு அதிகம் அசையாவண்ணம் நிலையாக நிறுத்தி விளையாடுவதில் நிபுணர். நாசரேத்திலுள்ள பிரபல எலும்பு முறிவு வைத்தியரான எஸ். தேவதாஸ் அவர்கள் சிலம்பக் கலையோடு வர்மக் கலையையும் சேர்த்துப் பழகுதல் மிக அவசியம் என்று வலியுறுத்துகிருர். பழனி நகரை அடுத்த ஊரில் வசிக்கும் ராமசாமி (அழகப்பா உடற் கல்வி கல்லூரியில் படித்த பழைய மாணவர்) அவர்களும், குரும் பூரில் வசிக்கும் பால்பாண்டியன் அவர்களும், இக் கலையின் தொன்று தொட்ட சிறப்பையும் பண்டைக் கால சிலம்ப வீரர்களின் வர்ம வைத்திய சேவைகளையும் புகழுகின்ருர்கள். படுவர்மம் பன்னீ ரெண்டும், தொடுவர்மம் தொண்ணுத்தாறு என்றும், அடங்கல் மூன்று என்றும் வர்ம வைத்தியர்கள் கணித்துள்ளனர். கேரள நாட்டைச் சேர்ந்த, திருநெல்வேலியில் வசிக்கும் திரு. கோபால கிருஷ்ண நாயர் (Gymnastic Coach) அவர்களும் சிலம்பக் கலை யிலும் வாள் வீச்சிலும் தன் தகப்பனுரைப் போல் திறம்படைத்த வர். கம்பை ஒளித்து வைத்து விளையாடுவதிலும் உட்கார்ந்த வண்ணம், எதிரிகளின் அடியைக் கட்டுவதிலும் இவர் திறம் படைத்தவர். திருநெல்வேலிப் பேட்டை சுற்றுவட்டாரத்தைச் சார்ந்த திரு. அந்தோணி அவர்களும், சக்கிலியர் வரிசை என்ற ஓர் சீரிய சிலம்ப விளையாட்டில் நல்ல அனுபவமுடையவர்களாவர். தச்சநல்லூரைச் சார்ந்த பல சிலம்பாசிரியர்கள் கொம்பேரிமூக்கன் வரிசை என்ற சிலம்பாட்டத்தில் தேர்ச்சி பெற்றுள்ளார்கள்.

திரைப்படத் துறையில் பெயர்பெற்ற புரட்சி நடிகர் திரு எம். ஜி. ஆர். அவர்கள், திரு. சாம்சுந்தர் (நாகர்கோவில்) திரு. ஒ. ஏ. கே. தேவர், திரு. சின்னப்பாத்தேவர், திரு. ஆர். எம். வீரப் பன். திரு. நாகராஜன், திரு. சிவாஜி கணேசன், திரு. ஜெய்சங்கர் திரு. ஜெமினி கணேசன், திரு. ஆனந் அவர்களும் இக்கலையை வளர்த்து வருகிருர்கள் என்பதை நாம் அறிவோம்.

மயிர்க்கூச் செரிய வைக்கும் சிலம்புச் சண்டைகள் செரிந்த திரைப்படங்களின் பெயர்களை அட்டவணை-5ல் காணலாம்.

ஸ்ரீ மகா பாரதம் 1890 ஆண்டு அமெரிக்கன் அச்சகக்கூடம்; சென்னையிலிருந்து வெளியிடப்பட்டது. அதில் 140ம் பக்கம் 10, 26, 36ம் வரிகளில் 'சிலம்பக் கூடம்' என்ற சொற்கள் உள. ஏகலை வன் சிலம்பக் கூடம் கட்டினன். சிலம்பக் கூடத்தில் ஏகலைவன் போர்க் கலைகள் யாவும் தானே முயன்று கற்ருன் எனத் தெரிய வருகிறது.

"குருகுல மக்களும் ஆசிரியர் கட்டளைப்படி உண்டு பசிதீர்ந்து சிலம்பக் கூடமே வந்து சேர்ந்தனர்." (ஆதிபர்வம் பக்கம் 147. 30. 31, 32-ம் வரிகள்) இங்ஙனம் பண்டைக் காலத்திலும் தற் போதும், இக்கலையில் வீரர்கள் திகழ்ந்துகொண்டிருக்கின்றனர்.

யானையின்மேல் அம்பு எய்தும், சிலம்பக் கம்பினுலும், வேல் கம்பினுலும், அதின் துதிக்கைக்குப் பூட்டுப் போட்டு அதைத் திணறவைத்த வீர செம்மல்கள் நிறைந்தது நமது தமிழகம். திருநெல்வேலியில் முஸ்லீம் நண்பர்களும் இக்கலையில் முன் னணியில் இருக்கின்றனர். யானைக்குப் பூட்டுப் போட்ட தாதா மியம் அவர்களைப் பெற்ற நகரம் திருநெல்வேலியாம்.

சிலம்பக்கலை, ஆதிகாலத்திலும், சங்க காலத்திலும், நவீன காலத் தில் 1971-ம் ஆண்டு மார்ச் மாதம் வரையிலும் ரகசியக் கலையாகவே இருந்ததாலும் பார்வையாளர்கள் அனேகர் வரவேற்கப்படாது நள்ளிரவுகளில் சவால் விட்டவர்களிடையே மட்டும் சிலம்பப் போட்டிகள் நடத்தப்பட்டதாலும், இக்கலை வெளிவராது, ஒளி மங்கியதெனக் கணிக்கப்படுகிறது.

சிலம்பப் போட்டிகளில், புலிபோல் கிரமமாகக் காலடி பெயர்த்து வைக்கும் அழகுவழிகளும், சுழற்றும் கம்பு கண்ணிற்குத் தெரியா தொழியும் வண்ணம் செயல்படும் சுழற்றுதலின் முறைகளும், எப்பொழுது எந்த இலக்கில் கம்பின் இரு மருங்குகளும் (நுனிகள்) தொடுதல் செய்யவேண்டும் என்ற வினையங்களும், எங்ஙனம் எதிரி கொடுக்கும் அடிகளிலிருந்து, விலக அல்லது தடுக்க. அல்லது தடுத்துத் தாக்கவேண்டுமென்ற தந்திரோபாயங்களும், எவ்வாறு மின்னல் வேகத்தில் எதிரிக்கும் பூட்டுப்போட்டு அவனது சிலம்பைப் பற்றவேண்டுமென்ற விநோத சூழ்ச்சித்திரன்களும் சமயோசித புத்திவழிகளும், எதிரியை எளிதில் ஏமாறவைக்கக் கூடிய கம்பை அசைக்கும் மாயங்களும், எதிரியை கண் அசைப்

பினல் அச்சுறுத்தி மருளவைக்கும் திறன்களும், காலடி பெயர்த்து வைப்பதினல் எதிரியைத் திணறவைக்கும் உபாயங்களும், பண்டைக் காலங்களில் பனை ஓலை ஏட்டுச்சுவடிகளில் வரையப் பட்டு ரகசியமாகக் காக்கப்பட்டும், வளர்க்கப்பட்டும் வந்தது. காலப்போக்கில், இது ரகசியக்கலை என்ற எண்ணம் அதிக அளவில் வளர்ந்ததால், சிலம்பக்கலையின் நுட்பங்கள் பதிக்கப்பட்ட பாக்களும், குறிப்புகளும் அடங்கிய ஓலை ஏட்டுச்சுவடிகளும் வெளி வராமல் மறைக்கப்பட்டன. இன்றைய நிலையும் இதுதான்.

அருவியில் வளர்ந்த கல்திருவிக்கம்பை ஏந்திச் சிலம்பாடிய பண்டைத் தமிழர்கள் ஏடுகள் வாயிலாகவும், ஆசான்களின் வாய்மொழியாகவும், இக்கலையைக்கற்றுப் பாண்டியத்துவம் அடைந்து தங்களது திறனுக்கேற்ப விருதுகள் பெற்றனர்.

ஆடி மாதங்களில் திருச்செந்தூர் மாசித் திருவிழாக்களிலும், சீவலப்பேரி சந்தைகளிலும், தென்காசியிலும், மதுரையில் அழகர் திருவிழாக் காலங்களிலும் பாடம்பண்ணப்பட்ட சிலம்பக் கழிகள் விற்பனைக்கு வருவது நாம் காணும் காட்சிகளாகும். திருநெல்வேலி யில் சிலம்பக் கம்புகள் குறிப்பாகக் “கம்புக் கடைத்தெரு” எனப் படும் தெருவிலுள்ள கடைகளில் விற்கப்பட்டன. இன்றும், அத்தெரு ‘கம்புக்கடைத்தெரு’ என்று அழைக்கப்படுகிறது. ராமநாதபுரம் மாவட்டத்தில் பரமக்குடிச் சந்தைகளிலும் வீர மரவர்கள் சிலம்பக் கம்புகளை வாங்கி இக்கலையை வளர்த்தனர். இன்னும் வளர்க்கின்றனர். குமரி மாவட்டத்தில், காட்டுக்கடை ஆசான் என்பவரும், அவர் குடும்பத்தினரும் சிலம்ப விளையாட்டில் சிறந்தவர்கள்..

ஏழைக் குடியானவர்கள் முதல் முடிமன்னர்கள் வரை எல் லோரும் சிலம்பக்கலையை ஆதரித்தனர் என்பதற்கு அனேக சான்றுகள் உண்டு.

பெரிய விக்ரமாதித்தன் கதையில் முதலாவது திரைச்சீலை சொல்லிய காந்தரூபன் காந்தரூபி கதையில் 3--ம் படிக்குக் காவலாகிய கோமளவல்லிப்பதுமை சொல்லிய ஏலாகரம்பை கதையில் (வரி 11, பக்கம் 140) வரும் கீழ்காணும் குறிப்பின்மூலம் முடிமன்னரும் இக்கலையைக் கண்ணெனப் பாராட்டிப் பயின்ற தாகத் தெரிகிறது.

"கெந்தேஸ்வர ராஜன் மகாதவத்தைச்செய்ய, கடவுளினுடைய அனுக்கிரகத்தில் நல்ல ரூபலாவண்ணியத்தோடு முதல் மனைவி காந்தரூபனென்கிற ஓராண் பிள்ளையைப் பெற்றாள்.

அப்பிள்ளை ஏழு வயதில் சகல கலைக்கியானங்களையும், யானை ஏற்றம், குதிரை ஏற்றம் முதலாகிய ஆயுதப் பரீட்சைகளும் சிலம்பு வித்தைகளுங் கற்று முகஜீகரமும், இராஜ லட்சணங்களும் பொருந்திப் பன்னீரெண்டாம் வயதில் சிறு தேரோட்டி விளையாடி வருகிற நாளையிலே பிதாவாகிய கெந்தேச்சுரன் தனது தேவிமார் களைப்பார்த்து நமது புத்திரன் ரூபலாவண்யத்திற்கு தகுந்த பெண்ணை விவாகஞ்செய்ய வேண்டுமல்லவாவென்று" கேட்டான். மன்னனாகவேண்டிய இளவரசன் சிலம்பக்கலை பயிலவேண்டியதின் அவசியத்தை மேற்கூறிய கதையின் சம்பவம் புலனாக்குகிறது. ஆகவே கொலுவேறிய அரசர்கள் கற்று வீரம் வளர்த்த இச் சிலம்பை நாமும் கற்கவேண்டாமா?

முத்துக்குளிக்கும் நீலத்திரைக் கடலைப்பெற்ற தூத்துக்குடி துறைமுகத்திலிருந்து, ஆங்கிலேயரின் தடைஉத்தரவை மீறி, கப்பல் ஓட்டி வான்புகழும், வீரமும் கொண்டார் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள்.

அங்ஙனம் வீரம் செறிந்த தூத்துக்குடியில், ஆதிகாலம் தொடங்கி இந்நாள் வரை முத்தமிழ் திக்கெட்டும் வெற்றி முரசு ஆர்க்க, முத்து தவழ்ந்தாட, உறுமியோடு வாங்கா முழங்க, வேட்டு விண்ணைப் பிளக்க, சிலம்பப் பள்ளி ஆசான்களும், சிலம்பக்கலையில் தேர்ச்சி பெற்ற முதியவர்களும், காளையர்களும், அணி, அணியாய்ச் சிலம்பம் ஆடி பார்வையாளர்களை இன்ப வெள்ளத்தில் மூழ்கடித்துக் கொண்டிருக்கின்றனர் என்றால் அது மிகையாகாது. தமிழகத் திலுள்ள பிற பட்டணங்களைப் போல் தூத்துக்குடியிலும் சிலம்பக் கலைக்கு அதிக ஆதரவு இருக்கிறதென்றும், தூத்துக்குடி சிலம்பக் கலை கழக சங்கம் ஒன்று நல்ல முறையில் அங்கு 1970ம் ஆண்டு ஸ்தாபிக்கப்பட்டுள்ளதென்றும், சிலம்பாசிரியர் திரு. எஸ். குருசாமி அவர்கள் கூறுகின்றனர். சிலம்பப் பள்ளிகள் பவனி வரும் சமயங் களில் பள்ளிச் சின்னங்களையும் ஏந்திப் பவனிவருதல் பண்டைய மரபு என்றும் கூறுகிறார். எழிலும், வீரமும் படைத்த மதுரை மா நகரில் சௌராஷ்டிரா சிலம்பக்கூடமும், அங்குள்ள பல சிலம்பக் கூடங்களும், ராமநாதபுரம் மாவட்டத்தில், பரமக்குடி, ராமநாதபுரம், விருதுநகர், அருப்புக்கோட்டை, சிவகங்கை,

புதுக்கோட்டை முதலிய இடங்களிலுள்ள சிலம்பப் பள்ளிகளும் நன்கு இயங்குகின்றன. திருநெல்வேலியின் அருகிலுள்ள தச்ச நல்லூரில் வீர பாதர் வெள்ளைச் சிலம்பக்கூடம், திருநெல்வேலி பேட்டையிலுள்ள அந்தோணி செல்வம் சிலம்பக்கூடம், பழனி யிலுள்ள சிலம்பக் கூடங்கள், குமரி, சேலம், தஞ்சை, திருச்சி, நீலகிரி, வடஆற்காடு, தென் ஆற்காடு, செங்கல்பட்டு, கோயம் புத்தூர், மதுரை, திருநெல்வேலி, ராமநாதபுரம், சென்னை முதலிய மாவட்டங்களில் தோன்றியுள்ள எண்ணுக்கடங்காத சிலம்பக் கூடங்கள் நல்ல முறையில் இயங்கி இக்கலையை உலகநாட்டினர் அனைவருக்கும் பயனுள்ளதாகச் செய்வது ஓர் சிறந்த பணியாகும்.

தமிழகம் வீரத்தின் விளை நிலம்! வீர உணர்ச்சி பெருக்கெடுத்து ஓடும் பொன்நிலம்! தமிழகத்தில் அழகுக்கலைகள் மிளிர்கின்றன. ஓவியக்கலைகளும், சிற்பக் கலைகளும் பார்பவரைப் பிரமிக்கச் செய் கின்றன். இந்திய சுதந்திரப் போரின் முதல் வீர முழக்கம் சிம்மக் குரலாகத் தமிழகத்தில் அதாவது, பாஞ்சாலங்குறிச்சியில் தான் தொனித்தது.

தற்போது, மங்கிக்கிடந்த திராவிட நாகரிகத்தின் உச்ச நிலையை பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் புதைபட்டுக் கிடந்த மோகஞ்சதோரா, ஹரப்பா பட்டணங்களின் புதை பொருட்கள் வெளிச்சத்தினுள் கொண்டு வருகின்றன.

ஆகவே வீரத்திலும், நாகரீகத்திலும் பேர் படைத்த நாம் சேர, சோழ, பாண்டியர்கள் கண்ணெனப் போற்றி வளர்த்தஇப் போர்க்கலையை, ஏநாதிநாயனர், பரஞ்சோதிமுனிவர் என்றசேனைத் தலைவர்கள், முக்குளம் ஊரைச் சார்ந்த வீரக்கட்டப்பொம்மன், வெள்ளைத்தேவர், வடலிவிளை வீரசெம்புலிங்கம், காஞ்சிபுர வீர அரியநாதர், வெள்ளைமருது, சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த மண் வெட்டியான் முதலிய வீரச்செம்மல்கள் விளையாடிப் பறை சாற்றிய வீரக்கலையை, பாஞ்சாலக் குறிச்சிக் கோட்டையிலும், பாளையங்கோட்டையிலும் செஞ்சிக்கோட்டையிலும், கொஞ்சி வளர்க்கப்பட்ட தமிழ்க் கலையை, சிலம்பையும், வாளையும் ஏந்தி சிம்மக் குரல்கொடுத்து எரிமலைபோல் வீரக்கனல் கக்கி அரிமாப் போல் ஆண்மையோடு ஆங்கிலேயரைப் பலமுறை பின்வரு மாறு பயமுறுத்தி,

"ஆண்பிள்ளைபோலே எதிர்த்து வந்து
நின்ற(து) ஆரடா சற்றேனும் அஞ்சாமல்
பூண்கட்டுக் கப்படி வீழா முன்னம்
ஓடிப்போங்களடா வெள்ளைத் தூங்கல்களே"

அதோடு நில்லாது பின்வருமாறு கம்பினால் தாக்கி,

"அலறி விழும்படியாக ஊமையன்
அலெட்டனைக் குத்தி மலாத்தினனே
குலை குலைத்தங்கே அலெட்டன் விழுந்திடக்
குலவை யிட்டானே பாதர் வெள்ளை

பாதர் வெள்ளையன் காலனைப் போலவே
பறந்தடிக்கிறான் பார் தோழி
வாதக்காலச் சிப்பாயி பட்டானே அங்கே
வார்க்காரச் சிப்பாயி கெட்டானே

அலெட்டன் துறையுமே பாடாச்சு
வந்த பட்டாளம் அனைத்தும் பாடாச்சு
கலைத்துங் கப்படி வம்படி செய்துமே படைக்
கந்து கந்தாகவே பிய்த்திழுத்தார்".

பின்வறுமாறு சிலம்ப வரிசைகளும் வீசி,

"சரிகைத் தலைப்பாகை சிப்பாயி கோபம்
சடக்கென பட்டதும் ஊமைத்துரை
இரத்தங் குபீரென் றெழுந்திடவே - வெட்டி
நறுக்குவேன் என்றான் ஊமைத்துரை

பல்லைக் கடித்துப் படபடென்று சொல்லப்
பாங்குடன் அமுல் தார் முடுக்கி
சில்லரை செய்யாதே பாகி என்றான் இங்கே
செல்லாதுன் வல்லமை நில்லா தென்றான்,.

கோபங்களாக வுரைத்து அமுல் தாரும்
　　கோட்டையை நோக்கி நடந்தனராம்
காவல்காரன் மகன் வெள்ளையனும் கையில்
　　ஓங்கினுன் பூண் கட்டிக் கப்பாலே.

கொட்டுக் கொட்டென்று மேல் பொட்டிப் பகடையும்
　　கொல்வேன் என்ருன் தடிக்கம்பாலே
சட்டுச் சட்டென்று சிலம்ப வரிசைகள்
　　தட்டிவிட்டான் அங்கே பாதர் வெள்ளை

துட்டத்தனம் செய்யும் கட்டி யூமைத்துரை
　　துடித்துப் பல்லைக் கடித்ததுவும்
பட்டணத்துப் பொதியெருது போல் பொட்டிப்
　　பகடை பூண் கட்டிக் கம்பாலே

அடிக்க வந்தானே பாதர் வெள்ளையன்
　　அதட்டிப் பூண் கட்டிக் கம்பாலே
நொடிக்குள்ளே தம்பிவந்தேன் என்ருனவர்
　　நோக்கங்கள் எல்லாம் அறிந்தேன் என்ருன்".

இறுதியில் துப்பாக்கி, பீரங்கிக் குண்டுகளால் மட்டுமே மடங் கடிக்கப் பட்ட வீர நெஞ்சம் படைத்த கட்டப்பொம்மன் வளர்த்த கலையை, பாரதத்தின் எழில் மிக்க தலைநகரான டெல்லியில், நேருஜி அவர்கள் கம்பு விளையாட்டுக் காட்சி ஒன்றைக் கண்டு உள்ளத்தில் வீரம் பொங்கிக் காட்சி முடிந்ததும், தனது கைக் கோலை ஏந்தி, அக்காட்சியில் தான் கண்டது போல் நடித்து நன்மதிப்புக் கொடுத்த அச் சிலம்பக்கலையை நாமும் கற்போமாக!

வாழ்க சிலம்பம்!

வளர்க தமிழ்க் கலை!!

# அட்டவணை 1

## சிலம்பம் பற்றி தமிழ் களஞ்சியம் தரும் ருசிகரமான தகவல்

சிலம்பம்: கோலேனும் வாளேனும் பிறிதொன்றேனும் பற்றிச் செய்யும் சிலம்பம் மாந்தர்க்குள் தொன்று தொட்டு வரும் தற்பாப்பு வினையாம்; இது நாடுதோறும் வேறுவேறு நெறியின ராக வளர்ந்து, காலத்தாலும் ஆங்காங்கு மாறுபட்டு உருவாகி வருகிறது. தமிழ் நாட்டினை ஆண்டு வந்த சேர சோழ பாண்டிய மன்னர்கள் இச் சிலம்பத்தை நன்கு வளர்த்து வந்தார்கள்.

திருவிளையாடற் புராணத்தில், கூடற்காண்டத்து, அங்கம் வெட்டின படலத்தில் வரும் செட்யுட்களால் வாட்சிலம்பம் செய்த முறைமையினைப் பரஞ்சோதி முனிவர் தெள்ளிதின் காட்டியுள்ள னர். வாட்சிலம்ப நெறிகளே கோற்சிலம்ப வகையினுக்குப் பெரும் பாலும் பொருந்தும்.

காலடியால் பதினறு, முப்பத்திரண்டு, அறுபத்துநான்கு என ஏறிச் செல்லும் எண்ணமைதியுள்ள வீடுகட்டுதல் என்னும் வினை யில், திறமை பெறுதல் முதற்கண் இன்றியமையாதது வேண்டப் படும்.கை ஒன்றேனும் இரண்டேனும் சலித்தல் இன்றித் தலை நிலை, தோள் நிலை, இடைநிலை, கீழ்நிலை என நான்கு படி நிலை களிலே உடலசைந்து ஒரு போக்காகவும் உடலசையாது ஒரு போக்காகவும் இயங்கி, வெட்டும் தட்டும் குத்தும். வீச்சும் என்னுமித்திறந்த காரணங்களால் தொழிற்படும் திறமும், விரைவும், வளைவும் திறத்தால் அடுத்து அமைதல் வேண் டும். கோலேனும், வாளேனும், பிறிதொன்றேனும் கைப்பிடித்து மாற்ருன் முன்னர்க் களத்தே நிற்போன், அம்மாற்ருன் காட்டும் கைவினை, கால்வினையின்மீது தன் நோக்கம் செலுத்தாது அவனது கண்ணோக்கத்தின் மீதே தன் கண்ணியக்கம் வைத்தல் வேண்டும். குத்துவதெனக்காட்டி வெட்டுவதும், வெட்டுவதெனக் காட்டித் தட்டுவதும், தட்டுவதெனக்காட்டி வீசுவதும், வீசுவ தெனக்காட்டிப் புறம்பாதலும் என்று இன்னோரன்ன கைவினையும், கால்வினையும், கலந்த வினையும் மாற்ருன் கண்ணினைக் காணுமல் முன்னறிதல் இயலாது.

இன்று தமிழ்நாட்டில் சிலம்பம் பகுதிதோறும் சில முறை வேறுபாடுகளுடன் பயிலப்படுகின்றது. கள்ளர் மரபினரிடையே கோற் சிலம்பமும், மறவர் மரபினரிடையே வாட் சிலம்பமும் காக்கப்பட்டிருக்கின்றன.

பலர் சூழ்ந்து கல் கொண்டுவீச, ஒருவனே நடுநின்று கல் லொன்றும் தன் மெய்மீது உருமல் கோற்சிலம்பம் பயிலுதலுல் இன்றும் உண்டு. நூற்றுவர் சூழ்ந்துவரினும், ஒருவனே கோல் கொண்டு உட்புகுந்து நடு நின்று சிலம்பத் திறனுல், குரங்கடி பயின்றும், அரவடி ஒழுகியும் ஆற்றெழுக்காக அசைதல் இன்றி, அரிமா நோக்கம், தவளைப் பாய்வு, பருந்து விழுக்காடுபோல் மின்னெனக்கறங்கி, அந்நூற்றுவரையும் ஏண்ணி யெண்ணி, இதா'இவன் ஒருவன்' அதோ 'அவன் ஒருவன்' எனச்சுட்டிச்சுட்டி, அடித்து வீழ்த்தும் அருந்திறன் இன்றும் சாகாமல் தமிழர்ச்சிலம்பு மரபினரிடையே உளது. கோலூன்றி எழும்பி, மரத்துச்சிமீது தாவி நிற்றலும், மதிற்புறங்கானக் குதித்துப் போதலும் இச் சிலம்பத்தாற் செய்வோர் உளர்.

கணுவும் கனமும் வளைவும் உரமும் ஆராய்ந்து, பிளவும் கீற்றும் அற்ற மூங்கிற் களிகளைத் தேர்ந்து வெட்டி வந்து, நீரிடை யிட்டுப் பக்குவப் படுத்தி, நிலை நீரிலும் அடித்தடித்து உரமேற்றி, அளவு செய்து சிலம்புக்கோல் செய்துகொள்ளுதல் தமிழக மரபு.

வாட் சிலம்பத்துக் கேற்றவாறு எஃகு கொண்டு, அளவாள் அமைத்து ஒருமுனைக் கூர்மை ஏற்றி வாள் செய்வோர் முன்னர்த் தமிழ் நாட்டில் நிறைந்திருந்தனர்; இன்றும் உள்ளனர்.

கோலும் வாளும் அன்றிச் சுருள்வாள், பத்துக்கோல் எரிக் கழி முதலிய வேறு கருவிகளும் சிலம்பத்தில் கையாள்வதுண்டு.

—மா. பா.

# அட்டவணை - 2

## சிலம்ப வித்தைபற்றிய பண்டைத் தமிழ் பழமொழிகள்

| | தமிழ் பழமொழி | ஆங்கில உச்சரிப்பில் தமிழ் பழமொழி | ஆங்கில மொழி பெயர்ப்பு |
|---|---|---|---|
| 1. | கூத்தாடிச் சிலம்பம் போருக்கு நில்லாது | Kooothadi Silambam Poarukku Nillathu | The Mock Silambam played for the Gallery will be of no avail in War. |
| 2. | நான் தான் கொப்பன், நல்ல முத்துப் பேரன்; வெள்ளிச் சிலம்பெடுத்து விளையாட வாரேன்; தங்கச் சிலம்பெடுத்துத் தாலி கட்டவாரேன். | Nanthan Khoppan, Nallamuthup-peran, Velli Silambu Eduthu Vilayada Vaaren : Thanga Silambu Eduthu Thali Katta Vaaren. | I am the Hero; the Grandson of Nalla-muthu. I come with a Silver Staff to show my Dexterity in Silambam play and with a Golden Ornament to Tie a Matrimonial Knot. |
| 3. | ஆசான் இடறி விழுந்தால், அதுவும் ஒரு வரிசை, | Asan Edari Vizhunthal Athuvum Oru Varisai | Even the fall of a Silambam Expert is Considered to be a part of the Technique in Silambam. |
| 4. | கம்புக்கு எட்டி நிற்காதே! கத்திக்கு எட்டி நில்! | Kambukku Eatti nirkaadey! Katthikku Eatti Nil | In Staff fights, keep closer to the adversary; But for Knife fights, keep good distance from him. |

| | தமிழ் பழமொழி | ஆங்கில உச்சரிப்பில் தமிழ் பழமொழி | ஆங்கில மொழி பெயர்ப்பு |
|---|---|---|---|
| 5. | கல்வி, கடல், கம்பு இம் முன்றிற்கும் கரை கண்டார் இலர். | Kalvi, Kadal, Kambu, im moondirkum karai kandar Ilar. | There is no end for Education, No bound for the Sea, and no limit for Silambam technique. |
| 6. | முன் நின்றவன் கம்பு அசைந்தால் அவன் மரணம் | Mun nindavan kambu Asainthal Avan maranam | A slight wrong movement on the part of an adversary's Staff may bring a death blow on him. |
| 7. | தலைக்கு வந்த அடி தலைப் பாகையோடு போனது | Thalaiku vantha aadi thalai-pagaiyodu phonathu | The turban cloth saved the hit directed to the head. |

## அட்டவணை–3

### சிலம்ப விளையாட்டு பற்றிய அருஞ்சொல் அகராதி

| ஆங்கிலச் சொல் | ஆங்கிலத்தில் தமிழ் சொல்லின் உச்சரிப்பு | தமிழ் சொல் |
|---|---|---|
| Agile-move | Minnal | மின்னல் |
| Alternate-hand-swing | Kaimattuveechu | கைமாற்று வீச்சு |
| Attack | Ethir | எதிர் |
| Back-swing | Pinveechu | பின்வீச்சு |
| Back-thrust : Power | Pin eri kuthu | பின் எறிகுத்து |
| Back-thrust : Simple | Pin kuthu | பின்குத்து |
| Building house | Veedu kattuthal | வீடு கட்டுதல் |
| Centre-grip-swing | Mathi pidi veechu | மத்திப்பிடி வீச்சு |
| Chop | Aruppu | அறுப்பு |
| Counter-hit | Ethir adi | எதிர் அடி |
| Crowd-press-swing | Koottam kalaikum veechu | கூட்டம் கலைக்கும் வீச்சு அல்லது படைவீச்சு |
| Cut | Vettu | வெட்டு |
| Defence | Maruppu or kattu | மறுப்பு அல்லது கட்டு |
| Disabling | Pootupodal | பூட்டுப் போடல் |
| Disarm | Nirayuthapani aaku | நிராயுத பாணியாக்கு |
| Disguised flourish | Mayakamuravaikum vega veechu | மயக்கமுறவைக்கும் வேகவீச்சு |

| ஆங்கிலச் சொல் | ஆங்கிலத்தில் தமிழ் சொல்லின் உச்சரிப்பு | தமிழ் சொல் |
|---|---|---|
| Right or left swing | Vala sari or Ida sari. | வலசாரி, அல்லது இடசாரி, |
| Display-swing | Alangara veechu or Alagu veechu | அலங்கார வீச்சு அல்லது அழகு வீச்சு |
| Dog-swing | Nai veechu | நாய் வீச்சு |
| Double-handed-swing | Irukai veechu | இருகை வீச்சு |
| Engaging | Koluvuthal | கொழுவுதல் |
| Feinting | Eamattrum varisai | ஏமாற்றும் வரிசை |
| Foot-work | Kaladi varisai | காலடி வரிசை |
| Four-circle-move: Backward | Naladi bavala: Pinnal | நாலடி பாவலா: பின்னல் |
| Four-circle-move: Forward | Naladi bavala: Munnal | நாலடி பாவலா: முன்னல் |
| Frog-leap | Thavalai paichal | தவளைப் பாய்ச்சல் |
| Front-swing | Mun veechu | முன் வீச்சு |
| Grip | Pidi | பிடி |
| Guarded-move | Pammal | பம்மல் |
| Hawk-sweep | Parunthin veechu | பருந்தின் வீச்சு |
| Head-length | Nethimuttu kambu | நெற்றி முட்டுக் கம்பு |
| Inner-chop | Ul - aruppu | உள் அறுப்பு |
| Inner-cut | Ul - vettu | உள் வெட்டு |
| Lock-hold | Madakkuthal | மடக்குதல் |

| ஆங்கிலச் சொல் | ஆங்கிலத்தில் தமிழ்ச் சொல்லின் உச்சரிப்பு | தமிழ் சொல் |
|---|---|---|
| Low-chop | Keel aruppu | கீழ் அறுப்பு |
| Low-cut | Keel vettu | கீழ் வெட்டு |
| Mid-chop | Nadu aruppu | நடு அறுப்பு |
| Mid-cut | Nadu vettu | நடு வெட்டு |
| Military-swing | Padai veechu | படை வீச்சு |
| Monkey-swing | Kurangu veechu | குரங்கு வீச்சு |
| 'Moving-length' of staff | Kambin adakka neelam | கம்பின் அடக்க நீளம் |
| One-hand-swing | Oru kai veechu | ஒரு கை வீங்சு |
| One-step-move: Backward | Oru adi bavala: Pinnal | ஒருஅடி பாவலா: பின்ஞல் |
| One-step-move: Forward | Oru adi bavala: Munnal | ஒருஅடி பாவலா: முன்ஞல் |
| Outer-chop | Veli - aruppu | வெளி அறுப்பு |
| Outer cut | Veli - vettu | வெளி வெட்டு |
| Overarm-chop | Mel kai aruppu | மேல்கை அறுப்பு |
| Underarm-sweep | Keel kai veechu | கீழ்கை வீச்சு |
| Overhead-swing | Thalai mel veechu | தலைமேல் வீச்சு |
| Parrying | Vilaki aluthuthal | விலகி அழுத்துதல் |
| Pivot jump | Thulludan | துள்ளுடான் |
| Pivot-jump: Backward | Pin thulludan | பின் துள்ளுடான் |
| Pivot-jump: Forward | Mun thulludan | முன் துள்ளுடான் |

| ஆங்கிலச் சொல் | ஆங்கிலத்தில் தமிழ்ச் சொல்லின் உச்சரிப்பு | தமிழ்ச் சொல் |
|---|---|---|
| Pivot-turn-step: Backward | Pinnudan | பின்னுடான் |
| Pivot-turn-step: Forward | Munnudan | முன்னுடான் |
| Power-thrust | Eari kuthu | எறிகுத்து |
| Reversing the staff | Kambin munai mattuthal | கம்பின் முனை மாற்றுதல் |
| Right-hand-end-and-left hand-two-finger grip | Valathu kai munai idathu kai iruviral pidi. | வலதுகை முனை இடதுகை இருவிரல் பிடி |
| Round-the-head-swing | Thalai suttru veechu | தலைசுற்று வீச்சு |
| Screening | Pathukkuthal | பதுக்குதல் |
| Side-shift | Pakkam vilaghal | பக்கம் விலகல் |
| Side-stance | Pakka vaattil nittral | பக்கவாட்டில் நிற்றல் |
| Side-swing | Pakka veechu | பக்கவீச்சு |
| Side-thrust: Simple | Pakka kuthu: Elithu | பக்ககுத்து: எளிது |
| Side-thrust: Power | Pakka ari kuthu | பக்க எறி குத்து |
| Single-handed-swing | Oru kai veechu | ஒரு கை வீச்சு |
| Sliding' of the staff | Kambai uruvividal | கம்பை உருவிவிடல் |
| Snake progression | Aravadi eittram | அரவடி ஏற்றம் |
| Sphere of control | Veedu kattuthal | வீடு கட்டுதல் |
| Staff-work | Kambu sulattuthal | கம்பு சுழற்றுதல் |
| Sweep-hit | Vega veechu adi | வேக வீச்சு அடி |

| ஆங்கிலச் சொல் | ஆங்கிலத்தில் தமிழ் சொல்லின் உச்சரிப்பு | தமிழ் சொல் |
|---|---|---|
| Taking possession of the staff | Kambai parithal | கம்பைப் பறித்தல் |
| Target | Ilakku | இலக்கு |
| Threatening guise | Mirattal | மிரட்டல் |
| Three-circle-move: Backward | Moontru adi bavala: Pinnal | மூன்று அடி பாவலா, பின்னல் |
| Three-circle-move: Forward | Moontru adi bavala: Munnal | மூன்று அடி பாவலா; முன்னல் |
| Thrust: Power | Eri kuthu | எறி குத்து |
| Thrust: Simple | Kuthu: Elithu | குத்து: எளிது |
| Thunder-bolt-strike | Minnal adi | மின்னல் அடி |
| Top-chop | Mel aruppu | மேல் அறுப்பு |
| Top-cut | Mel vettu | மேல் வெட்டு |
| Two-hand-close-grip | Iru kai pakka pidi | இரு கை பக்க பிடி |
| Two-hand-close-grip: Palm open down the staff | Iru kai pakka pidi: ullangai kambin keel virithal | இரு கை பக்கபிடி; உள்ளங் கையை கம்பின் கீழ் விரித்தல் |
| Two-hand-reverse-grip | Irukai mattu pidi | இரு கை மாற்றுப் பிடி |
| Two-hand-reverse-wide grip: Palm opened over the staff | Irukai thoora mattu pidi: Ullangai kambin mel virithal | இருகை தூர மாற்றுப்பிடி: உள்ளங்கை கம்பின்மேல் விரித்தல் |
| Two-hand-swing | Irukai veechu | இரு கை வீச்சு |

| ஆங்கிலச் சொல் | ஆங்கிலத்தில் தமிழ் சொல்லின் உச்சரிப்பு | தமிழ் சொல் |
|---|---|---|
| Two-hand-wide grip | Irukai thoora pidi | இரு கை தூர பிடி |
| Two-step-move: Backward | Iru adi bavala: Pinnal | இரு அடி பாவலா; பின்னல் |
| Two-step-move: Forward | Iru adi bavala: Munnal | இரு அடி பாவலா; முன்னல் |
| Under-arm-chop | Keel kai aruppu | கீழ் கை அறுப்பு |
| Under-arm-sweep | Keel kai vega veechu | கீழ் கை வேக வீச்க. |

# அட்டவணை-4

சிலம்பக் கலை, கல்வி ஸ்தாபன பாடத்திட்டத்தில் சீரிய இடம் பெற வேண்டுமென ஆராய்ந்து வற்புறுத்திய விளையாட்டுக் கல்வித்துறையில் டாக்டர் பட்டம் பெற்ற இந்திய மேதைகளின் முகவரிகள்.

| | | |
|---|---|---|
| 1 | டாக்டர் ராப்சன் மோசஸ், | முதல்வர் அழகப்பா உடற்கல்விக் கல்லூரி, காரைக்குடி–4. |
| 2 | டாக்டர் கோவிந்த ராஜுலு, எல். கே. | பத்திரிகை ஆசிரியர் "VYAYAM" 58, போடிசெட்டித் தெரு, கூடலூர்–2. தமிழ்நாடு. |
| 3 | டாக்டர் குப்தா, பி. எல். | இயக்குனர், உடற் கல்வித் துறை, பஞ்சாப் பல்கலைக்கழகம், சண்டிகார், பஞ்சாப். |
| 4 | டாக்டர் ஹோவர்டு, டபுள்யூ | முன்னாள் முதல்வர், கிறிஸ்தவக்கல்லூரி லக்னோ, உத்திரப் பிரதேசம். |
| 5 | டாக்டர் ஜோசப், பி. எம். | முன்னாள் முதல்வர், லட்சுமிபாய் உடற்கல்விக் கல்லூரி, குவாலியர். மத்தியப் பிரதேசம். |
| 6 | டாக்டர் (திருமதி) ராயப்பா டெய்சி, ஜே | முன்னாள் விரிவுரையாளர் ஒய். எம். சி.எ. உடற்கல்விக் கல்லூரி, நந்தனம், தமிழ்நாடு–35. |
| 7 | டாக்டர் மோகன் எம். எஸ். | முதல்வர், அரசினர் உடற்கல்விக் கல்லூரி, ஹைதராபாத், ஆந்திரப்பிரதேசம் |
| 8 | டாக்டர் பிரசாத் ராம்லக்கன், | முதல்வர், அரசினர் உடற்கல்விக் கல்லூரி, பாட்னா, பீஹார். |

